# ஓஷோ

# அன்பின் இருப்பிடம்

OSHO



# அன்பின் இருப்பிடம்

ஓஷோ

தமிழில்
ஜார்ஜினா பீட்டர் எம்.ஏ.,

கண்ணதாசன் பதிப்பகம்
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
போன் : 24332682, 52077776.

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 71
முதற் பதிப்பு : ஜனவரி, 1997
ஐந்தாம் பதிப்பு : செப்டம்பர், 2004
ஆறாம் பதிப்பு : செப்டம்பர், 2007

E-mail: kannadhasanpathippagam@gmail.com
Our website : www.kannadhasanpathippagam.com

பதிப்பாசிரியர்: **காந்தி கண்ணதாசன்**

**ANBIN IRUPPIDAM** - Tamil

Originally Published under the title "Beyond Enlightement" Chapters 11 to 15 (In English) and under the author name 'OSHO'



**Price Rs. 60/-**

- **"ANBIN IRUPPIDAM"** - Tamil
- Translated by : **Ms. Georgina Peter, M.A.,**
- Co-ordinated by : Dhyan Indu
- Copies : 1500
- Sixth Edition : September, 2007
- Publishing Editor : GANDHI KANNADHASAN
- Published by : KANNADHASAN PATHIPPAGAM
  23, Kannadhasan Salai, T. Nagar, Chennai - 17.
  Ph: 2433 2682, 42077776.

Our Branches

★ No.1, Annai Complex, III Street, Vasantha Nagar,
**Madurai - 625 003.** Ph. 0452 - 2373793
★ No. 37, Bharathy Street, **Puducherry - 605 001.** Ph: 0413-4200143
★ No. 1212, Range Gowder Street,
**Coimbatore - 641 001.** Ph: 0422-2479774
★ Old No 43, New No. 117, Chunnambukara Street,
**Vellore - 632 004.** Ph: 0416 - 2223312

- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17
- Printed at : **PTS Bind Graphics**, Chennai-4

# ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கிழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள் :
"வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்."



# தேடுங்கள்

ஒன்று

# ஒருங்கிசைவு

&

*அன்பிற்குரிய பகவான்,*

*பழம் பழுத்து விடும் போது அது பூமியில் விழுகிறது. ஒரு நாள் நீங்கள் எங்களை விட்டுச் சென்று விடுவீர்கள்; உங்களைப் போன்ற மற்றொரு குருவை உங்களுடைய இடத்தில் பெறுவது என்பது இயலாத காரியம். பகவான், நீங்கள் இந்த பொருளுடலை விட்டுச் செல்லும்போது, உங்கள் தியான முறைகள் இப்போது போலவே எங்கள் உள்ளார்ந்த வளர்ச்சிக்கு உதவுமா?*

ஓஷோ: உங்கள் வளர்ச்சிக்கான எனது வழி, நீங்கள் என்னிடமிருந்து விடுபட்டுச் செல்ல வேண்டும் என்பதுதான்.

எந்தவிதமான சார்ந்து நிற்றலும் அடிமைத்தனம் ஆகும். இதில் மிக மோசமான அடிமைத்தனம் ஆன்மிகஞ்சார்ந்து நிற்றல் தான்.

நான், நீங்கள் உங்கள் தனித் தன்மையை, உங்கள் சுதந்திரத்தை, யாரிடமிருந்தும் எந்த உதவியுமின்றி வளர்வதற்கு உங்களிடமுள்ள முழுமையான செயல் ஆற்றலை நீங்கள் உணர்ந்து கொள்வதற்கான எல்லா முயற்சிகளையும் செய்து வந்துள்ளேன்.

உங்கள் வளர்ச்சி என்பது உங்கள் உயிருருவின் உள்ளே அமைந்த ஒன்று. அது வெளியிலிருந்து வருவதல்ல; அது சுமத்தப்படும் ஒன்று அல்ல; அது ஒரு விரிதல்.

நான் உங்களுக்குக் கொடுத்துள்ள எல்லா தியான முறைகளும் என்மீது சார்ந்தவை அல்ல - எனது முன்னிலையோ

அல்லது இல்லாமையோ எந்த ஒரு வேறுபாட்டையும் ஏற்படுத் தாது - அவை உங்கள் மீது சார்ந்தவை. என்னுடைய முன்னிலை யல்ல. மாறாக உங்களுடைய முன்னிலைதான் அவை வேலை செய்வதற்குத் தேவை.

நான் இங்கு இருப்பது அல்ல; மாறாக நீங்கள் இங்கே இருப்பதுதான் நீங்கள் இங்கே நிகழ்காலத்தில் இருப்பதும், நீங்கள் விழிப்புடனும் தெரிநிலையில் இருப்பதும் தான் இங்கே உதவி செய்யப் போகிறது.

என்னால் உங்களது கேள்வியையும் அதன் தொடர்பையும் புரிந்து கொள்ள முடிகிறது. அது தொடர்பற்ற ஒன்று அல்ல.

மனிதனின் முழுக் கடந்தகாலமும், பல்வேறு வழிகளில், சுரண்டுதலின் ஒரு சரித்திரமாகும். ஆன்மிக மக்கள் என்று அழைக்கப்பட்டவர்களால் கூட சுரண்டலைச் செய்யும் தூண்டு தலை ஏற்க மறுக்க முடியவில்லை. நூறு குருக்களிலே தொண் ணூற்று ஒன்பது குருக்கள், இந்தக் கருத்தை வலியுறுத்த முயற்சி செய்து கொண்டிருந்தனர் - ''நானில்லாமல் உங்களால் வளர முடியாது, எந்த முன்னேற்றமும் சாத்தியமில்லை. உங்களது முழுப் பொறுப்பையும் என்னிடம் கொடுத்து விடுங்கள்.''

ஆனால் உங்களது முழுப் பொறுப்பையும் வேறு ஒருவ ரிடம் நீங்கள் கொடுத்து விடும் தருணத்திலேயோ உங்கள் முழுச் சுதந்திரத்தையும் தெரியாமலோ நீங்கள் கொடுத்து விடுகிறீர்கள்.

மேலும், இயற்கையாக, அந்த எல்லாக் குருக்களும் ஒருநாள் இறந்து போக நேரிட்டது. ஆனால் அவர்கள் மிக நீளமான வரிசையாக அடிமைகளை விட்டுச் சென்றுள்ளார்கள். கிறித்தவர் கள், யூதர்கள், இந்துக்கள், முகமதியர்கள். இந்த மனிதர்கள் யார்? ஏன் ஒருவர் கிறித்துவராக இருக்க வேண்டும்? நீங்கள் யாராகவேனும் இருக்க முடிந்தால், ஒரு கிறித்துவாக இருங்கள், ஒரு போதும் கிறித்தவனாக இருக்காதீர்கள். உங்களை ஒரு கிறித்தவன், இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் இறந்து போன ஒருவரைப் பின்பற்றுபவன் என்று கூறிக் கொள்ளும் போது அதன் அவமானத்திற்கு முற்றிலும் குருடாகவா இருக்கிறீர்கள்? முழு மனித குலமும் இறந்து போனவர்களைப் பின்பற்றிக் கொண்டு உள்ளது.

உயிர் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் செத்துவிட்டவர்களைப் பின்பற்றிக் கொண்டிருப்பதும், உயிர் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் மீது செத்து விட்டவர்கள் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருப்பதும், உயிர் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் செத்து விட்டவர்களையும், ''நாங்கள் உங்களைக் காப்பாற்ற வருவோம்'' என்ற அவர்களது வாக்குறுதிகளையும் சார்ந்து நின்று கொண்டிருப்பதும் விநோதமாக இல்லையா?

அவர்களில் யாரும் உங்களைக் காப்பாற்ற வரவில்லை. உண்மையில் யாரும் பிறர் யாரையும் காப்பாற்ற முடியாது; அது தனித்தன்மை மற்றும் சுதந்திரம் இவற்றின் அடிப்படையான உண்மைக்கு மாறாகச் செல்கின்றது.

என்னைப் பொறுத்தவரையில் நான் உங்களை எல்லாரிடமிருந்தும் - என்னிடமிருந்தும் கூட - விடுவிக்கவும், தேடுகின்ற பாதையில் வெறுமே தனித்து நிற்கவும் செய்ய எல்லா முயற்சிகளையும் செய்து கொண்டு இருக்கிறேன்.

உண்மையைத் தேடும் காரியத்தில் தனியாக நிற்கும் துணிச்சல் கொண்ட நபரை இந்த உயிர் வாழ்தல் மதிக்கிறது. அடிமைகளை உயிர் வாழ்தல் மதிப்பதே இல்லை. அவர்கள் எந்த மரியாதைக்கும் தகுதியானவர்களே இல்லை. அவர்கள் தங்களையே மதிப்பதில்லை. உயிர் வாழ்தல் தங்களை மதிக்க வேண்டும் என்று அவர்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்?

எனவே, நினைவில் கொள்ளுங்கள், நான் சென்று விட்ட பின் நீங்கள் எதையும் இழக்கப் போவதில்லை. ஒருவேளை உங்களுக்கே முழுமையாகத் தெரியாத ஏதோ ஒன்றை நீங்கள் பெற்றுக் கொள்ளக் கூடும்.

இப்போது, ஒரு குறிப்பிட்ட உருவத்திலும் வடிவத்திலும் சிறைப்பட்டு உடல் பெற்ற வகையில் நான் உங்களுக்குக் கிடைத்திருக்கிறேன். நான் சென்ற பிறகு, நான் எங்கே போக முடியும்? இங்கே இந்தக் காற்றில், கடலில் நான் இருப்பேன்; நீங்கள் என் மீது அன்பு செலுத்தியிருந்தால், என்னில் நம்பிக்கை

கொண்டிருந்தால், என்னை ஓராயிரம் வழிகளில் உணர்வீர்கள். உங்களது மௌனமான நேரங்களில் சட்டென்று என்து முன்னிலையை உணர்வீர்கள்.

நான் எனது உடலை இழந்து விட்ட பிறகு, எனது உணர்வு நிலை பிரபஞ்சத்தினுடையது ஆகிவிடும்.

இப்போது நீங்கள் என்னிடம் வரவேண்டியுள்ளது.

பின்னர், நீங்கள் என்னைத் தேடவோ, நாடவோ தேவையிருக்காது. நீங்கள் எங்கே இருந்தாலும், உங்கள் தாகம், அன்பு... என்னை நீங்கள் உங்கள் இதயத்திலே, இதயத் துடிப்பிலே என்னைக் கண்டறிவீர்கள்.

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் தனிமையில் கடைத் தெருவில் இருக்கும்பொழுது நான் மிகவும் யந்திரத்தனமாக, எனது செயல்பாடுகளை உணராமல் இருப்பது போல உணர்ந்தேன். இப்போது, உங்கள் முன்னிலையில் இருக்கும் பொழுது, எனக்குள் சென்று பார்க்கும் பொழுது, எனது உடல், மன வேகம் மிகவும் குறைந்து வருகிறது. தன்னுணர்வு அதிகரித்து வருகிறது. இந்த தன்னுணர்வு கொண்ட நிலை மிகவும் லேசாக உணர்கிறது. இதிலேயே மேலும் மேலும் தங்க வேண்டும் என்ற விருப்பம் எழுகிறது. நான் உங்களைப் பார்க்கும் போது, வெகு தொலைவில் சுட்டிக்காட்டும் ஒரு எழிலை நான் பார்க்கிறேன்.*

*பகவான், சீடனின் தன்னுணர்வு பற்றியும், குருவின் அருளைப் பற்றியும் தாங்கள் பேச முடியுமா?*

**ஓஷோ:** நீ ஒரு முக்கியமான விஷயத்தை உணர்ந்துகொள்ளத் துவங்கியிருப்பது மிகவும் நல்லது, அதாவது, கடைத்தெருவில் நீ யந்திரத் தனமாக, ஒரு ரோபோவைப் போல இருக்கிறாய் என்று.

இங்கு வந்த பின்பு நீ மேலும் ஒய்வாக உணர்கிறாய்.

மனதின் வேகம் மெதுவாக, மிக மெதுவாகக் குறைந்து வருகிறது. மேலும் உனது தெரிநிலை தெளிவடையும்போது, உன்து யந்திரத்தனம் மறைந்து விடுகிறது. யந்திரத்தனமும் தெரிநிலையும் ஒருங்கே இருக்க முடியாது என்பதை நீ கண்டு கொள்ள வேண்டும். இந்த இரண்டு தன்மைகளும் ஒன்றாக இருக்க முடியவே முடியாது.

கடைத்தெருவில் நீ தெரிநிலையுடன் இருக்க வேண்டும் என்று யாரும் எதிர்பார்ப்பதில்லை. அங்கே நீ திறமையுடன் இருந்தாக வேண்டும். திறமை என்பது யந்திரங்களின் தன்மை. யந்திரங்கள் மனிதர்களை விடத் திறமை வாய்ந்தவை. திறமை தேவைப்படுவதால், நீ மேலும் அதிகமாக யந்திரத்தனத்துடன் இருக்கிறாய். இவ்வாறு மேலும் யந்திரத்தன்மையுடன் இருக்கும் போது உனது தெரிநிலை மறைந்து விடுகிறது.

ஆனால், தெரிநிலைதான் உனது உண்மையான உயிருரு.

திறமை மற்றும் யந்திரத்தனத்தின் மூலம் நீ அதிகப் பணம் சம்பாதிப்பதிலும், அதிக சக்தி, அதிக மதிப்பு, மரியாதை இவற்றைப் பெறுவதிலும் வெற்றி கொள்ளலாம். ஆனால், நீ உன்னையே இழந்து விடுவாய். மேலும் உன்னையே நீ வெகு மலிவாக இழந்து விடுகிறாய், பதிலுக்கு உனக்குக் கிடைப்பது மதிப்பறிவு ஒன்றுதான்.

உனக்கு முன்னால் இந்தப் பூமியில் எத்தனைபேர் வாழ்ந் துள்ளார்கள் தெரியுமா? அவர்களில் கோடிக்கணக்கான பேர் வெற்றிகரமானவர்கள் என்பதை நீ உணர்கிறாயா? தமது காலகட் டத்தில் கோடிக்கணக்கான பேர் பிரபலமாக இருந்துள்ளனர். இன்று இவர்களின் பெயர்களைக் கூட யாரும் நினைவில் வைத்துக் கொள்ளவில்லை. அவர்கள் கனவுகளைப் போல மறைந்து விட்டார்கள்; எந்த ஒரு அடையாளத்தையும் விட்டுச் செல்லவில்லை.

நாமும் அதே போலத்தான் மறைந்து போகப் போகிறோம். இறந்த பின்பும் மக்களின் அன்பில், நம்பிக்கையில் தொடர்ந்து

வாழ்ந்து கொண்டிருக்கும் வெகுசிலர் வெற்றிகரமான மனிதர்கள் அல்ல - பேரரசர்கள், உலகை வெற்றி கொண்டவர்கள், பணக்காரர்கள் இவர்கள் அல்ல. இந்த வெகுசில மனிதர்கள் இறந்த பின்பும் மனிதர்களின் இதயத் துடிப்போடு ஒன்றி விடுவார்கள். முற்றிலும் வேறு வகையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தெரிநிலையைக் கொண்டவர்கள், ஆத்மாவைக் கொண டவர்கள். இவர்களது பாதிப்பு மிக ஆழமானது. அது கடைசி மனிதன் வாழும் வரையிலும் அவனோட நிலைத்திருக்கும்.

கௌதம புத்தர், லாவோட்சு, கபீர், கிறிஸ்து, அல்ஹிலாஜ் மன்சூர் - இந்த மனிதர்களை மறந்துவிட முடியாது.

இவர்கள் உங்களது உயிருருவின் மிக ஆழமான பாகங் களில் தொடர்ந்து வாழ்வார்கள். ஏனெனில் இவர்கள் கடைத் தெருவின் எதிர்பார்ப்புகளுக்காக, தமது தெரிநிலையை ஒரு போதும் விட்டுக் கொடுத்ததில்லை.

எனவே முதலாவதாக - நீ தெரிநிலையை அடைந்துள்ளாய். உனது தெரிநிலையை மேலும் கூர்மையானதாக்கு. அடுத்த முறை கடைத்தெருவுக்குப் போகும் போது ரோபோவைப் போல் ஆகத் தேவையில்லை. ஒரு வேளை நீ ரோபோவைப் போலத் திறமையுடன் இல்லாமல் இருக்கலாம். அதனால் என்ன? ஒருவேளை நீ யந்திரத்தனமாக உள்ள்வர்களைப் போல வெற்றிகரமாக இல்லாமல் இருக்கலாம். அதனால் என்ன? அவர்கள் தமது வெற்றிகளைக் கொண்டிருக்கட்டும். அவர்கள் சோப்பு நுரையைப் போல மறைந்து போவார்கள். அவர்களைப் பற்றி பொறாமைப்படாதே. அவர்களிடம் இரக்கத்துடன் இரு. உனது தெரிநிலையைப் பற்றி திருப்தியுடன் இரு.

தெரிநிலைக்காக எல்லாவற்றையும் இழக்கத் தயாராக இரு. ஆனால் எதற்காகவும் தெரிநிலையை இழக்காதே. இதுதான் ஒரு சன்யாசியின் உறுதிப்பாடு. அவன் தனது உயிரைக் கூட இழக்கத் தயாராக இருப்பான். அனால் தனது தெரிநிலையை அல்ல. அவன் வாழ்வைவிட மதிப்பு மிக்க ஒன்றைக் கண்டு

கொண்டுள்ளான். தெரிநிலையை விட மதிப்பு மிக்கது வேறு எதுவும் இல்லை.

தெரிநிலை என்பது உனக்குள் இருக்கும் தெய்விகத்தின் விதை.

அது முழு வளர்ச்சி அடையும் பொழுது உனது விதியின் முழுமையை நீ எட்டியுள்ளாய்.

உனது தெரிநிலை ஆழமாகும் பொழுது உனது செயல்பாடு கள் திறமையானதாக இல்லாமல் இருக்கலாம்; ஆனால் அவை ஒரு புதிய தன்மையைப் பெற்றிருக்கும் - அருளின் நளினத் தைப் பெற்றிருக்கும். இது மிகவும் உயர்ந்த மதிப்புடையதாகும். எந்த ஒரு யந்திரமும், நளினம் என்ற தன்மையைப் பெற்றிருக்க முடியாது. உனது செயல்பாடுகள், வார்த்தைகள் தமக்கே உரிய ஒரு எழிலைப் பெற்றிருக்கும்.

தெரிநிலையுடைய ஒரு மனிதன் வாழும் வகையில், ஒவ் வொரு தருணமும் நளினம் மற்றும் அழகால் நிறைந்திருக்கும். அவனுடைய செயல்பாடுகளில், மிகச் சிறிய செயல்பாட்டில் கூட, அவனது கரத்தின் அசைவில், அல்லது பார்க்கும் பார்வை யில், அவனது' விழிகளின் ஆழத்தில், அல்லது அவனது வார்த்தைகளின் கம்பீரத்தில், அல்லது அவனது மௌனத்தின் இசையில் - அது 'பிரதிபலிக்க அவனது முன்னிலையே ஒரு விழாவாக அமையும்.

இத்தகைய ஒரு மனிதனோடு ஒப்பிடும் போது பேரரசர் களும் பிச்சைக்காரர்கள் ஆகிறார்கள். உலகில் அவர்களுக்கு எல்லாம் உள்ளது. ஆனால் உள்ளே அவர்கள் வெறுமையாக இருக்கிறார்கள்.

கோவில் தங்கத்தால் ஆனதாக இருக்கலாம். ஆனால் உள்ளே, கோவிலின் இறைவன் காணாமற் போய்விடுகிறான்.

சீடன் ஒவ்வொரு தினமும் மேலும் மேலும் நளினத்து டன், மேலும் மேலும் விழிப்புணர்வுடன் ஆகிறான். இத்தகைய

தன்மைகளுடன், குருவின் பால் ஒரு ஆழ்ந்த நன்றியுணர்வு ஒரு அவசியமான வெளிப்பாடாகிறது.

இதை நீங்கள் செய்தாக வேண்டும் என்பதில்லை. அதைத் தெரிந்து செய்தால் அது போலியானது. அது தானாகவே வந்தால், அதில் உண்மை இருக்கிறது.

மேலும உங்கள் நன்றியுணர்வு வளர வளர, நீங்கள் மேலும் அணுகுவதற்கு வெளிப்படையாக ஆகிறீர்கள். குரு தனது முழு உயிருருவையும் எல்லா ஆசீர்களையும், வாழ்த்துக்களையும் உங்களுக்குள் இட முடியும்.

*அன்பிற்குரிய பகவான்,*

*உங்களுக்கு உங்கள் ஆசனத்தில் ஒரு பிரமாதமான, நம்ப முடியாத ஒரு நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருப்பதை என்னால் உணர முடிகிறது. மேலும் பல ஆண்டுகளாகவே, மிக அதிகமாக இங்கே எனக்குள்ளும் பிரமாதமான ஒன்று நிகழ்வதை என்னால் உணர முடிகிறது. என்னைப் பொறுத்தவரையில், இது ஞானம் அல்ல. எனக்கு அது தெரியும். ஆனால் இது உங்களுடன் ஒரு இணைந்து போதல் போல் இருக்கிறது.*

*பகவான், மனதின் புகை மூட்டத்திற்குள் நுழைந்து இந்த மிக அரிய அழகிய வரப்பிரசாதம் போன்ற உணர்வை வெளிக் கொண்டு வந்து அதை வளரச் செய்வது எப்படி என்று எனக்கு ஏதாவது சொல்ல முடியுமா?*

**ஓஷோ:** இணக்கத்தின் தன்மை மிக மிக அற்புதமான மர்மமான அனுபவங்களில் ஒன்றாகும்.

அதாவது, இரண்டு உடல்கள் தனித்தனியே இருந்து கொண்டிருக்கும். ஆனால் அவற்றின் ஆத்மாக்கள் இரண்டாக இருப்பதில்லை.

இரண்டு உடல்களில் ஒரு ஆத்மா.

இணக்கம் என்பதன் மிகச் சரியான பொருள் அதுதான்.

அது ஒரு மிக அற்புதமான அனுபவம்.

சாதாரணமாக நாம் முரண்பாட்டில், இணக்கமில்லாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

கணவன், மனைவியுடன் முரண்பாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அதை ஒன்றாக வாழ்தல் என்று கூறுகிறார்கள். ஆனால் இந்த ஒருமைப்பாடு எழும் வரையில், அவர்கள் ஒன்றாக வாழ்வது என்பது பூமிக்கடியில் முரண்பாடுகளுடன் வாழ்வதாகத்தான் ஆகும். இது எந்த ஒரு அர்த்தமற்ற சிறிய காரணத்துக்காகவும் வெளியே வெடித்து எழும். இருவரும் எரிமலைகளின் மேல் அமர்ந்து கொண்டு இருக்கிறார்கள்.

பெற்றோர் தமக்கும் தமது பிள்ளைகளுக்கும் இடையே தலைமுறைப் பிளவை உணர்கிறார்கள். புரிதலுக்கு ஒரு பொதுவான மேடை அங்கே இல்லை. இணக்கம் என்பது ஒரு தொலைவான நோக்கமாக உள்ளது. அவர்கள் ஒருவர் மற்றவரின் மொழியைக் கூடப் புரிந்து கொள்வதில்லை. அவர்கள் வேறு மொழி பேசுகிறார்கள் என்பதல்ல, அவர்களது கண்ணோட்டங்கள் வேறுபட்டுள்ளன; அவர்கள் வாழ்க்கையைப் பார்க்கும் பார்வை வேறுபட்டுள்ளது. இதில் எந்த ஒரு முடிவுக்கும் வர முடியாமல் இருக்கிறது.

பெற்றோரும் பிள்ளைகளும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்வது கூட இல்லை; ஏனெனில் அவர்கள் பேசிக் கொள்ளும் போதெல்லாம் அது சண்டையில் போய் முடிகிறது.

கணவர்களுக்கும் மனைவிகளுக்கும் இடையே இதேதான் நடக்கிறது. அவர்கள் திருமணமான புதிதில், சரசங்கள் சூடாக உள்ளன. அவர்கள் சண்டையிட்டுக் கொள்கிறார்கள். மனைவிகள் சாமான்களைத் தூக்கியெறிகிறார்கள். தட்டுகள், கோப்பைகள், குவளை, தலையணைகள் இவற்றை உடைக்கிறார்கள். கணவர்களும் இதேபோல நடந்து கொள்கின்றனர். இவள் இல்லாமலே வாழ முடியாது என்று எண்ணிய அதே பெண்ணைப் போட்டு அடிக்கிறார்கள். அடிப்பது மட்டுமல்ல, பல

சமயங்களில் அவளைக் கொல்வது போலவும் அல்லது, அவள் தங்களைக் கொல்லுவது போலவும் கற்பனை செய்து கொள்கி றார்கள். இதில் யார் சண்டையை முதலில் துவக்குவது என்பது தான் கேள்வி. இது ஒரு குளிர்ந்த யுத்தம்.

மிக மிக மெதுவாக, விஷயங்கள் குளிர்ச்சி யடைக்கின்றன. தலையணைச் சண்டைகளோ, பாத்திரங்களைப் போட்டு உடைப்பதோ இதற்குமேல் கிடையாது. ஆனால் அதற்காக அவர்கள் இணக்கமான நிலையை அடைந்து விட்டார்கள் என்று ஆகாது. மாறாக, அதன் முட்டாள்தனத்தை அவர்கள் உணர்ந்து கொண்டு விட்டார்கள் என்பதே சரி. அமைதியாக இருப்பது மேலானது. கணவன் தொடர்ந்து அதே செய்தித் தாளைப் படித்துக் கொண்டிருப்பான். ஞாயிற்றுக் கிழமைகளில் நிலைமை சற்றே மோசமாகும். அவர்கள் ஒருவரையொருவர் தவிர்க்கின்ற னர்; தனிமையில் ஒன்றாக விடப்படுவதை விரும்புவதில்லை.

எனது பணக்கார நண்பர் ஒருவர் தாம் ஐம்பது வயதை எட்டியபொழுது என்னிடம் சொன்னார்: ''எனக்குப் போதுமான பணம் உள்ளது. எனக்குத் திருமணமான இரண்டு பெண்கள் உள்ளனர். இப்போது நிலைமை மிகவும் கஷ்டமானதாகி விட்டது. ஏனென்றால் வீட்டில் இப்போது நானும் எனது மனைவியும் மட்டுமே இருக்கின்றோம்.''

''நான் கூறினேன்: ''நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க வேண் டுமே, இது ஒரு காதல் திருமணம் என்று நான் நினைத்தேனே!''

''நான் இப்போது 'காதல்' என்ற வார்த்தையையே பயன் படுத்துவதில்லை. அந்த வார்த்தைதான் எனது வாழ்க்கையையே நாசம் செய்து விட்டது. எனது மனைவிக்காக மட்டுமே நான் இந்த தொழில் மற்றும் தொழிற்சாலைகளை நடத்தி வருகிறேன். அதன் மூலம் அவளைத் தவிர்க்க முடிகிறது. இல்லா விட்டால் இதற்குத் தேவையே இல்லை.''

''அப்படியென்றால் ஒரு அழகான மலை வாசஸ்தலத்தைக் கண்டுபிடித்து அங்கே குடியேறி அமைதியாக வாழுங்களேன்'' என்றேன் நான்.

“ஆனால் மலை வாசஸ்தலத்தில் இந்தப் பெண்மணியோடு தனியாகவா? கொலை விழும்!”

“என்ன பேசுகிறீர்கள்? யார் யாரைக் கொலை செய்வார்கள்?”

“அதை யார் முதலில் செய்யப் போகிறார்கள் என்பதைப் பொறுத்தது தான் அது. இந்தப் பெண்மணியோடு - தனியாகவா? முடியாது. ஒருவேளை நீங்கள் எங்களோடு தங்குவதாக இருந்தால் நான் பாதுகாப்பாக உணர்வேன்; எந்த மலைவாசஸ்தலத்துக்காகவாது போகலாம். ஒரு நண்பன் இல்லாமல் நாங்கள் ஒரு படத்துக்குக் கூடப் போவதில்லை. நண்பர் எங்கள் இருவருக்கும் இடையில் உட்கார வேண்டும். இல்லாவிட்டால் ஏதாவது ஆகிவிடும். எதுவும் போதும் சண்டையைக் கிளப்பிவிட!” என்றார் நண்பர்.

“நீங்கள் சண்டையிட்டு நான் பார்த்ததில்லையே!” என்றேன் நான்.

“அது உண்மைதான். பல வருடங்களாக எல்லாமே பூமிக்கடியில் போய்விட்டது. ஆனால் நாங்கள் சண்டையிட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். எனக்குள்ளே நான் அவளை அடித்துக் கொண்டு இருக்கிறேன். அவளுக்குள்ளே, அவள் என்னை அடித்துக் கொண்டு இருக்கிறாள். ஆனால் அதை வெளிக்காட்டுவதில்லை. மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? வேலைக்காரர்கள் என்ன நினைப்பார்கள்?”

அவர்கள் இருவரும் ஒரே அறையில் உறங்குவதில்லை. நான் மனைவியை இது ஏன் என்று கேட்டேன். “அது ஒன்றும் பெரிய பிரச்சனை அல்ல. அவர் குறட்டை விடுவதால்தான்” என்றாள் அவள்.

“நான் அவருடன் ஒரே அறையில் பலமுறை படுத்து உறங்கியிருக்கிறேன். அவர் குறட்டை விட்டு நான் கேட்டதில்லையே!” என்றேன் நான்.

எனது நண்பரைக் கேட்டேன். "என்ன விஷயம்?. நீங்கள் குறட்டை விடுவதாக உங்கள் மனைவி கூறுகிறாள்!"

"ஆம். நான் குறட்டை விடுகிறேன். இது அவளை அந்த அறையிலேயே வைப்பதற்காகத்தான். நான் உறக்கத்தில் ஒரு போதும் குறட்டை விடுவதில்லை. அதனால்தான் நீங்கள் அதைக் கேட்டதில்லை. நான் குறட்டை விடுவதற்காக முயற்சி செய்ய வேண்டி உள்ளது. இது மிகவும் கடினமான ஒரு கலை. இதை ஒருவர் கற்றுக் கொள்ள வேண்டும். இது அவளுக்கு ஒரு நொண்டிச் சாக்கைக் கொடுப்பதற்காகத்தான். அவள் அடுத்த அறையில் உறங்க விரும்பினாள். அதற்கு ஒரு சாக்குத் தேவைப் பட்டது. இங்கே இருப்பது மிகவும் அமைதியாக உள்ளது. அவள் அங்கே இருக்கிறாள். நான் எனது கதவை உட்புறம் தாழிட்டுக் கொள்கிறேன். ஏனெனில் அவள் நடு இரவில் உள்ளே வரக் கூடும். அவளுக்கு ஏதாவது தோன்றி, ஒரு சண்டை தொடங்கி விடும்."

மனிதர்கள் இணக்கத்துடன் வாழ்வதில்லை. இணக்கம் என்பது ஒரு வெற்று வார்த்தை. துரதிருஷ்டவசமாக, பெரும் பாலான மனிதர்களுக்கு அது இல்லாமலே இருந்து வருகிறது. அவர்களுக்கு சண்டையும் கோபமுமே மட்டும் தெரியும்.

இணக்கம் என்பது நீங்கள் உங்கள் 'தான்' என்பதை விட்டு விடுகிறீர்கள் என்பதாகும். "நான் உன்னுடன் மிக ஆழமாக ஒன்றாக இருக்க விரும்புகிறேன். இங்கு 'நான்' என்ற கருத்து இனிமேல் தேவையில்லை" என்று நீங்கள் கூறுகிறீர்கள்.

ஒரு சில மனிதர்கள் இணக்கத்துடன் வாழ்ந்திருக்கிறார்கள். குறிப்பாக, குருவும் சீடரும் இணக்கமில்லாமல் எந்த ஒரு உறவையும் கொள்ள முடியாது. குருவிற்கு 'தான்' என்பது கிடையாது. சீடனும் தான் என்பதை உதறி விட வேண்டும். இரண்டு உணர் நிலைகளும் ஒன்றாகின்றன; ஒரு மகத்தான இசை துடிக்கத் தொடங்குகிறது. இரண்டு நபர்களிலும் ஒரே இசை.

இது பிற உறவுகளிலும் நிகழ்ந்துள்ளது. ஆனால் வெகு அபூர்வமாக. ஒரு விநோதமான சம்ஸ்கிருதப் புத்தகம் என் நினைவுக்கு வருகிறது. அதன் பெயர் பாமிதி. இது ஒரு விநோதமான பெயர். ஏனெனில் இது ஒரு தத்துவ ரீதியான புத்தகமான பத்ரபனின் பிரும்ம சூத்திரங்கள் என்பதன் விளக்க உரையாகும்.

பத்ரபன் உலகின் தலைசிறந்த தத்துவ ஞானிகளுள் ஒருவ ராக இருக்கக் கூடும். இவர் பிரும்ம சூத்திரங்கள் என்ற சிறிய கோட்பாட்டை எழுதியுள்ளார். இது முடிவற்றதைப் பற்றிய கோட்பாடு ஆகும்.

உலகில் வேறு எந்தப் புத்தகத்தைப் பற்றியும் இத்தனை விளக்கவுரைகள் எழுதப்பட்டதில்லை. ஆயிரக்கணக்கான விளக் கவுரைகள்... ஏனெனில் இந்தக் கோட்பாடுகள் மிகச் சிறியவை; சுருக்கமானவை. இவற்றை யாராவது திறந்து, விளக்கிப் பொருள் சொன்னால் ஒழிய உங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியாது.

பிரும்ம சூத்திரம் ஒரு விநோதமான புத்தகம். பத்ரபனின் பிரும்ம சூத்திரத்திற்கு நேர்ந்த கதி வேறு எந்தப் புத்தகத்துக்கும் நேர்ந்ததில்லை. விளக்கவுரைகள் எழுதப்பட்டன. ஆனால் இந்த விளக்கவுரைகளைப் புரிந்து கொள்வதும் கடினமாயிருந்தது. எனவே, விளக்கவுரைகளுக்கு விளக்கவுரைகள் எழுதப்பட்டன. எனினும் இவைகூட மிக எளிதாக இருக்கவில்லை. எனவே, விளக்கவுரைகளில் அந்த விளக்கவுரைகளுக்கு மேலும் விளக்கவு ரைகள்...

வரிசையாக விளக்கவுரைகள் கொண்டிருப்பதை இந்த ஒரு புத்தகத்தில் தான் காண முடியும். ஆனால், இதன் மூலம் காணாமற் போய் விட்டது. இந்தியாவில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, மக்கள் விளக்கவுரைகளுக்கு விளக்கவுரைகள் எழுதுவதன் மூலம் அதன் அர்த்தத்தை மக்களுக்குக் கொண்டு செல்ல முயன்று கொண்டிருக்கிறார்கள்.

இவற்றில் ஒரு விளக்கவுரை, மிகச் சிறந்த விளக்கவுரைகளில் ஒன்று பாமிதி. பாமிதி என்ற பெயர் ஒரு விளக்கவுரைக்குத் தரப்பட்டிருப்பது வினோதமே. பாமிதி ஒரு குறிப்பிட்ட பெண்ணின் பெயர். இதை விளக்கவுரைக்குத் தருவது என்பது...

இந்த விளக்கவுரை வாசஸ்பதி என்ற தலைசிறந்த தத்துவ ஞானியால் எழுதப்பட்டது. அவரது மனைவியின் பெயர் பாமிதி. இதை எழுத அவருக்கு பன்னிரண்டு ஆண்டுகள் எடுத்தது. இதை எழுதி முடித்தவுடன் அவர் உலகைத் துறந்து இமயமலைக்குச் செல்ல முடிவு செய்திருந்தார்.

ஒரு நாள், நடு இரவில் விளக்கவுரை முடிவுற்றது. அவர் விளக்கை எடுத்துக் கொண்டு தனது அறைக்குச் செல்ல யத்தனித்தார். வழியில் ஒரு பெண்ணைக் கண்டு, "நீ யார்? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

அவள் கூறினாள்: "ஐயா, நீங்கள் இங்க விளக்கவுரை எழுதுவதில் மிகவும் ஆழ்ந்து விட்டீர்கள். என்னை மணம் செய்து கொண்டிருப்பதை முற்றிலும் மறந்து விட்டீர்கள். நான் உங்கள் மனைவி."

"எனக்கு நினைவிருக்கிறது. மேலும், தினமும்... எங்கே, உன் கையைக் காட்டு. என்னால் அதைத் தெரிந்து கொள்ள முடியும். ஒவ்வொரு நாளும் சூரியன் மறையும் போது நீதான் விளக்கை என்னருகில் கொண்டு வந்து வைத்தவள். எனக்கு இந்தக் கையைத் தெரியும். ஆனால் இப்போது மிகவும் தாமதமாகி விட்டது. விளக்கவுரை முடிந்தவுடன் இந்த வீட்டை விட்டு வெளியேறுவது என்று நான் முடிவு செய்து விட்டேன். நீ எனக்கு ஞாபகமூட்டி இருக்க வேண்டும்."

"உங்களைத் தொந்தரவு செய்வது ஒரு அன்பற்ற செயலாக இருக்கும். நான் காத்திருந்தேன். ஆனால் இதற்காக கவலைப் படாதீர்கள். நீங்கள் போவது என்று முடிவு செய்திருந்தால், கவலை ஏதுமின்றிச் செல்லுங்கள். உங்கள் முடிவுக்கு இடையூறாக நான் வரமாட்டேன். நீங்கள் எனக்காகக் கவலைப்படுவது

மட்டுமே எனக்குப் போதும். நீங்கள் எனக்காக ஒரு குறிப்பிட்ட அன்பு கொண்டிருந்தீர்கள் என்பதே எனது வாழ்நாள் முழுமைக் கும் போதும்'' என்றாள் பாமிதி.

வாசஸ்பதி கூறினார், ''நீ ஒரு மகத்தான பெண். இத்தகைய பெண்ணைக் காண்பது மிக அரிது. என்னைப் போல விளக்க வுரை எழுதுபவர்கள் பலர் இருக்கலாம். ஆனால் உன்னைப் போன்ற குணாம்சம் கொண்ட பெண் - இத்தகைய அன்பு, நம்பிக்கை, காத்திருத்தல், இத்தகைய - பொறுமை - உனது இதயம் மகத்தானது. எதிர்பார்ப்புகள் ஏதும் இன்றி, தாமதமா கிறதே என்ற கவலை மட்டுமே கொண்டிருப்பது அரிது. நான் எனது விளக்கவுரையை பாமிதி என்று அழைப்பேன்; இதைப் படிப்பவர் எவராயிருந்தாலும் இந்தப் பெண்ணைப் பார்த்து நிச்சயம் வியப்படைவார்கள். ஏனெனில் பிரம்ம சூத்திரத்தின் விளக்கத்திற்கும் இந்தப் பெயருக்கும் தொடர்பேயில்லை. பாமதி!

''ஆனால் நீயில்லாமல் உனது அன்பு, பொறுமை, அமைதி யான காத்திருத்தல் இல்லாமல் இதை என்னால் எழுதி யிருக்க முடியாது. நீ என் முன்னால் வரவேயில்லை. நீ மிக அழகாக இருக்கிறாய். நீ என் முன்னால் வந்திருந்தால் 'நிச்சயம் அது ஒரு தடங்கலாகத்தான் இருந்திருக்கும். நான் விளக்கவுரை எழுத மறந்து போயிருக்கலாம். உன்னோடு இருக்க வேண்டும் என்ப தற்காக அதை எழுதுவதை தாமதப்படுத்தியிருக்கலாம்.

ஆனால் பாமிதி கூறினாள்: ''நான் எனக்குத் சேரவேண்டி யதை விட அதிகம் பெற்றுக் கொண்டேன். நீங்கள் இந்த வீட்டில் இதற்கு மேல் நிற்கக் கூடாது. தனது முடிவை செயல்படுத்திய ஒரு கணவனைப் பெற்றேன் என்ற பெருமை எனக்குக் கிடைக்கட்டும். இப்போது கூட நீங்கள் தயங்குவதை என்னால் காண முடிகிறது. தயங்காதீர்கள். நான் உங்களை இந்த வீட்டில் தங்க அனுமதிக்க மாட்டேன். நீங்கள் இமயமலைக்குச் சென்றாக வேண்டும். ஏனெனில் நீங்கள் இந்த வீட்டில் தங்கினால், பழைய மரியாதையை நான் உங்களுக்குத் தர முடியாது.''

இது ஒரு மகத்தான, நம்ப முடியாத கதை.

வாசஸ்பதி இமயமலைக்குச் சென்றார். ஆனால் அவரால் பாமிதியை மறக்க முடியவில்லை. அத்தகைய குணாம்சம், நளினம், அழகு. இது மனித குணாம்சங்களுக்கு அப்பாற்பட்டது. இத்தகைய மனிதர்கள்தான் மனித குணாம்சங்களுக்கு அப்பாற்பட்ட தெய்விக குணங்கள் உள்ளன என்பதை நிருபித்துள்ளார்கள்.

வாசஸ்பதி ஒரு தலைசிறந்த அறிஞர். ஆனால் பாமிதி அதைவிட மேலான தெய்விக குணம் கொண்டவளாக இருப்பதை நிருபித்து விட்டாள்.

இவ்வாறு, எப்போதாவது ஒரு முறை, பிற உறவுகளில், ஒருவரோடு ஒருவர் இணக்கத்தை உணர்ந்த மனிதர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் அது மிகவும் அபூர்வமானது. விபத்துப் போன்றது. எப்போதாவது விதிவிலக்காகத் தோன்றுவது.

ஆனால் குரு சீடன் உறவைப் பொறுத்த வரையில் இது ஒரு அடிப்படைத் தேவை. இது இல்லாமல், உறவே இல்லை.

ஒரு இசைவான ஒருமை, உனது தான் என்ற நிலையை அழித்து விடக்கூடிய ஒரு ஆழமான அன்பு. இந்த உறவில் இரண்டு நபர்கள் இல்லை, ஒரு இணக்கமான முழுமை, சக்திமயமான ஒரு தன்னை மட்டுமே உள்ளது.

இதை ஒரு குருவுடன் ஒருமுறை அனுபவித்து விட்டால், இதை உனது பிற உறவுகளிலும் நீ அனுபவிக்கலாம். ஏனெனில் இதன் அடிப்படைக் கோட்பாடு ஒன்றுதான். இதை உனது எல்லா உறவுகளிலும் உன்னால் உணர முடிந்தால், உனது வாழ்க்கை உண்மையிலேயே ஒரு தெய்விக வரப்பிரசாதமாக, ஒரு இசைக்குழுவாக அமைந்து விடும்.

அப்போது குரு சீடன் உறவு ஒரு கலையைக் கற்பது போன்றதே. இதை நீங்கள் உங்கள் மனைவியுடன், கணவனுடன், பிள்ளைகளுடன், பெற்றோருடன், நண்பர்களுடன் பயன்

படுத்தலாம். இதை உலகம் முழுவதும் பரப்பலாம். இதை மரங்களுடன், விண்மீன்களுடன் உணரலாம். இது அந்தத் திறமையை தெரிந்து கொள்வது மட்டுமே.

இதன் ரகசியம், எவ்வாறு இருப்பது என்பது அல்ல; எவ்வாறு 'தான்' என்பதாக மறைந்து போவது என்பது தான்.

அப்போது நீங்கள் தொடுவதெல்லாம் இசையை உண்டு பண்ணுகிறது; தொடுவதெல்லாம் தங்கமாகிறது.

*அன்பிற்குரிய 'பகவான்,*

*சென்ற வருடம் நவம்பர் மாதம் ரஜனீஷ்புரத்தை விட்டுச் சென்ற பின்னர், நான் என்ன செய்யப் போகிறேன் என்பதைக் கண்டுபிடிப்பது கிட்டத்தட்ட இயலாத காரியமாக எனக்கு ஆகிவிட்டது. தொடக்கத்தில் அது மிகவும் அச்சமூட்டுவதாக இருந்தது. ஆனால் வெகு விரைவில், சும்மா காத்திருப்பது மட்டுமே போதுமானது என்பதை நான் அதிகமாகக் கண்டு கொண்டேன். மேலும் அழகான விஷயங்கள் எனக்கு நடை பெறத் தொடங்கின; இதற்காக நான் எந்த முயற்சியும் செய்ய வில்லை.*

*உங்களுடன் இருப்பது என்பது இப்படித்தான் இருக்குமா?*

ஓஷோ: என்னைச் சுற்றிலும் விஷயங்கள் நடைபெறுவது இவ்வாறு என்பது மட்டும் அல்ல. இதுதான் முழு உயிர்வாழ்த லின் முறையும் கூட.

நீங்கள் சும்மா காத்திருங்கள், எல்லாமே சரியான சமயத்தில் நடக்கும். காத்திருங்கள்; பார்த்திருங்கள். தூங்கி விடாதீர்கள் - ஏனெனில் காத்திருந்தலின் போது தூங்கி விடுவது மிக இயல் பான செயல். எதுவும் செய்வதற்கில்லை, தூங்கி விடுகிறோம். அப்போது விஷயங்கள் நடந்து கொண்டிருக்கும். ஆனால் நமக்குத் தெரியாது; எனவே காத்திருங்கள், கவனித்துக் கொண் டிருங்கள்.

வாழ்க்கை என்பது நல்லது செய்வதாகச் சொல்லிக் கொள்ப வர்களால் கலைக்கப் பட்டு வந்துள்ளது. இவர்கள் தொடர்ந்து

உலகெங்கிலும் பிரசங்கம் செய்து கொண்டு இருக்கிறார்கள். ''இதைச் செய், அதைச் செய், ஏழைகளுக்கு உதவி செய்'' என்றெல்லாம்! எதையாவது செய்வது என்பது மிக உயர்வாக மதிப்பிடப்பட்டு வந்துள்ளது. இதனால் நாம் சும்மா காத்திருக்கும் கலையை முழுவதும் மறந்து போய் விட்டோம். மேலும், நிச்சயமாக செய்தால் மட்டுமே நடைபெறக் கூடிய காரியங்களும் இருக்கத்தான் செய்கின்றன.

உதாரணமாக, நீங்கள் சும்மா காத்திருப்பதன் மூலம் பணக்காரராகி விட முடியாது.

இதைக் கூடக் கற்றுக் கொடுக்கும் மனிதர்களும் இருக்கிறார்கள். ஒரு அமெரிக்க சிந்தனையாளர், நெப்போலியன் ஹில் பல அருமையான புத்தகங்களை எழுதியிருக்கிறார். அவற்றுள் ஒன்றை நான் எப்போதுமே விரும்பியதுண்டு. 'பணக்காரர் ஆக்குங்கள்' என்பது அது. அது முழுவதும் குப்பை. ஆனால் அவர் நன்றாக எழுதுகிறார். சும்மா காத்திருந்தால் மட்டும் போதுமானது என்று நம்பும் மனிதர்களும் இருக்கிறார்கள். உங்கள் கராஜுக்குள் ஒரு கடிலாக் கார் வரவேண்டும் என்ற எண்ணத்தின் விதைகளை விதையுங்கள், பின்னர் காத்திருங்கள். ஒருநாள் திடீரென்று ஒரு கடிலாக் கார் வருகிறது, உங்களுக்கு அனுப்பப்படுகிறது. இதை நம்பும் மனிதர்கள் இருக்கிறார்கள். அதாவது எண்ணமிடுவது அத்தனை சக்தி வாய்ந்தது என்று!

அமெரிக்காவில் இன்னமும் ஒரு கிறித்துவப் பிரிவு உள்ளது. அரை நூற்றாண்டுக்கு முன்னர் அதில் மிகப் பெரும்பாலோர் நம்பிக்கை கொண்டிருந்ததால் அது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. இந்தப் பிரிவுக்கு 'கிறித்துவ அறிவியல்' என்று பெயர். இந்த அறிவியலில் நீங்கள் எதுவும் செய்ய வேண்டாம். எண்ணமிட்டால் மட்டும் போதுமானது. கடவுள் தான் செயல் புரிபவர். முழு பிரபஞ்சத்தை விட ஒரு கடிலாக் கார் பெரியது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்! கடவுளால் ஒரு முழு பிரபஞ்சத்தை உருவாக்க முடியும், ஒரு கடிலாக் காரை உருவாக்க முடியாது என்றா எண்ணுகிறீர்கள்?

நான் ஒரு கதையைக் கேட்டதுண்டு.

ஒரு இளைஞன் கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்தான். வழியில் ஒரு மூதாட்டியைச் சந்தித்தான்.

அவள் கேட்டாள்: ''உனது தந்தைக்கு என்னாவயிற்று? எங்கள் ஞாயிற்றுக் கிழமைக் கூட்டங்களுக்கு அவர் இப்போது வருவதில்லையே!''

பையன் சொன்னான்: ''அவருக்கு உடல் நலம் சரியில்லை.''

பெண்மணி சிரித்தாள். ''என்ன அபத்தம். அவர் தனக்கு உடல் நிலை சரயில்லை என்று எண்ணிக் கொண்டிருக்க வேண்டும். எண்ணமிடுவது மட்டுமே காரணமாகிறது. அந்தக் கிழவனிடம் சொல், 'உனது வாழ்நாள் முழுவதும் நீ கிறித்துவ அறிவியலில் அங்கத்தினராக இருந்து வந்திருக்கிறாய். இந்தச் சாதாரண விஷயத்தைப் புரிந்து கொள்ளவில்லையே! உனக்கு உடல் நலம் சரியில்லை என்று எண்ணுவதை நிறுத்து. நீ சுகமாகி விடுவாய்.''

''நான் நீங்கள் சொன்னதைப் போய் அவரிடம் சொல்கி றேன்,'' என்றான் பையன்.

ஒருவாரம் கழித்து அவள் மீண்டும் அந்தப் பையனைத் சந்தித்தாள்.

''என்னாயிற்று? இந்த வாரம் கூட அவர் கிறித்துவ அறிவியல் ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்திற்கு வரவில்லையே!''

பையன் சொன்னான்: ''மாடம், இப்போது அவர் தான் இறந்து விட்டதாக எண்ணுகிறார். அவர் மட்டுமல்ல, அக்கம் பக்கத்தினர் அனைவருமே அவர் இறந்து விட்டதாக எண்ணு கிறார்கள். எனவே அவர்கள் அவரை புதைத்து விட்டனர். நான் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல எவ்வளவோ முயன்றேன். 'பொறுங்கள். அவர் ஒரு வேளை எண்ணமிட்டுக் கொண்டிருக்க லாம்,' என்று. ஆனால் அவர்கள் என்னைப் பைத்தியக்காரன் என்று நினைக்கிறார்கள்.''

நீங்கள் எதுவுமே செய்யாமல் தொடர்ந்து நடைபெறுகிற காரியங்கள் இருக்கின்றன. நீங்கள் சும்மா காத்திருந்தால் போதும். வேறு சில காரியங்களை நீங்கள் செய்தாக வேண்டும். அப் போது தான் அவை நடைபெறும். மிக மிக மெதுவாக, செய்யுப்படுவதன் மூலம் நடைபெறும் காரியங்கள் முக்கியமாகி விடுகின்றன. அவை உங்களது உடைமைகள், பணம், சக்தி, அந்தஸ்து, மாளிகைகள், உங்கள் பேரரசுகள் இவையெல்லாம் சும்மா காத்திருப்பதன் மூலம் உருவாகி விடாது. காத்திருப்பதன் மூலம் நீங்கள் மாவீரன் அலெக்ஸாண்டர் ஆகிவிட முடியாது. எனவே செய்யப்படும் காரியங்களால் உருவாகும் பொருள்கள் முக்கியம் வாய்ந்தவையாக ஆகிவிட்டதால், தானாக நடக்கும் காரியங்களைப் பற்றி மனிதகுலம் மறந்து விட்டது.

அன்பு தானாக நிகழ்கிறது - அதை உங்களால் உருவாக்க முடியாது. எனினும் உலகம் முழுவதும் மக்கள் அதை உரு வாக்க முயன்று வந்துள்ளார்கள். இதன் மாபெரும் தோல்வியை உலகம் இன்னும் உணர்ந்து கொள்ளாதது மிக விநோதமானதே.

பெற்றோர், பல நூற்றாண்டுகளாக தமது பிள்ளைகளின் திருமணத்தை ஏற்பாடு செய்து வந்துள்ளனர். ஜோதிடர்களைக் கேட்டு, கைரேகை நிபுணர்களைக் கேட்டு, எல்லா விவரங்களை யும் சேகரித்து - குடும்ப நிலை, பணவசதி, மனிதர்களின் குணாதிசயங்கள் இவை எல்லாவற்றையும் பற்றி விசாரித்து அறிந்து திருமணங்கள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. ஆனால் யாருமே பையனும், பெண்ணும் ஒருவரை ஒருவர் காதலிக்கிறார் களா என்று கேட்பதில்லை. திருமணம் ஆனவுடன் அவர்கள் ஒருவரை ஒருவர் காதலிப்பார்கள் என்று ஏற்றுக் கொள்ளப்படு கிறது.

பல்லாயிரம் வருடங்களாக மனிதகுலம் இதைச் செய்து வந்துள்ளது. நிச்சயமாக ஒரு பையனும் பெண்ணும் தமது திருமணம் முடிந்தவுடன் சகோதர சகோதரிகள் போல நடந்து கொள்ளத் தொடங்குகின்றனர் - விளையாட, சண்டையிடத் தொடங்குகின்றனர். காதல் என்பது என்ன என்று அவர்கள்

தெரிந்து கொள்வதே இல்லை. இதுதான் காதல் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அவர்கள் குழந்தை பெற்றுக் கொள்கிறார்கள். தமது மனைவிமாருக்குப் பரிசுகள் வாங்குகிறார்கள். மனைவிமார்கள் தமது கணவன்மார்களின் வாழ்க்கையை எவ்வளவு முடியுமோ அவ்வளவு சிரமமானதாக ஆக்க முயலுகிறார்கள் - எல்லா வழிகளிலும். இவ்வாறு அவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்கின்றனர்.

இந்த நூற்றாண்டில்தான் மக்கள், ''நாம் காதலித்தால் ஒழிய, திருமணம் செய்து கொள்ளக் கூடாது'' என்று சொல்லத் தொடங்கினார்கள் - இது கூட வெகு சில முன்னேறியுள்ள நாடுகளில் மட்டுமே.

ஆனால் காதல் என்பது பற்றி நம்மால் எதுவும் செய்ய முடியாது. அது நிகழ்கிறது அல்லது நிகழ்வதில்லை. இது உங்கள் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியது அல்ல.

'காதல் திருமணம்' என்பது உருவானது. ஆனால் இது வெகுநாள் நீடித்து நிலைக்கப் போவதில்லை. இதற்கான வெகு சாதரணமான காரணம், காதல் வருகிறது, நிகழ்கிறது. ஒருநாள் சட்டென்று போய் விடுகிறது. அதைக் கொண்டு வருவது உங்கள் கையில் இல்லை, அதை வைத்துக் கொள்வதும் உங்கள் கையில் இல்லை.

பழைய திருமண முறை மறைந்து போனதன் காரணம், அங்கே உங்கள் மனைவியை அல்லது கணவனை நேசிக்க வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டது. அது ஒரு கட்டாயத் திணிப்பு. உங்களால் எப்படி நேசிக்க முடியும் என்பதை எண்ணிக் கூடப் பார்க்க முடியவில்லை. மிஞ்சிப் போனால் நீங்கள் பாவனை செய்யலாம், நடிக்கலாம்.

ஆனால் காதல் என்பது பாவனை அல்ல, நடிப்பு அல்ல. நீங்கள் எதுவும் செய்ய முடியாது. காதலைப் பொறுத்த வரையில் நீங்கள் முழுவதும் சக்தியற்றுப் போய் விடுகிறீர்கள்.

பழைய திருமணம் வேலை செய்யவில்லை. புதிய திருமணமும் வேலை செய்யவில்லை; ஏனெனில் இது பழைய திருமணமுறைபற்றிய ஒரு எதிர்ச்செயல் மட்டுமே. இது புரிதலினால் வந்தது அல்ல, எதிர்ச் செயலால், புரட்சியால் வந்த 'காதல் திருமணம்.'

உங்களுக்கு காதல் என்றால் என்னவென்று தெரியாது. ஒரு அழகான முகத்தைப் பார்த்து, ஒரு அழகான உடலைப் பார்த்து 'கடவுளே! நான் காதலிக்கிறேன்!' என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். இந்தக் காதல் நிலைத்து நிற்கப் போவதில்லை. ஏனெனில் அதே முகத்தை இரண்டு நாட்கள், தொடர்ந்து இருபத்து நான்கு மணி நேரம் பார்த்துக் கொண்டிருந்தால் சலிப்புத் தட்டிவிடும். அதே உடல், அதன் முழு வடிவமைப்பையும் நீங்கள் ஆராய்ந்து விட்டீர்கள். இப்போது ஆராய வேறு எதுவும் இல்லை. பார்த்த இடங்களையே பார்த்துப் பார்த்து நீங்கள் ஒரு முட்டாளைப் போல உணர்கிறீர்கள். இதில் என்ன இருக்கிறது?

இந்தக் காதல் விவகாரம், காதல் திரும்ணம் தோல்வியுற்றுக் கொண்டு இருக்கிறது. ஏற்கெனவே தோல்வியுற்று விட்டது. இதன் காரணம் காதல் நிகழ்வதற்காக எப்படிக் காத்துக் கொண்டிருப்பது என்று உங்களுக்குத் தெரியவில்லை.

நீங்கள் ஒரு தியான மயமான காத்திருக்கும் நிலையைக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போது காதல் ஒரு காமம் அல்ல, ஒரு விருப்பம் அல்ல. அப்போது காதல் பாலுணர்வு பற்றியதல்ல. அது இரண்டு இதயங்கள் ஒன்றுபோலத் துடிக்கும் ஒரு உணர்வு. அது அழகான முகங்கள் அல்லது அழகான உடல்கள் பற்றியது அல்ல. அது மிக ஆழமானது. இணக்கத்தைப் பற்றியது.

காதல் இணக்கத்திலிருந்து உருவாகிறது என்றால், அப்போது தான் வெற்றிகரமான வாழ்க்கையை, முழுமையான ஒரு வாழ்க்கையை, காதல் தொடர்ந்து ஆழமாகிக் கொண்டே போகும் ஒரு வாழ்க்கையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள

முடியும். ஏனெனில் அப்போது காதல் வெளிப்படை விஷயங் களைப் பொறுத்தது இல்லாமல், உள்ளார்ந்த விஷயங்களைப் பொறுத்து இருக்கும். அது மூக்கைப் பொறுத்தோ மூக்கின் நீளத்தைப் பொறுத்தோ அமைவதில்லை. அது இரு இதயங்கள் ஒரே துடிப்பில் அடித்துக் கொள்ளும் உள்ளுணர்வைப் பொறுத் தது. இந்தத் துடிப்பு வளர்ந்து கொண்டே போகக் கூடும். புதிய ஆழங்களை, புதிய இடைவெளிகளைக் காணக் கூடும். பாலு ணர்வு இதில் ஒரு பங்காக இருக்கலாம். ஆனால் இது பாலுணர்வு மட்டும் பற்றியதல்ல. பாலுணர்வு இதற்குள் வரலாம், இதற்குள் மறைந்து போகலாம். இது பாலுணர்வுக்கு மிகவும் அப்பாற் பட்டது.

எனவே நீங்கள் காதலிக்கும் நபர் இளைஞரா முதியவரா என்பது விஷயமல்ல. ஒவ்வொரு பெண்ணும் எப்போதாவது ஒருமுறை எண்ணியிருக்கிறாள்... பல பெண்கள் தமது காதலர் களைக் கேட்டதுண்டு... "எனக்கு வயதான பின்னரும் என் னைக் காதலிப்பாயா?"

எனது நண்பன் ஒருவனைப் பற்றி எனக்கு ஒரு விஷயம் தெரியும் - அவன் என்னிடம் சொன்னான். அதனால் தெரியும் - அவன் காதலிக்கும் பெண் அவனைத் தொடர்ந்து இப்படிக் கேட்டுக் கொண்டிருக்கிறாள்: - "எனக்கு வயதான பின்பும் என்னைக் காதலிப்பாயா?" அவன் என்னைக் கேட்டான்: - "நான் என்ன சொல்வது?"

நான் சொன்னேன்: "என்னை ஏன் இந்தத் தொல்லைக்குள் அனாவசியமாக இழுக்கிறாய்? இது உன் விஷயம். நீ என்ன வேண்டுமென்றாலும் சொல்லிக் கொள். நீ என்ன நினைக் கிறாய்?"

"அவள் அவளது அம்மாவைப் போல ஆகி விட்டால் என்றால் அவளைக் காதலிக்க முடியாது. பெரும்பாலும் அவள் அவளைப் போலத்தான் ஆகிவிடுவாள். அதுதான் என்னுடைய பயம்."

எனவே நான் சொன்னேன்: ''அதைத் தெளிவாகச் சொல்லி விடு. உனக்கு வயதாகிவிடப் போவது பிரச்சனை அல்ல. ஆனால் நீ உன் அம்மாவைப் போல ஆகிவிட்டால், என்னை மன்னித்து விடு. என்னால் உன்னைக் காதலிக்க முடியாது.''

''ஆனால் நான் இப்படிச் சொன்னால் எல்லாம் முடிந்து விடும். ஏனெனில் அவளுடைய அம்மா கோபமடைவாள். எல்லாமே அவளைப் பொறுத்து தான் இருக்கிறது. நான் அவளது அம்மாவைப் பேசி சரிக்கட்டிக் கொண்டு இருக்கிறேன். அவளது அப்பா இறந்து விட்டார். அம்மா தான் திருமணத்தைப் பற்றி முடிவு எடுக்க வேண்டும். இரண்டாவதாக எனது காதலி யும் கோபமடைவாள். ஏனெனில் அவள் தனது அம்மாவைப் போல் ஆகிவிடுவாள் என்று அவளுக்குத் தெரியும். இதற்கான எல்லா அறிகுறிகளும் இங்கே உள்ளன.''

நான் சொன்னேன்: ''அப்படியென்றால் பேசாமல் இரு, பின்னர் இந்தக் கஷ்டமான காலம் வரும் பொழுது என்னை மீண்டும் வந்து பார்.''

''ஆனால் என் காதலி மிகவும் நச்சரிக்கிறாள். திருமணத்திற்கு முன்பு இது தெரிந்தாக வேண்டும் என்கிறாள்.''

''இது மிகவும் எளிது. நீ அவளைக் கேட்கத் தொடங்கி விடு. 'எனக்கு வயதான பின்பு நீ என்னைக் காதலிப்பாயா?' என்று.''

''இது நல்லது. ஏனெனில் எனக்கு வயதாகும் போது நான் எனது அப்பாவைப் போலவே இருக்கப் போகிறேன். நான் அவளது அம்மாவை வெறுப்பது போல அவளும் எனது அப்பாவை வெறுக்கிறாள். இது மிகவும் சரியானது.''

ஆகவே அவன் இதை அவளிடம் கேட்டான். அவளும், ''ஒரு போதும் முடியாது! நீ உனது அப்பாவைப் போல ஆனால் நான் உன்னைக் காதலிக்கப் போவதில்லை. நான் உன்னை உடடினயாக விவாகரத்து செய்து விடுவேன்'' என்று சொன் னாள்.

இதற்கு அவன், ‘‘அப்படியென்றால், கஷ்டமான நாட்கள் வரும் போது என்ன செய்வது என்று பார்க்கலாம். ஆனால் இந்தக் கேள்விகளை யெல்லாம் ஏன் தொடக்கத்திலேயே கொண்டு வர வேண்டும்?’’

ஆனால் உங்கள் காதல் எல்லாம் இத்தகைய சிறிய விஷயங்களைப் பொறுத்தே உள்ளது. மூக்கின் அளவு, கண்கள், கூந்தலின் நிறம், உடலின் வாகு... இவற்றிற்கும் காதலுக்கும் ஒரு தொடர்பும் இல்லை.

காதல் என்பது ஒரு நபருடன் உள்ள இணக்கம், ஒரு ஒருமை, ஒன்றிப் போதல்.

எனவே இது குரு-சீடன் உறவில் மட்டும் இல்லை. உங்களது எல்லா உறவுகளிலும், உயிர்வாழ்தலின் ஒரு இணக்க மான தருணத்திற்காக காத்திருந்து கவனித்து பார்த்தால், உங்க ளால் செய்ய முடியாத செயல்கள் எல்லாம் நிகழ்வதைக் காண்பீர்கள்.

பல மலர்களும், கவிதைகளும், பாடல்களும் சாத்தியமாகின் றன. இணக்கம், காத்திருத்தல் மற்றும் விழிப்புடன் இருத்தலின் மூலம் பல விண்மீன்கள் பிறக்கின்றன.

விஷயங்கள் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன. ஆனால் நீங்கள் உணர் நிலையுடன் இருக்க வேண்டும்.

பல சமயங்களில் விஷயங்கள் நிகழ்ந்து கொண்டு இருக்கின் றன. ஆனால் நீங்கள் உணர்நிலையுடன் இருப்பதில்லை. உறங்கிக் கொண்டிருப்பதன் மூலம் உங்களது சொந்த உரிமை களை நீங்கள் இழக்கிறீர்கள்.

எனது போதனை விட்டு விடுவதாகும். செய்வதன் மூலம் உண்டாகும் விஷயங்கள். அன்றாடமானவை, சாதாரண மானவை. நான் அவற்றிற்கு எதிராகப் பேசவில்லை. ஆனால் அவை உங்கள் வாழ்வின் முக்கியமான பாகம் அல்ல.

உங்களுக்கு ஒரு அழகான வீடு வேண்டுமானால் நீங்கள் அதைக் கட்ட வேண்டும். அது தானாக நிகழாது. நீங்கள் ஒரு

கிறித்துவ விஞ்ஞானியாகவோ அல்லது எண்ணமிட்டு பணக்காரர் ஆவதில் நம்பிக்கை கொண்டவராக இருந்தாலோ, எதுவும் உங்களுக்கு உதவி செய்யப் போவதில்லை. ஆனால் இவை முக்கியமற்ற விஷயங்கள்.

முக்கியமான விஷயங்கள் - அன்பு, மகிழ்ச்சி, உற்சாகம், நகைச்சுவை உணர்வு, புரிந்து கொள்ளுவதைத் தாண்டிய ஒரு அமைதி, உங்களையே தேடிச் செல்லும் ஒரு உள்ளார்ந்த பயணம் - இவை தான் நீங்கள் செய்ய முடியாத முக்கியமான விஷயங்கள். இவற்றை நிகழச் செய்ய நீங்கள் விட்டு விட வேண்டும்.

எனவே ஒரு தெளிவான கருத்தைக் கொண்டிருங்கள். செய்யப்பட வேண்டியதைச் செய்தாக வேண்டும்; நிகழ்வதற்கு விட்டு விடப்பட வேண்டியவற்றை அனுமதிக்க வேண்டும்; அவற்றுக்கு குறுக்கீடு எதுவும் ஒருபோதும் செய்யக் கூடாது.

இதையும் நினைவில் கொள்ளுங்கள். முக்கியமானது என்பது தானாகவே நிகழ்வது; முக்கியமற்றது என்பது நீங்கள் செய்வது. உங்களது செயல்கள் புனிதமான ஒன்றாக இருக்க முடியாது.

இதனால் தான், மனிதனால் செய்யப்பட்ட கோவில்கள்; சர்ச்சுகள், கடவுளின் உருவங்கள் இவையெல்லாம் சாதாரண மானவை என்று நான் சொல்லுகிறேன். மனிதனால் செய்யப் பட்ட எதுவும் மனிதனை விட உயர்வானதாய் இருக்க முடியாது. இது ஒரு வெகு சாதாரணமான கணக்கு; மனிதனை விட உயர்ந்த எதுவும் எப்போதுமே நிகழ்கிறது; அது உங்கள் செயல்பாடுகளைக் கடந்தது.

நீங்கள் எப்போதுமே பெற்றுக் கொள்ளும் பகுதியில் இருக்கிறீர்கள். நீங்கள் திறந்த மனதுடன் பெற்றுக் கொள்ளும் தன்மையுடன், உயிர் வாழ்தலுக்கு நன்றியுணர்வுடன் இருக்க வேண்டும்.

*அன்பிற்குரிய பகவான்,*

*உங்களுடன் சொற்பொழிவில் இருக்கும் பொழுது நான் மிகவும் ஊட்டத்துடன் புத்துணர்வுடன் உணர்கிறேன். நான் ஏங்கிக் கொண்டிருந்த ஒய்வை இறுதியில் கண்டு விட்டேன். மேலை நாட்டில் இருந்த போது உங்கள் முன்னிலையில் இல்லாமல் எவ்வளவு இழப்படைந்தேன் என்பதை நான் உணரவில்லை. உங்களுடன் இருப்பதன் எழிலை என்னால் எப்படி மறக்க முடிந்தது? தயவுசெய்து கருத்தைத் தெரிவியுங் கள்.*

ஓஷோ: மனிதனின் நினைவாற்றல் மிகச் சிறந்தது அல்ல. அவன் மிக எளிதில் மறந்து விடுகிறான். இந்த சில உதாரணங்கள் இதை உணர உனக்கு உதவி செய்யும்.

நீங்கள் அனைவரும் குழந்தைகளாக இருந்திருக்கிறீர்கள். நீங்கள் கொண்டிருந்த பரிசுத்தமான கள்ளமற்ற தன்மையை எவ்வளவு தூரம் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உண்மையில், மனோதத்துவ நிபுணர்களால் ஒரு வினோதமான உண்மை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதாவது, பின்னோக்கிச் சென்று நினைவுபடுத்திக் கொள்ள முயன்றால், நான்கு வயது அல்லது அதிகம் சொல்லப் போனால் மூன்று வயது வரை மட்டுமே நினைவுகூர முடிகிறது.

ஆனால் தொடக்கத்தில் இந்த அந்த மூன்று அல்லது நான்கு வருடங்கள் தான் மிகச் சிறந்தவை. பொறுப்புகள் ஏதுமில்லை. கவலையில்லை. இறுக்கமில்லை. வாழ்க்கை சாதாரணமாக மிக இனிமையானதாக இருந்தது. சுத்தமான மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் மனிதர்கள் அதை நினைவு கூர்வதில்லை. ஒவ்வொரு வரின் நினைவும் கிட்டத்தட்ட மூன்று அல்லது நான்கு வயதில் நின்று போவது ஒரு அதிசயமான விஷயம்.

நம்மில் மிகச் சிறந்தது பதிவு செய்து வைக்கப்படுவதில்லை என்று தோன்றுகிறது. ஒருவேளை நீங்கள் அதை மறந்து விட வேண்டும் என்பது இயற்கையின் வழிமுறையாக இருக்கக்

கூடும். ஏனெனில் மீதமுள்ள வாழ்க்கையெல்லாம் அதை இழந்து விட்டதாக நீங்கள் உணரக் கூடும். மிக அழகான தருணங்களை நீங்கள் பார்த்துள்ளதால் இன்று எல்லாமே மந்தமாக, நிறமற்று வெளிரிப் போய், செத்துப் போய் இருப்பது போலத் தோன்றக் கூடும். அந்த ஒளி, மகிழ்ச்சி, உயிரோட்டம் இப்போது இல்லா மல் இருக்கலாம். ஒருவேளை அந்த அழகான தருணங்களைப் பதிவு செய்யாமல் இருப்பது இயற்கையின் வழிமுறையாக இருக்கலாம். பின்னாள் வாழ்க்கையில் கூட.

மனம் ஒரு வினோதமான முறையில் செயல்படுகிறது என்பதை அறிய நீங்கள் வியப்படைவீர்கள். மிகத் துயரமான எதையும் அது வெகு விரைவில் பதிவு செய்து விடுகிறது. யாரோ ஒருவர் உங்களை அவமதித்துப் பேசுகிறார். அதை உங்கள் வாழ்நாள் முழுவதும் மறக்க மாட்டீர்கள். எத்தனையோ பேர் உங்களுக்கு மரியாதை காட்டியுள்ளனர்; அதையெல்லாம் நீங் கள் மறந்து விட்டீர்கள். ஒரு மனிதன் உங்களை அவமதித்ததை உங்களால் மறக்க முடியவில்லை.

அவலட்சணமானது, கரியது, அவமானம் தருவது, துயரமா னது இவையெல்லாம், நினைவாற்றலைப் பொறுத்தவரையில் முன்னுரிமை பெற்றுக் காணப்படுகின்றன. எல்லா நன்மையான விஷயங்களும், எல்லா அழகான விஷயங்களும் வெறுமனே மறக்கப்படுகின்றன. இவை உங்கள் நினைவில் எந்த அடை யாளத்தையும் விட்டு வைப்பதில்லை.

இந்த விஷயத்தைக் கொண்டு மனித குலத்தை தொடக்கத்தி லிருந்தே சுரண்டுவதற்கு அரசியல்வாதிகளும் மதகுருக்களும் பயன்படுத்தி வந்துள்ளனர்.

ஜனநாயகத்திற்கு இரண்டு கட்சிகள் தேவை என்று அவர்கள் கூறுகிறார்கள். ஜனநாயகம் என்பது இரண்டு கட்சிகளைப் பொறுத்தது அல்ல. இரண்டு கட்சிகள் முற்றிலும் வேறுபட்ட ஒரு காரணத்திற்காகத் தேவைப்படுகின்றன. இது மனோதத்து வம் பற்றியது. ஒரு கட்சி ஐந்தாண்டுகளுக்கு ஆட்சியில்

இருக்கிறது. அந்த ஐந்தாண்டுகளில் எல்லாரும் அந்தக் கட்சிக்கு எதிராகத் திரும்பி விடுகின்றனர். ஏனெனில் அது சொர்க்கத்தை உருவாக்குவதாக வாக்களிக்கிறது. நீங்களோ நரகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அது தனது எல்லா வாக்குறுதிகளையும் மறந்து விட்டது.

எதிர்க்கட்சி உங்களைத் தொடர்ந்து தூண்டி விடுகிறது. ''இந்த கட்சியின் வாக்குறுதிகள் என்னாயிற்று? நாங்கள் அந்த வாக்குறுதிகளை நிறைவேற்றி இருப்போம்.''

அடுத்த தேர்தலில் ஆட்சியில் இருந்தவர்கள் தோற்றுப் போகிறார்கள், அடுத்த கட்சி ஆட்சிக்கு வருகிறது. ஐந்து வருட காலத்தில் இவர்களும் முடிந்து போகிறார்கள். ஆனால் இந்த ஐந்து வருட காலத்தில் மக்கள் முதலில் ஆட்சியிலிருந்த கட்சியை மறந்து போகிறார்கள். அவர்கள் மீண்டும் ஒரு சொர்க்கத்தை உருவாக்குவதாக வாக்குறுதி அளிக்கிறார்கள். மக்களும் அதைக் கேட்டு நம்பிக்கை வைக்கிறார்கள்.

பொது மக்களுக்கு ஐந்து வருட நினைவாற்றல் தான் உள்ளது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதனால் தான் தேர்தல்கள் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை முடிவு செய்யப்படு கின்றன. இதற்கு இதைத் தவிர வேறு எந்தக் காரணமும் இல்லை. எனவே. ஐந்து வருட காலத்தில் பொதுமக்கள் முதல் கட்சியின் குற்றங்களை, முதல் கட்சியின் முட்டாள் தனங்களை, பொய்களை, மறந்து விடுகிறார்கள். அவர்கள் அனைவரும் மீண்டும் புனிதர்களாகி விடுகின்றனர்.

இதனால் தான் இரண்டு கட்சிகள் தேவைப்படுகின்றன. ஒரு கட்சி தொடர்ந்து ஆட்சி செய்து கொண்டிருந்தால், அதன் குற்றங்களை உங்களால் மன்னிக்க முடியாது. இது கட்சிக்குத் தொந்தரவு ஆகிவிடும். மக்கள் புரட்சி செய்யத் தொடங்குவார்கள், ஆட்சியில் இருப்பவர்களைக் கொன்று விடு வார்கள். எனவே இது மக்களை திருப்திப்படுத்தும் ஒரு மனோதத்துவ ரீதியான தந்திரம்.

"கவலைப்படாதீர்கள். இன்னும் இரண்டே வருடம் தான். அப்போது இந்த மனிதர்கள் போய் நல்ல மனிதர்கள் ஆட்சிக்கு வருவார்கள்." ஆனால் அவர்கள் எல்லாருமே ஒரே வகையைச் சேர்ந்தவர்கள் தாம்.

நான் எனது வாழ்க்கையில் தேர்தலில் வாக்களித்ததே இல்லை. ஏனெனில், இரண்டு முட்டாள்களில் யார் குறைவான முட்டாள் என்று என்னால் காண முடியவில்லை. இதற்கு எனக்கு ஒரு வசதியும் தெரியவில்லை. எனவே இதில் இறங்காமல் இருப்பது மேல் என்று நான் நினைத்தேன். குறைந்தபட்சம் என்னை யாரும் குறை சொல்ல முடியாது, 'நீ இந்த முட்டாள் களைத் தேர்ந்தெடுத்து இருக்கிறாய்' என்று. நான் யாரையும் தேர்ந்தெடுக்க வில்லை. யாரையாவது தேர்ந்தெடுங்கள்; அது நிச்சயம் தவறான ஆசாமியாகத் தான் இருக்கும்.

இந்தியாவில் நாற்பதாண்டுகளுக்கு முன்னால் பாருங்கள். யாரைத் தேர்ந்தெடுத்தாலும் நீங்கள் தவறான ஆளைத்தான் தேர்ந்தெடுத்து இருப்பீர்கள். மீண்டும் யாரைத் தேர்ந்தெடுத்தாலும், தவறான ஆளைத் தான் தேர்ந்தெடுப்பீர் கள். ஏனெனில் அவர்கள் எல்லாரும் ஒரே மாதிரியான மனிதர் கள் தான். இது ஒரு கால்பந்து போட்டியைப் போன்றது. இரண்டு கட்சிகள், இரண்டு குழுக்கள், கால்பந்து விளையாடு கிறார்கள். நீங்கள் தான் அந்தப் பந்து. உங்களுக்கு எல்லா இடங்களில் இருந்தும் உதை கிடைக்கப் போகிறது. நீங்கள் எங்கே சென்றாலும் உங்களுக்கு ஒரு நல்ல உதை கிடைக்கும்.

அழகான தருணங்களை நாம் ஏன் மறந்து விடுகிறோம் என்று நீங்கள் என்னைக் கேட்கிறீர்கள். இது இயற்கையானது. ஏனெனில் மனம் மலர்களைக் கவனிப்பதில்லை. முட்களைத் தான் கவனிக்கிறது. தன்னைக் காயப்படுத்தும் எதையும் அது உடனே கண்டு கொள்கிறது.

யாருக்கு மலரைப் பற்றிக் கவலை? நீங்கள் உங்கள் நண்பர்களை விட எதிரிகளை நினைவில் வைத்துக் கொள்கிறீர்

கள். உங்கள் மனதைச் சற்று கவனியுங்கள். உங்கள் நண்பர் களை விட எதிரிகளை நினைவில் வைத்துக் கொண்டிருப்பதை கண்டு வியப்படைவீர்கள். உங்களால் நண்பர்களை மறந்து விட முடியும். ஆனால் எதிரிகளை மறந்து விட முடியாது.

இதுதான் உங்களுடைய பைத்தியக்காரத் தனமான நிலை.

ஒரு தெளிந்த சிந்தனையுடைய மனம், விஷயங்களை முற்றிலும் எதிர்த் திசையிலிருந்து பார்க்கும். அது ஆசீர்வாதங் களைக் கணக்கிடும், மிக அழகாக உள்ள எல்லாவற்றையும் கணக்கிடும், தான் நன்றியுடன் உணரக் கூடிய எல்லாவற்றையும் பார்த்துக் குறித்துக் கொள்ளும். இதன் பின்னர், இயல்பாகவே, இத்தகைய ஒரு நபரின் வாழ்க்கை ஆசீர்வாதங்கள் நிறைந்ததாக, அழகான அனுபவங்களால் சூழப்பட்டதாக இருக்கும்.

உங்களது மனதில் ஒரு சிறிய அமைப்பை மாற்றுவதைப் பொறுத்தது தான் இந்த விஷயம்.

எனக்கு எப்போதுமே ஒரு கதை பிடிக்கும்.

இது ஒரு யூதக் கோவிலில் நடைபெற்றது. யூதக்கோவில் யூதர்களின் மடமாகவும் இருந்து வந்தது. அதன் தலைமை குருவான ரபி மிகவும் கண்டிப்பானவர். இரண்டு இளம் யூதர்கள் கோவிலின் தோட்டத்தில் நடந்து சென்று கொண்டு இருந்தனர். அவர்களுக்குத் தோட்டத்தில் நடப்பதற்கு காலையில் ஒரு மணி நேரமும், மாலையில் ஒரு மணி நேரமும் அனுமதிக்கப்பட்டிருந் தது. பிற நேரங்களில் அவர்கள் மத புத்தகங்களைப் படிக்கவும், பிற விதிமுறைகளைப் பின்பற்றவும் வேண்டியிருந்தது. இவர்கள் இருவருமே, 'நாம் தோட்டத்தில் இருக்கும் போது புகை பிடிக்கலாமா?' என்று மத குருவைக் கேட்கலாமா என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தனர். இருவருமே தொடர்ச்சியாக புகைப் பிடிப்பவர்கள். ஆனால், கோவில் மடத்தில் இருக்கும் போது புகைப் பிடிப்பது செய்ய முடியாத காரியமாக இருந்தது. அது ஒரு கடுங்குற்றம்.

இதனால் இவர்கள் இருவரும் மிகவும் கஷ்டப்பட்டார்கள். எனவே இருவருமே, இது சிங்கத்தின் வாய்க்குள் கையை விடுவது போன்ற செயலாக இருந்தாலும், ஒரு முயற்சி செய்தே ஆக வேண்டும் என்று முடிவு செய்தனர். 'மதகுரு மிகவும் ஆபத்தானவர், இதற்கு என்ன செய்வாரோ, கடவுளுக்குத் தான் தெரியும்!'

மறுநாள் இருவரில் ஒருவன் கண்களில் கண்ணீரோடு கோவிலை விட்டு வெளியே வந்தான். அவன் கோபத்துடனுடம் வருத்தத்துடனும் இருந்தான். தோட்டத்தில், ரோஜாப் புத ரண்டை மற்றவன் புகைப் பிடித்து கொண்டு இருப்பதைக் கண்டு அதிர்ச்சியுற்று, ''அடக் கடவுளே! நீ கேட்காமலேயே தொடங்கி விட்டாயா?'' என்றான்.

மற்றவனோ, ''இல்லை. நான் கேட்டு விட்டேன்'' என்றான்.

அதற்கு இவன், ''இவர் என்ன மனிதர்? நானும் அவரைக் கேட்டேன். அதற்கு அவர் பலமாக சத்தம் போட்டு, 'டேய் ராஸ்கல்! என்னவென்று நினைத்தாய்? இது கோவிலா இல்லை நரகமா? உனக்கு புகை பிடிக்க வேண்டுமென்றால் நரகத்துக்குப் போ' என்றாரே! உன்னை மீண்டும் எப்படி அனுமதித்தார்?'' என்று கேட்டான்.

அடுத்தவன் சிரித்துக் கொண்டே, ''நீ எப்படிக் கேட்டாய்...?'' என்றான்.

''அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''சும்மா சொல்லு. எப்படிக் கேட்டாய்?''

அந்த இரண்டு மணி நேரமும் கடவுளை ஜெயிக்கும் நேரம் என்று அழைக்கப்பட்டிருந்தன. இரண்டு மணி நேர ஜெபத்திற் காக அவர்கள் தோட்டத்திற்குச் செல்ல அனுமதிக்கப்பட்டிருந் தனர்.

எனவே இவன் சொன்னான், ''நான் ஜெபம் சொல்லும் போது புகை பிடிக்கலாமா? என்று சும்மா கேட்டேன். அதற்கு

அவர் பலமாகக் கூப்பாடு போட்டு என்னை அடிக்கவே வந்து விட்டார்'' என்றான்.

அடுத்தவன் சொன்னான்: ''அமைதியாக இரு. நீ தவறான முறையில் கேட்டிருக்கிறாய். நானும் அவரைக் கேட்டேன். 'ஐயா நான் புகை பிடிக்கும் போது ஜெபிக்கலாமா? என்று கேட்டேன். அதற்கு அவர், அது மிக நல்லது. அதில் தவறேதும் இல்லை' என்றார்.''

ஒரு சிறிய மாற்றம் தான். அது மிகப் பெரிய மாறுதலை ஏற்படுத்துகிறது.

உங்களுக்கு நடக்கும் அழகான அனுபவங்களை எல்லாம் சேகரிக்கத் தொடங்குங்கள். இது அனைவருக்கும் நடைபெறுவது தான். மேலும் அழகற்ற எதுவும் நினைவில் வைத்துக் கொள்ளத் தகுதியற்றது. சேகரிக்கத் தகுதியற்றது. ஏன் குப்பைகளால் உங்களைச் சுமையேற்றிக் கொள்ள வேண்டும்? மாறாக, மலர்களாலும் நல்ல நறுமணத்தாலும் நிரப்பிக் கொள்ளலாமே!

உங்களது இயற்கையான உயிரியல் மனதில் ஒரு சிறிய மாற்றத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

இதை தியானத்தால் வெகு எளிதாகச் செய்யலாம்.

தியானத்தின் ஒரு முக்கிய அம்சம் விஷயங்களின் நல்ல பக்கத்தைப் பார்ப்பது தான். மனிதர்களின் நல்ல பக்கத்தை, சம்பவங்களின் நல்ல பக்கத்தைப் பார்த்து உங்களைச் சுற்றிலும் எல்லா நலன்களாலும் சூழச் செய்து கொள்வது தான்.

அழகான எல்லாப் பொருட்களாலும் சூழப்பட்டிருக்கும் போது உங்கள் வளர்ச்சி சுலபமாகிறது. ஆனால் மனிதர்கள் வினோதமானவர்கள். ஒருவருக்காக நீங்கள் ஓராயிரம் உதவிகள் செய்யக் கூடும். ஆனால் ஒரே ஒரு தகாத காரியத்தை செய்து விடுங்கள். அவர் நீங்கள் செய்த ஓராயிரம் நன்மைகளையும் மறந்து விட்டு, செய்யத் தகாத காரியம் ஒன்றை மட்டுமே நினைவில் வைத்துக் கொள்வார். அதைத் தனது வாழ்க்கை முழுவதும் சுமந்து செல்வார்.

இப்படித்தான் மனிதர்கள் வாழ்கிறார்கள். பழி வாங்குவதில், கோபத்தில், துயரத்தில், வாழ்க்கையில் ஒதுக்கித் தள்ளப்பட்டு, உயிர் வாழ்தலின் வெளித்தள்ளப் பட்டவர்களாக, வாழ்கிறார்கள். ஆனால் இங்கு முழு விஷயமும் நீங்கள் தவறான விஷயங்களையே சேகரித்துக் கொண்டு வருகிறீர்கள்.

வாழ்க்கை இரண்டு விஷயங்களையும் கொண்டுள்ளது.

ஒரு பகல், இரண்டு இரவுகளுக்கு இடையில் அமைந்துள்ளதை நீங்கள் காணலாம்; அதே போல், இரண்டு அழகான பகல்கள் ஒரு இரவை இடையில் கொண்டிருப்பதையும் நீங்கள் பார்க்கலாம். எவ்வாறு உணர வேண்டும் என்று நீங்கள் தேர்வு செய்து கொள்ளுங்கள். சொர்க்கத்தில் இருப்பதா, நரகத்திலா என்று.

அது உங்கள் தேர்வு.

○
## இரண்டு
○

## மூன்று தீக்கைகள்

*அன்பிற்குரிய பகவான்,*

*குருவுடன் தொடர்பு கொண்டிருப்பது தான் தீக்கை என்பது உண்மையா?*

ஓஷோ: தீக்கை அல்லது தொடக்கம் என்பது ஒரு மிக முக்கியமான, ஆழ்ந்த அர்த்தம் கொண்ட ஒரு வார்த்தை.

மொத்தம் மூன்று தொடக்கங்கள் உள்ளன. முதலாவது, ஒரு மாணவன் சீடனாகும் பொழுது; இரண்டாவது ஒரு சீடன் பக்தனாகும் பொழுது; மூன்றாவது ஒரு பக்தன் குருவுக்குள் மறைந்து போகும் பொழுது.

இந்த முழு செயல்பாட்டையும் புரிந்து கொள்வதற்கு மூன்று படிகளையும் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒவ்வொருவரும் ஒரு மாணவனாகத் தான் தொடங்கு கிறோம். வாழ்க்கை என்றால் என்னவென்று கேள்வி கேட்பவராக, நம்மைச் சுற்றிலும் உள்ள மர்மங்களைப் புரிந்து கொள்ளும் ஆவலுடன். தொடங்குகிறோம். ஆனால் இந்த விருப்பம் அறிவுக்கானது; எனவே மேலோட்டமானது. விருப் பம் அறிவு பற்றி இருப்பதால், அது மனதை பற்றியது. நமது உயிருருவின் வெளிவட்டம் மனம்; அது நமது தனித் தன்மை யின் மிக மேலாட்டமான பகுதி.

மாணவனிடம் கேள்விகள் இருக்கின்றன, ஆனால் அவனி டம் தேடல் இல்லை. அவனது கேள்விகளுக்குப் பதில் அளிப் பது சுலபம். அவனைத் திருப்தி செய்வது சுலபம். இரவல் வாங்கப்பட்ட அறிவே அவனுக்குப் போதுமானது. அவனுக்கு இன்னமும் ஒரு குரு தேவைப்படவில்லை. ஒரு ஆசிரியர் மட்டுமே போதும்.

அவன் பதில்களைச் சேமித்து வைத்துக் கொள்கிறான். அறிஞன் ஆகிறான். ஆனால் புத்திசாலி ஆவதில்லை. பதில்களை சேமிப்பது மனிதன் நினைவாற்றல் பகுதியில் நடக்கிறது. விஷ யங்களைச் சேமித்து வைக்கும் செயல்பாட்டில் உள்ள அந்தப் பகுதி யந்திரத்தனமானது. அதற்கும் புத்திசாலித் தன்மைக்கும் சம்பந்தம் இல்லை.

மிகுந்த கல்வியறிவு, கலாசாரம் மற்றும் நாகரிகம் கொண்ட அறிவாளிகள் வாழ்க்கையில் புத்தியற்று நடந்து கொள்வதைப் பார்ப்பது சாத்தியமே. அவர்கள் பதிலளிக்க முன்பே தயாராக வுள்ள கேள்வியைக் கேட்கும் பொழுது அவர்கள் வெகு திறமையாகச் செயலாற்றுவார்கள். ஆனால் அவர்கள் தயராக இல்லாத ஒரு புதுக் கேள்வியை வாழ்க்கை எழுப்பும் பொழுது அவர்களுக்கு ஒன்றும் தெரிவதில்லை; புத்தியற்றுப் போகிறார் கள். இங்கு விஷயம் என்னவென்றால், வாழ்க்கை தொடர்ந்து புதிய கேள்விகளைச் சவால்களை முன் வைத்த வண்ணம் இருக்கிறது.

நினைவாற்றல் ஒரு சந்தைச் சரக்கு. வாழக்கைக்கு அது உதவாது. உங்களது பல்கலைக்கழகங்கள் எல்லாம் எப்படி மனப்பாடம் செய்வது என்பதைத் தான் கற்று தருகின்றன.

மிகப் பிரமாதமான நினைவாற்றலைக் கொண்ட மனிதர்கள் பொதுவாக புத்தியற்ற மனிதர்கள் என்று கண்டறியப்பட்டுள்ளது.

ஆங்கிலேயே அரசுப் பிரதிநிதிகளில் ஒருவரான கர்ஸானுடைய வாழ்க்கையில் இந்தக் குறிப்பிடத்தக்க சம்பவம் நடந்தது. இது ஒரு சரித்திர உண்மை.

கர்ஸான், ராஜபுதனத்தில் ஒரு மனிதனின் நினைவாற்றல் நம்பமுடியாத அளவு இருந்தது என்று கேள்விப்பட்டார். அந்த மனிதனுக்கு இந்தி மொழியின் ஒரு பிரதேச மொழியான ராஜஸ்தானி மட்டுமே தெரியும். அவனுக்கு வேறு எந்த மொழியும் தெரியாது. ஆனால் வேறு எந்த மொழியிலும் உள்ள விஷயத்தை அவன் மனப்பாடம் செய்வதை இது எந்த வகையிலும் தடுக்க வில்லை. இந்தத் திறமை சிட்டத்தட்ட மனித சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம் போலத் தோன்றியது.

இவனை அரசுப் பிரதிநிதி கர்ஸானின் சபைக்கு அழைத்து வந்தனர். ஒரு தனிக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. முப்பது மொழிகள் தெரிந்த முப்பது பண்டிதர்கள் அவனைப் பரிசோதித்து அவனது நினைவாற்றலைப் பரீட்சை செய்யவிருந்தனர். இந்த முப்பது பண்டிதர்களில் ஒருவருக்குக் கூட அவனது தாய்மொழி தெரியாது. அந்த முப்பது மொழிகளும் அவனுக்கு அந்நியமானவை.

இந்த ஏற்பாடு மிக வினோதமானதாக இருந்தது. இதற்கு முன்பு இதைப் போல் எப்போதும் ஏற்பாடு செய்யப்படவில்லை. இனிமேலும் செய்யப்படும் என்று நான் எண்ணவில்லை. இந்த ஏற்பாட்டின் படி, முப்பது பண்டிதர்களில் ஒவ்வொருவரும் தமது மொழியில் ஒரு வாக்கியத்தை அந்த ஏழை ராஜஸ்தானி கிராமத்தானிடம் சொல்லுவார்கள். ஆனால்

இந்த வாக்கியங்கள் அவனிடம் முழுமையாக சொல்லப்பட மாட்டா.

அந்தக் கிராமத்தான் முதலில் ஒரு நபரிடம் செல்வான். அவர் தனது வாக்கியத்தின் முதல் வார்த்தையை அவனிடம் சொல்வார். அப்போது ஒரு மணி அடிக்கப்படும். பின்னர் அவன் அடுத்த நபரிடம் செல்ல, அவர் தனது முதல் வார்த்தையை அவனிடம் சொல்வார். இவ்வாறு அவன் சுற்றிச் சுற்றி வருவான். முப்பது நபர்கள் முடிந்த பின்னர், மீண்டும் முதல் நபரிடம் வந்து இரண்டாவது வார்த்தையைக் கேட்டுக் கொள்வான். ஒவ்வொரு வார்த்தைக்குப் பின்னரும் ஒரு பெரிய மணி அடிக்கப்பட்டு அவனைக் குழப்பத்தில் ஆழ்த்தும்.

இது நடக்க வெகு நேரம் ஆகும் என்பதால், தமது வாக்கியங்களை முழுவதும் தம்மால் நினைவில் வைத்துக் கொள்ள முடியுமா என்று பண்டிதர்களுக்கே நிச்சயமாகத் தெரியவில்லை. அவர்கள் தமது வாக்கியங்களை தம்முன் எழுதி வைத்துக் கொண்டு ஒவ்வொரு வார்த்தை சொல்லப்பட்ட பின்னரும் அதைக் கோடிட்டுக் குறித்துக் கொண்டனர். இந்த மனிதன் தொடர்ந்து சுற்றிச் சுற்றிச் சென்றான். அவர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு தனது நினைவாற்றல் பகுதி யில் துண்டு துண்டாக கொடுக்கப்பட்ட வாக்கியங்களை சேமித் துக் கொண்டான்.

எல்லாப் பண்டிதர்களும் தமது வாக்கியங்களைச் சொல்லி முடித்த பிறகு, அவன் முப்பது வாக்கியங்களை முப்பது மொழிகளில் தான் என்ன சொல்கிறோம் என்று அறியாமலேயே திருப்பிச் சொன்னான். அவற்றின் அர்த்தம் என்னவென்று அவனுக்குத் தெரியாது. எனினும் அவன் அவற்றை மிகச் சரியாக சொன்னான். பண்டிதர்கள் குழப்பமடைந்தார்கள். அவர்களுக்கு தமது சொந்த வாக்கியங்களே நினைவில் இல்லை; அவற்றை எழுதி வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அவர்கள் ஐந்தா வது வார்த்தையைச் சொல்லியிருந்தார்களா அல்லது ஆறாவ தையா என்று கூட அவர்களால் நினைவு வைத்துக் கொள்ள

முடியவில்லை. அதைக் குறித்து வைத்துக் கொள்ள வேண்டிய தாயிற்று. இந்த மனிதனோ கல்வியறிவு இல்லாதவன். அவனால் எழுதக் கூட முடியாது.

கர்ஸான் மிகவும் வியந்து போனார். அவர் அந்த மனி தனைப் பாராட்டிப் பரிசளித்தார்.

ஆனால் அவனது சக கிராமத்து மனிதர்களுடன் பேசிப் பார்த்ததில் அவன் ஒரு முட்டாள் என்று தெரிய வந்தது.

அவனது நினைவாற்றலைப் பொறுத்தவரையில் மட்டும் அவன் பிரமாதமானவன். ஆனால் வாழ்க்கையின் எந்த ஒரு சாதாரணக் கேள்வியாக இருந்தாலும், எளிய சம்பவத்தைப் பற்றி இருந்தாலும், அவனால் அதற்குத் தீர்வு காண முடியவில்லை. பதில் அளிக்க முடியவில்லை. அவர்கள் சொன்னார்கள்: ''எங் கள் கிராமத்தில் அவனுக்கு 'மகத்தான அறிவாளி முட்டாள்' என்று பெயர்.''

ஒரு மாணவன் அறிவைச் சேமித்துக் கொள்ள ஆர்வமுடன் இருக்கிறான் என்பது நன்கு தெரிந்த ஒரு உண்மை. அவனது கேள்விகளை வெகு எளிதில் திருப்திப்படுத்தி விடலாம். அவ னது மனம் ஒரு கணிப்பொறி போலச் செயல்படுகிறது.

ஆனால் எப்போதாவது ஒரு முறை, மாணவன் ஒரு குருவின் பொறியில் விழுந்து விடுகிறான். அவன் ஒரு குருவைத் தேடிப் போகவில்லை, 'குரு' மற்றும் 'ஆசிரியர்' என்ற வார்த்தை களுக்கு இடையில் உள்ள வேறுபாட்டை அவன் அறிய மாட்டான். அகராதிகளில் இந்த இரண்டு சொற்களின் அர்த்தமும் ஒன்றே தான்.

ஆனால், உண்மையான வாழ்க்கையில், ஒரு ஆசிரியர் ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு அறிவை மாற்று கிறார் - அது அவரது சொந்த அனுபவம் அல்ல.

ஓர் குரு, ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலை முறைக்கு அறிவை மாற்றுவதில்லை. அவர் கொடுப்பது என்ன வென்றால் அவருடைய சொந்த புரிந்து கொள்ளுதல்.

ஆனால் ஒரு மாணவன் ஒரு குருவின் பொறிக்குள் அகப்பட்டுக் கொண்டால், அதை விட்டு வெளி வருவது மிகக் கடினம். ஏனென்றால் அறிவும், அறிதலும் முற்றிலும் இரு வேறு மாறுபட்ட விஷயங்கள் என்று வெகு விரைவில் தெளிவாகி விடுகிறது.

கேள்விகளும் தேடலும் இரு வேறுமாறுபட்ட விஷயங்கள்.

கேள்விகள் வெறும் அறிகின்ற ஆர்வம் மட்டுமே. தேடல் ஒரு அபாயத்திற்குத் துணிந்த ஒரு புனிதப் பயணம்.

ஓர் கேள்வி ஏதாவது ஒரு பகுத்தறிவுக்கு ஒத்த பதிலால் சுலபமாக திருப்தியடைந்து விடும். ஆனால் தேடல் அவ்வாறு திருப்தியடையாதது. அது ஒரு தாகம்.

நீங்கள் அறிவியல் ரீதியாக $H^2O$ என்பது தண்ணீர் என்று தொடர்ந்து மீண்டும் மீண்டும் கூறலாம். ஆனால் அது தாகத்தை தணிக்கப் போவதில்லை. அது ஒரு பதில், மிகச் சரியான பதில். யாராவது தண்ணீர் என்றால் என்ன என்று கேட்டால், ஒரு கேள்வியாகக் கேட்டால், அதற்கு பதில் சொல்வது மிக எளிது. ஆனால் யாராவது தனக்குத் தாகமாக இருப்பதாக தண்ணீர் கேட்டால், $H^2O$ உதவி செய்யப் போவதில்லை. உண்மையான தண்ணீர் தான் அங்கே சரிப்படும்.

தேடல் என்பது ஒரு தாகம். பசி.

இரவல். அறிவு அதைத் திருப்தி செய்யாது.

அப்போது குரு, தனது மாணவனை அவன் ஒரு உண்மை யான வளர்ந்த ஆணாக இருந்தால், சும்மா ஆர்வம் காட்டுவது என்பது சிறுபிள்ளைத் தனமாகது என்று மெல்ல மெல்ல அவனுக்கு உணர்த்துகிறார். முதிர்ச்சி என்பது ஒருவன் தேடலில் இறங்கியாக வேண்டும் என்று பணிக்கிறது. நீங்கள் வெறும் அறிவை மட்டும் கேட்கக் கூடாது, நீங்கள் தானே அறிந்து கொள்வதற்கான வழிகளையும் முறைகளையும் பற்றிக் கேட்க வேண்டும். ஒருதலைமுறையிலிருந்த மற்றொரு தலைமுறைக்கு

வருகின்ற அறிவை அல்ல. இந்த அறிவு யாராவது கண்டுபிடித்ததா, வெறும் கட்டுக் கதையா, யாராவது அதை உணர்ந்து கொண்டார்களா இல்லையா, அதை மாற்றுவதில் எவ்வளவு விஷயங்கள் காணாமற் போகின்றன, சேர்த்துக் கொள்ளப்படுகின்றன, தொகுத்துத் தள்ளப்படுகின்றன என்பதெல்லாம் யாருக்கும் தெரியாது. அறிந்து கொள்வது என்றால், 'எனக்கு சொந்த அனுபவம் வேண்டும்' என்று பொருள்.

ஒரு உண்மையான தேடுபவனுக்கு கேள்விகள் இல்லை. ஆனால் ஒரு மகத்தான தாகம் இருக்கிறது.

இதுதான் முதல் தொடக்கம் அல்லது தீக்கை. ஓர் குரு மாணவனின் இலக்கை அறிவிலிருந்து அறிந்து கொள்தலுக்கு மாற்றும் பொழுது, நினைவாற்றலிலிருந்து புத்திக் கூர்மைக்கு மாற்றும் பொழுது இது நிகழ்கிறது.

மேலும் இது ஒரு சாதாரண சம்பவம் அல்ல. அதிர்ஷ்டசாலிகளான வெகு சிலருக்கே இது நிகழ்கிறது.

கோடிக்கணக்கான பேர் வெறும் ஆர்வத்துடன், சிறுபிள்ளைத்தனமாக, வாழ்க்கை முழுவதும் முதிர்ச்சி யடையாமலே நின்று விடுகின்றனர்.

அறிவிலிருந்து அறிதலுக்கு முக்கியத்துவம் மாறியவுடனே, உங்களது கவனம் கடந்த காலத்தைப் பற்றியதாக இல்லாமல், நிகழ்காலத்திற்கு வருகிறது. உங்கள் கவனம் மகத்தான தத்துவ ஞானிகளிடம், அறிவாளிகளிடம் இல்லை. அது உங்கள் சொந்த உணர்நிலையைப் பற்றியதாகிறது.

முதல் முறையாக நீங்கள் பொருள்களின் மீது அக்கறை செலுத்தாமல் உங்கள் சொந்த அறிவு பற்றி அக்கறை செலுத்துகிறீர்கள் - பிற பொருட்கள் பற்றி அல்ல, தெரிந்து கொள்ள விரும்புபவனைப் பற்றிக் கவனிக்கிறீர்கள். யார் இது, தெரிந்து கொள்ள விரும்புவது?

இது தான் முதல் தொடக்கம். மாணவன் இறந்து போகிறான். சீடன் பிறக்கிறான்.

இரண்டாவது தீக்கை என்பது இந்த சீடனும் ஒரு பக்தனுக்குள் காணாமல் போவது தான்.

ஒரு சீடனுக்கு இன்னும் தன்னைத் தானே அறிந்து கொள்ளும் வழிமுறைகளைக் கற்றுக் கொள்வதில் ஒழுங்குமுறைகளைக் கைக்கொள்வதில், ஆர்வம் இருக்கிறது. குருவைப் பயன்படுத்திக் கொண்டாக வேண்டும். அதனால் அவன் குருவிடம் நன்றியுணர்வு கொண்டவனாக இருக்கிறான். ஆனால் இங்கு சீடன் தான் முடிவுப் பொருள்; குரு அதனை அடையும் வழி. தனது சொந்த முடிவுகளுக்காக அவன் குருவைப் பயன்படுத்திக் கொள்கிறான்.

அவன் மேலும் அதிகமாக குருவை நெருங்கி வரும்பொழுது குரு அவனை இரண்டாவது தொடக்கத்திற்கு கொண்டு செல்கிறார். இரண்டாவது தொடக்கம் என்னவென்றால், தன்னைப் பற்றிய இந்த வெறியை நீ தூக்கியெறிந்தால் ஒழிய உன்னை நீ ஒரு போதும் அறிந்து கொள்ள மாட்டாய்.

இது முரண்பாடாகத் தோன்றுகிறது. ஆனால் அது அப்படியல்ல. உனது வெறியே உன்னைத் தடுக்கிறது. அது 'தான்' என்ற எண்ணம் மிக்கது. தான் என்பதைத் தூக்கியெறிய வேண்டும், அதை விட்டுக் கொடுக்க வேண்டும். உன்னையே நீ மறந்து விட வேண்டும். உன்னையே நீ மறந்து விடுகின்ற அந்தத் தருணத்தில் தான் நீ உன்னைக் கண்டறிவாய்.

அறிவிலிருந்து அறிதலின் போது, மாணவன் தன்னிலே ஆர்வம் கொள்ளவேயில்லை. அவன் பொருள்களைப் பற்றி, பிற விஷயங்களைப் பற்றி, இந்த முழு உலகத்தைப் பற்றி ஆர்வம் கொண்டிருந்தான். முதல் தொடக்கம் அவனைத் தன்னைப் பற்றியே ஆர்வம் கொள்ளும் ஒரு புது உலகத்திற்குக் கொண்டு வந்தது.

இரண்டாவது தொடக்கம் தான் என்பதை நீக்கி விடுகிறது.

இரண்டாவது தொடக்கம் அவனுக்கு அன்பைக் கற்றுக் கொடுக்கிறது.

தன்னைத் தானே அறிந்து கொள்வது என்பது ஒரு உபபொருள் மாத்திரமே - உன்னால் அன்பு செலுத்த முடிந்தால் நீ உன்னையே எந்தவித சிரமும் இன்றிக் கண்டு கொள்வாய்.

இந்த அன்பு ஒளியில் தான் உனக்குள் இருக்கும் இருள் மறைந்து போகிறது.

அன்பு ஒளிமயமானது. அன்பின் சுவாலை கற்றுக் கொடுக் கப்பட வேண்டிய ஒன்று.

குரு அன்பு செலுத்துகிறார். அவரது முன்னிலை அன்பாகி றது. அவரது முன்னிலையே காந்த சக்தியுள்ளது. ஒரு வார்த்தை கூட கூறாமலே, அவர் அருகில் இருப்பதாலேயே நீ ஒரு ஈர்ப்பு விசையை உணருகிறாய். ஒரு குறிப்பிட்ட அன்பு மற்றும் நம்பிக்கையை உணர்கிறாய்.

குரு என்னும் மனிதனை உனக்குத் தெரியாது. அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமானவரா இல்லையா என்று உனக்குத் தெரியாது. ஆனால் நீ அந்த சவாலை எதிர்கொள்ளத் தயராக இருக்கிறாய். குருவின் முன்னிலை அத்தனை நம்பிக்கையூட்டுவ தாக இருக்கிறது. அங்கே அதை நிருபிக்கும் எந்தவித வாதங் களும் தேவையில்லை.

நான் பல்கலைக்கழகத்தில் ஆசிரியராக இருந்திருக்கிறேன். ஒவ்வொரு வருடமும் ஆசிரியர் தினத்தன்று, பல்கலைக்கழக பேராசிரியர்கள் தம்மை எதிர்கொள்ளும் பிரச்சனைகளைப் பற் றிப் பேச ஒரு கூட்டம் போடுவார்கள்.

ஒவ்வொரு வருடமும் மிக அடிப்படையான, அதிகம் தொந்தரவு தரும் பிரச்சனை என்னவென்றால், மாணவர்கள் அவர்களை மதிக்காதது தான். நான் அந்தக் கூட்டத்தில் முதன் முதலாகச் சேர்ந்து கொண்ட பொழுது அது பல்கலைக்கழகத்தில்

எனது முதல் வருடமாக இருந்தது. அவர்கள் எல்லாரும் மாணவர்களைக் குறை கூறி வெறுத்தொதுக்கிக் கொண்டிருந்த னர். நவீன சமுதாயம் மற்றும் மேலை உலகம் இவற்றையும் வெறுத்தொதுக்கிக் கொண்டிருந்தனர். ஏனெனில் இவை எல்லா மரியாதையையும் நீக்கி விட்டனவாம். ஒரு முதிய பேராசிரியர் மிகவும் மரியாதைக்குரியவர், கலைத்துறையின் தலைவர் இவ் வாறு கூறினார்: "இது மிகவும் வெட்கப்படக் கூடியது. குறிப்பாக, ஏகலைவனைப் போன்ற மாணவர்கள் இருந்த நமது நாட்டிற்கு இந்த நிலை!"

நீங்கள் புரிந்து கொள்வதற்காக இந்தக் கதையை நான் உங்களுக்குச் சொல்லியாக வேண்டும். இது ஒரு மிகப் புராதன மான இந்தியக் கதை.

ஒரு காலத்தில் துரோணாசாரியார் என்ற மிக மகத்தான வில் வித்தை ஆசிரியர் இருந்தார். இளவரசர்கள், செல்வந்தர்கள், உயர்குல இந்துக்கள், வீரர்கள் இவர்கள் தூர தேசங்களிலிருந்து வந்து இவரிடம் வில் வித்தையைக் கற்றுச் செல்வது வழக்கம்.

இந்து சமுதாயம் நான்கு வர்ணங்களாகப் பிரிக்கப்பட்டிருந் தது. உலகம் முழுவதிலுமே இது தான் மிகவும் அருவருக்கத்தக்க பிரிவு; இது ஐந்தாயிரம் வருடங்களாக இருந்து வந்துள்ளது. இந்து சமுதாயத்தில் நான்கில் ஒரு பகுதி மக்கள் மனிதர்களைப் போலவே நடத்தப்படவில்லை. அவர்கள் சூத்திரர்கள், தீண்டத்த காதவர்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்களைத் தொடுவ தும் தகாது. எதிர்பாராத விதமாக நீங்கள் ஒரு சூத்திரனைத் தொட்டு விட்டால், உங்களைச் சுத்திகரித்துக் கொள்ள நீங்கள் உடனடியாக குளித்தாக வேண்டும். ஒரு சூத்திரன் மட்டுமல்ல, அவனது நிழல் கூடத் தீண்டத்தகாதது. ஒரு சூத்திரன் உங்களைக் கடந்து செல்லும் போது அவனது நிழல் உங்கள் மீது பட்டால் கூட, நீங்கள் குளித்தாக வேண்டும்.

ஏகலைவன் என்ற இளைஞன் சூத்திரனாகப் பிறந்தவன். ஆனால் அவன் ஒரு வில் வீரனாக வேண்டுமென்று விரும்பி

னான். அவன் தானாகவே வில் வித்தையைக் கற்கத் தொடங்கினான். அவனது குலப் பெரியோர்கள் சொன்னார்கள்: ''உன்னை எந்த ஆசிரியரும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை'' என்று. அதுவும் அவனுக்கு நன்றாகவே தெரியும்.

எனவே அவன் சொன்னான்: ''எந்த ஒரு ஆசிரியரும் நான் போவதற்கு முன்னால், நானே நிறையக் கற்றுக் கொள்ளப் போகிறேன். அப்போது அவரால் என்னை மறுத்து ஒதுக்க முடியாது.'' எனவே அவன் கற்றுக் கொண்டான். போதுமன அளவு தெரியும் என்று அவன் நினைத்த போது, அந்நாளில் மிகப் பெரிய வில் வித்தை ஆசானான துரோணரிடம் சென்றான்.

இந்த இளைஞன் தானாகவே நிறையக் கற்றுக் கொண்டிருப் பதைக் கண்டு துரோணர் பெரும் வியப்படைந்தார். எனினும் துரோணாசாரியார் ஒரு பிராமணர். மிகவும் உயர்ந்த இந்துக் குலத்தவர். அவரால் ஏகலைவனை சீடனாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எனவே அவர் அவனை நிராகரித்து விட்டார்.

ஆனால் ஏகலைவன் சாதாரண மனிதர்களைப் போன்றவன் அல்ல; வேறுவிதமானவன். அவன் காட்டிற்குள் சென்று துரோணரைப் போல் ஒரு உருவம் செய்தான். இந்தச் சிலைக்கு முன்பாக, தொடர்ந்து தனது பயிற்சியைச் செய்தான். வெகு விரைவில் துரோணரின் சிலைக்கருகில் பயிற்சி செய்த ஏகலை வன் ஒரு பெரிய வில் வீரனாக ஆகி விட்டான் என்ற செய்தி எங்கும் பரவத் தொடங்கியது.

துரோணருக்கு ஒரு இலட்சியம் இருந்தது. அது அவரது சீடனான இளவரசன் அர்ஜுனன் மனித குல சரித்திரத்திலேயே மிகச் சிறந்த வில்லாளனாக வர வேண்டும் என்பது தான். அவனும் சிறந்த வில் வீரன் தான். ஆனால் இந்த ஏகலைவன் அந்த லட்சியத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தான். அவன் அர்ஜுனனை விட அதிகப் புகழ் அடைந்து கொண்டிருந்தான்.

துரோணர் காட்டிற்குச் சென்றார்.

இங்கு தான் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் உள்ளது. இதனால் தான் கலைத் துறையின் தலைவர் ஏகலைவனின் பெயரைக் குறிப்பிட்டார்.

அவன் துரோணரால் நிராகரிக்கப்பட்டவன். எந்த ஒரு சாதாரண மனிதனும் இதனால் தான் அவமதிக்கப்பட்டதாக உணர்வான். ஆனால் இதற்கு மாறாக, ஏகலைவன் துரோணரைப் போல ஒரு சிலை செய்தான். ஏனெனில் அவன் அவரைத் தனது குருவாக ஏற்றுக் கொண்டிருந்தான். துரோணர் அவனைத் தனது சீடனாக ஏற்றுக் கொண்டாரோ இல்லையோ, அவனை அவர் ஏற்றுக் கொண்டாக வேண்டும். இங்கே எத்தனை ஆழமாக அவன் அவரைத் தனது குருவாக ஏற்றுக் கொண்டான் என்பது தான் முக்கியம்.

துரோணர் காட்டுக்கு வந்த போது அவன் அவர் காலில் விழுந்தான். துரோணர் அவன் கற்றுக் கொண்டது எவ்வளவு என்று கண்டு கொண்டார். நிச்சயமாக அவன் அர்ஜுனனை விட மிகவும் முன்னேறிச் சென்றிருந்தான். அர்ஜுனன் மிகச் சிறந்த வில் வீரனாக விளங்கப் போவதுமில்லை. இது தான் துரோணாசாரியாரின் ஆழமான இலட்சியமாக இருந்து வந்தது. இவர் ஏகலைவனை மறுத்து விட்டவர். இப்போது கூறினார்: ''நீ எனது சிலையின் முன்பாகப் பழகி வந்துள்ளாய். நீ என்னை உன் குருவாக ஏற்றுக் கொண்டு விட்டாய்.''

ஏகலைவன் கூறினான்: ''நான் எப்போதும் உங்களை என் குருவாகத் தான் எண்ணி வந்துள்ளேன். நீங்கள் என்னை மறுத்து விட்ட போதும் தான். உங்கள் மறுப்பை பற்றி நான் கவலைப் படவில்லை.''

துரோணர் கூறினார்: ''நான் உன்னை என் சீடனாக ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் நீ குருதட்சணை தர வேண்டும். ஒவ்வொரு சீடனும் குருவிற்கு தட்சணை தர வேண்டும். நீ நுழைவுக் கட்டணம் கூடக் கட்டவில்லை. ஆனால் நீ இத்தனை பெரிய வில் வித்தைக்காரனாக ஆகிவிட்டாய்.''

"நீங்கள் என்ன கேட்கிறீர்களோ, அது என்னிடம் இருந்தால் நான் அதைத் தருகிறேன். நான் எனது உயிரையும் தருவேன். நீங்கள் எனது குரு. நீங்கள் சொன்னால் போதும். ஆனால் நான் ஏழை - எனவே என்னிடம் இருப்பது எதுவோ அதைக் கேளுங்கள்'' என்றான் அப்பாவி இளைஞன்.

துரோணர் சொன்னார்: "ஆம். உன்னிடம் இருப்பதைத் தான் நான் கேட்பேன். எனக்கு உனது வலது கை கட்டை விரல் வேண்டும். அதை வெட்டி என்னிடம் கொடுத்து விடு.''

இது ஒரு அசிங்கமான கதை. ஏகலைவனின் கட்டை விரல் வெட்டப்பட்டதும் அவனது வில் வித்தையின் கதை முடிந்து விடும் என்பது தான் இதன் திட்டம். அவன் அப்போது அர்ஜுனனுக்குப் போட்டியாக இருக்க மாட்டான். அவனது கட்டை விரலை பெறுவதற்காகவே துரோணர் அவனைத் தனது சீடனாக ஏற்றுக் கொண்டார்.

ஏகலைவ!ன், மறுவார்த்தை பேசாமல் தனது வாளை எடுத்து தன் கட்டை விரலை வெட்டி வீழ்த்தினான். அதை எடுத்துத் தனது குருவிடம் கொடுத்து, "வேறு ஏதாவது வேண்டுமா, என்னிடம் சொல்லுங்கள்'' என்றான்.

இந்தக் கதையை நீங்கள் பின்புலமாக அறிந்து கொள்ள வேண்டும்.

இப்போது பேராசிரியர் கூறினார்: "இந்த நாடு ஏகலைவனை உருவாக்கியுள்ளது. தன்னை வெறுத்து ஒதுக்கிய குருவான துரோணரைக் கூட அவன் மதித்துப் போற்றினான். இப்போது நாடு மிகவும் மோசமாகி விட்டது. மாணவர்கள் ஆசிரியர்களை மதிப்பதே இல்லை. இதற்கு ஏதாவது செய்தாக வேண்டும்.''

நான் மிகவும் புதியவனாக இருந்தேன். எல்லாத் துறையின் தலைமைப் பேராசிரியர்களுடன் அது எனது முதல் கூட்டம். நான் எழுந்து நின்று அந்த முதியவரிடம் சொன்னேன்: "நீங்கள் சில கேள்விகளை எழுப்பியுள்ளீர்கள். ஒன்று, இது ஏகலைவ

னைப் போன்ற மாணவர்களைக் கொண்ட நாடு. ஆனால் இதே நாட்டில் தான் துரோணரைப் போன்ற ஆசிரியர்களும் தோன்றி யுள்ளனர். அருவருக்கத்தக்க தந்திரபுத்தியுள்ள, மனிதத் தன்மை இல்லாத ஆசிரியர் அவர். அவர் மிகவும் மனிதாபிமானமற்ற முறையில் நடந்து கொண்டார். அவரை ஏன் நீங்கள் மறந்து விடுகிறீர்கள்?

"முதலாவதாக, ஒரு ஏழை இளைஞனை தீண்டத்தகாதவன் என்று கூறி ஒதுக்கி விடுகிறீர்கள். இரண்டாவதாக, அவன் தானாகவே சாதித்து முடித்த பின்னர், அவனை சீடனாக ஏற்றுக் கொள்கிறீர்கள். அதுவும் நடுக்காட்டில்; என்ன நடக்கிறதென்று யாரும் அறியாத இடத்தில்! அது கூட ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காகத் தான் - அவனது வலது கையை முடமாக்கி அவனது வில் வித்தையை பாழ் பண்ணுவதற்காக. இதனால் அர்ஜுனன் தான் வில்வித்தையில் உலகெங்கிலும் தேர்ச்சி பெற்றவன் என்ற உங்கள் இலட்சியம் நிறைவேறுவதற்காக."

நான் கூறினேன், "இதை நீங்கள் மறந்து விடக் கூடாது. துரோணரைப் போன்ற ஆசிரியர்களால் தான் இந்தியாவில் ஆசிரியர்கள் தமது மதிப்பை இழந்து விட்டார்கள். நீங்கள் துரோணாசாரியாரின் பிரதிநிதி. எந்த அடிப்படையில் மாணவர் கள் உங்களை மதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?

"மேலும் நீங்கள் ஏகலைவனைக் குறிப்பிட்டுப் பேசுகிறீர் கள் என்பதைக் கூட நீங்கள் உணர வில்லை. என்னைப் பொறுத்தவரையில், என்னால் இதைப் பார்க்க முடியவில்லை. எனக்கும் மாணவர்கள் இருக்கிறார்கள். நான் ஒரு புதிய பேராசிரியர். ஒரு மாணவன் கூட என்னிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டு நான் பார்த்ததில்லை. நான் அவர்களை நேசிக்கிறேன். மதிக்கிறேன். அன்பு பிறரில் எதிரொ லிக்கும். மரியாதை மற்றவரில் மரியாதையை உருவாக்கும். இவை பிரதிபலிப்புகள். நான் ஏகலைவனின் இடத்தில் இருந்திருந் தால், துரோணரின் தலையை வெட்டி எறிந்திருப்பேன். அவ ருக்கு சரியாக அதுதான் வேண்டும்!"

முதியவர் பெரும் அதிர்ச்சி அடைந்தார். அவரது உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

நான் கூறினேன்: "நீங்கள் நடுங்கிக் கொண்டிருக்கிறீர்கள். எனவே அமர்ந்து கொள்ளுங்கள். உங்களுக்கு மாரடைப்பு வந்தால் அதற்கு நான் பொறுப்பாளி ஆவேன். தயவு செய்து உட்காருங்கள். நான் உங்கள் தலையை வெட்டி எறியப் போவதில்லை. எனினும் அந்த மாதிரித்தான் உங்களையும் நடத்த வேண்டும். நீங்கள் ஏகலைவனைப் போன்ற மாணவர்களைக் கேட்கிறீர்கள். ஆசிரியர்களைப் பற்றி என்னவாது?''

குரு ஒரு ஆசிரியர் அல்ல. அவர் அன்பு செலுத்துகிறார். அவரே அன்பாக இருக்கிறார் என்று சொல்வது மேல். அவர் மதிப்பு அளிக்கிறார். அவரே மதிப்பாக இருக்கிறார் என்பதே சரி.

இயல்பாகவே, அவர் அன்பு மரியாதை நன்றி என்ற உணர்வுகளுக்கான ஒரு ஈர்ப்பு விசையை உருவாக்குகிறார். இந்த ஈர்ப்பு விசை பகுதியில் இரண்டாவது தீக்கை நிகழ்கிறது.

பக்தனுக்கு இதற்கு மேலும் தன்னைப் பற்றி அறிந்து கொள்வதில் ஆர்வம் இல்லை. அவனது ஆர்வமெல்லாம், எப்படி குருவோடு கரைந்து போவது, குருவோடு இணக்கம் அடைவது என்பது தான். பக்தன் தனது எல்லைக்கு வந்து விடுகிறான். பக்தனின் வாழ்க்கை நீண்டதாக இருப்பதில்லை. மிக நீண்ட வாழ்க்கை மாணவனுடையது தான். பக்தனின் வாழ்க்கை மிகக் குறுகியது.

அது ஒரு தாமரை மலரிதழில், அதிகாலை சூரிய ஒளியில் ஒரு பனித்துளி சறுக்கிச் சென்று கடலில் கலப்பது போன்றது. தாமரை இலையிலிருந்து உடலில் சறுக்கிக் கலப்பதற்கான ஒரு சிறிய மணித்துளி தான் அந்தப் பனித்துளி.

பக்தனின் வாழ்க்கை மிக் நீளமானது அல்ல, அது மிகவும் குறுகியது. ஏனெனில் நீங்கள் ஒரு முறை இணக்கத்தை ருசி

பார்த்து விட்டால், ஒருமையை ருசி பார்க்க உங்களால் காத்துக் கொண்டிருக்க முடியாது. காத்திருப்பது இயலாத காரியமாகி விடுகிறது. பனித்துளி வெகுவேகமாக ஓடி கடலில் விழுந்து கடலோடு ஒன்றாகி விடுகிறது.

இதை இரண்டு விதமாகச் சொல்லலாம். இந்தியாவின் தலைசிறந்த ஞானியான கபீர் மட்டுமே இந்த இரண்டு வழிகளை யும் பயன்படுத்தி இருக்கிறார்.

அவர் முதல் முறை கடலில் வழுக்கிச் சென்று விழுந்த போது, ஒரு சிறிய அறிக்கையை எழுதினார். அதில், ''நான் என்னையே தேடிக் கொண்டிருந்தேன். ஆனால் நண்பனே, என்னைக் கண்டு பிடிப்பதற்கு பதிலாக நான் கடலுக்குள் சென்று மறைந்து விட்டேன். பனித்துளி கடலுக்குள் மறைந்து விட்டது'' என்றார்.

கிட்டத்தட்ட இருபது வருடங்கள் கழித்து, அவர் தனது மரணப் படுக்கையில் இருந்த போது தனது மகன் கமாலை அழைத்து, ''எனது அறிக்கைகளை நீ குறிப்பெடுத்து வைத்திருப் பதைக் கொண்டு வா. நான் சாவதற்கு முன்னால் ஒன்றைச் சரி செய்ய வேண்டும்'' என்றார்.

மேலும் அவர், ''நான் ஓரிடத்தில் பனித்துளி கடலுக்குள் மறைந்து விட்டது என்று சொல்லி இருக்கிறேன். அதை மாற்று. 'கடல் பனித்துளிக்குள் மறைந்து விட்டது' என்று எழுது'' என்றார்.

அவருடைய சொந்த வார்த்தைகள் மிகவும் அழகானவை. முதல் வார்த்தைகள்... பனித்துளி கடலுக்குள் மறைந்து விட்டது. இரண்டாவதில் கடல் பனித்துளிக்குள் மறைந்து விட்டது. ஒருவேளை இவை இரண்டுமே ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாக இருக்கக் கூடும்.

இது தான் மூன்றாவது தொடக்கம். இந்த மூன்றாவது தொடக்கத்திற்குப் பின்னர் தான் தொடர்பு கொள்ளுதல் ஏற்படு

கிறது. அங்கே ஒன்றாக இணைவது இருப்பதால், இனிமேற் கொண்டு பிரிதல் இல்லை. ஒன்றாக இருப்பது மட்டுமே உள்ளது.

ஒரு ஞானியின் பாதை மாணவனாக இருப்பதில் தொடங்கு கிறது. குழுவாக இருப்பதில் முடிகிறது. பனித்துளியாக தொடங் குகிறது. கடலாக முடிகிறது.

*அன்பிற்குரிய பகவான்,*

*உங்களோடு உடலால் நெருங்கி இருக்கும் போது, நான் உங்கள் முன்னிலையில் காணாமற் போய்விடுகிறேன். நான் யாராக இருக்கிறேன் என்று நான் நினைக்கிறேனோ அதை மறந்து போகிறேன். உங்களிடம் இருந்து ஒரு காந்த சக்தி எழுந்து என்னை உங்களிடம் இழுத்துக் கொள்வது போலத் தோன்றுகிறது. என்ன நடந்து கொண்டிருக்கிறது?*

ஓஷோ: என்ன நடக்க வேண்டுமோ அது நடந்து கொண்டு இருக்கிறது.

நீ எனது முன்னிலைக்கு அருகே நெருங்கி வந்து கொண்டு இருக்கிறாய். உனது தனி நபர் தன்மையை உன்னால் முழுதாக உடையாமல் வைத்துக் கொள்ள முடியவில்லை.

உன்னால் எனது முன்னிலையையும், உனது தனி நபர் தன்மையை ஒன்றாக வைத்துக் கொள்ள முடியாது. உனக்கு உனது தனி நபர் தன்மை வேண்டுமென்றால், எனது முன்னி லையை இழக்க வேண்டும். எனது முன்னிலை வேண்டுமென் றால், உனது தனி நபர் தன்மையை இழக்க வேண்டும். இவை இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது.

ஆனால், உனது தனி நபர் தன்மை என்பது என்ன? அதைப் பற்றி நீ எப்போதாவது சிந்தித்துப் பார்த்ததுண்டா? அது உனது துயரங்கள், கவலைகள், நம்பிக்கையிழத்தல், பயங்கரக் கனவுகள் இவற்றையெல்லாம் உள்ளடக்கியது. அது உனது நரகம்.

ஒரு சாதாரண விஷயத்தைப் பற்றி எப்போதாவது எண்ண மிட்டதுண்டா? மனிதன் தொடங்கிய காலந்தொட்டு ஏன் மனிதர் கள் மயக்கம் தரும் போதைப் பொருட்களில் இத்தனை ஆர்வம் காட்டி வந்துள்ளார்கள்?

உலகின் மிகப் பழமையான புத்தகமான ரிக் வேதத்தில் கூட, வேதத்தின் ஞானிகள் கூட சோமரஸம் என்ற மருந்தில் ஆர்வம் காட்டியுள்ளனர்.

இந்த நூற்றாண்டின் தலைசிறந்த அறிவாளிகளில் ஆல்டஸ் ஹக்ஸ்லி ஒருவர். இவர் கீழைநாடுகள் மற்றும் கீழைநாடுகளின் ஞானிகளைப் பற்றி அதிகம் தெரிந்து வைத்திருந்தார். இவர் போதை மருந்தான எல்லெஸ்டி பற்றி ஆய்வுகள் நடத்தினார். வருகின்ற நூற்றாண்டில் எல்லெஸ்டி-ன் மிகச் சிறந்த வடிவம் ஒன்று ரிக் வேதத்தின் சோமரஸத்தின் நினைவாக 'ஸோமா' என்று அழைக்கப்படும் என்று எழுதியிருந்தார்.

அவர் எல்லெஸ்டி சோமரஸத்திற்கு வெகு அருகில் வந்து விட்டதாக வெகு நிச்சயமாகக் கூறினார். ஒருவேளை அவர் கூறுவது சரியாக இருக்கலாம். ஏனெனில் வேத காலத்து ஞானிகளான ரிஷிகள் சோம் என்னும் செடியின் சாறான சோமரஸத்தை அருந்திய பின்பு ஏற்பட்ட விளைவுகளைப் பற்றியும் அவர் களுக்கு நேர்ந்த அனுபவங்கள் பற்றியும் விவரித்து எழுதியுள்ளனர் - எவ்வளவு அமைதி, எவ்வளவு நிம்மதி, எவ்வளவு ஆனந்தம். அவர்களது அனுபவங்கள் எல்லாம், ஆல்டஸ்ஹக்ஸ்லி தனது முதல் எல்லெஸ்டி அனுப வத்திற்கு பிறகு கூறியதை வெகுவாக ஒத்திருந்தன.

எல்லாக் கலாசாரங்களும், எல்லா மதங்களும் மது, ஓபியம், ஹஷீஸ், மாரிஜுவானை போன்ற போதைப் பொருட்களை வெறுத்து ஒதுக்கிப் பேசி வந்துள்ளன. ஆனால் இவையெல் லாம் ஒரு பயனும் இல்லாமல் போயின. மனிதகுலம் தொடர்ந்து போதைப் 'பொருட்களை உட்கொண்டு வருகிறது. இவ்வளவு அறிவாளிகளும் அதற்கு எதிராக இருக்கும் போது ஏன் மனிதர்

கள் அவற்றை உட்கொண்டு வருகின்றனர் என்று யாரும் கேட்பதில்லை. இதில் விநோதமான விஷயம் என்னவென்றால், இதற்கு எதிராக உள்ள அறிவாளிகள் பலரும் இவற்றை உட்கொண்டு வருகின்றனர். ஒருவேளை வேறு விதமான வழிகளில் இருக்கலாம்.

ஒரு நாட்டில், மார்ஜுவனா, ஹஷீஸ் எல்லெஸ்டி இவை சட்டவிரோதமாக இருக்கலாம். ஆனால் மது சட்டவிரோத மில்லை. மற்ற மூன்று மருந்துகளையும் விட மது மிகவும் ஆபத்தானது. ஏன் மது சட்டவிரோதமாக இல்லை? ஏனெனில் யேசு அதை அருந்தினார். கிறித்துவ மதம் அதை சட்டவிரோத மாக்க முடியாது. அப்படிச் செய்தால் யேசு குற்றவாளி ஆகி விடுவார். ஒரு சாதாரண குற்றவாளி மட்டுமல்ல, ஏனென்றால் அவர் தண்ணீரை மதுவாக்கிக் கொண்டிருந்தார்.

மதுவை சட்டவிரோதமாக்க கடும் முயற்சி செய்து கொண் டிருந்த சில நாடுகள், இந்தியாவைப் போன்ற கிறித்துவ நாடு அல்லாத நாடுகள், இதில் தோல்வியடைந்துள்ளன. மதுவிலக்கு விஷயங்களை மேலும் மோசமாக்குகிறது. மக்கள் தமது வீடு களில் தாங்களாகவே மதுவைத் தயாரிக்க தொடங்கி விடுகின்ற னர். மேலும் ஆயிரக்கணக்கான மக்கள் விஷ மதுவால் செத்துப் போகிறார்கள். ஏனெனில் தாங்கள் குடிப்பது என்னவென்று அவர்களுக்குத் தெரிவதில்லை. இது மறைமுகமாக விற்கப்படு கிறது. அது எவ்வாறு தயார் செய்யப்படுகிறது என்று அவர்க ளுக்குத் தெரியாது. இறுதியாக இந்த மது விலக்கை நீக்கிக் கொள்ள வேண்டியதாகிறது.

ஒரு விஷயத்தை நான் உங்களுக்குத் தெளிவாக்க விரும்பு கிறேன். இவ்வாறு அரசுகள், மதங்கள், மதுவிலக்குச் சட்டங்க ளுக்கு எதிராகச் சென்று போதை மருந்துகளைத் தொடர்ந்து உட்கொண்டு வரும் மக்கள், ஒரு குறிப்பிட்ட வாதத்தை முன் வைக்கின்றனர். அதாவது அவர்கள் தங்களது தனிக் குணாம்சங் களை மறந்து விட விரும்புகின்றனர் என்பது தான் அது. அவர்களது தனித்துவம் மிக வேதனை மிக்கது, அவலட்சண

மானது, ஒரு சட்டவிரோதமான செயலைச் செய்தாவது ஒரு சில மணி நேரங்கள் அதை மறக்கத் தயாராக உள்ளார்கள்.

போதை மருந்துகளின் மயக்கும் விளைவு ஒரே ஒரு விஷயத்தைத் தான் நிரூபிக்கிறது. மனிதன் தனது சாதாரண குணாம்சத்தில் துயரத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் சில மணி நேரமாவது தனது கவலைகள், பிரச்சனைகள், துயரங்கள் இவற்றை மறக்க முயலுகின்றான். இதற்கு வழி வேறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

நீ உனது தனி நபர் தன்மையைப் பாதுகாக்க ஏன் விரும்புகிறாய்? உனது தனிநபர் தன்மை தான் உனது பிரச்சனை.

நீ புத்திசாலியாக இருந்தால், உனது தனி நபர் உருகி மறையத் தொடங்கும் ஒரு முன்னிலையை நீ கண்டு கொள்ள லாம். மயக்கம் எதுவுமின்றி, போதைப் பொருள்கள் எதுவுமின்றி -அப்போது அதைவிட மகத்தான ஒரு அருளை உன்னால் நினைத்துப் பார்க்க முடியுமா? தனிநபர் தன்மை மறையட்டும். அது சும்மா ஒரு சுமை மட்டுமே, ஒரு சித்ரவதை, மருந்து ஏதுமற்ற ஒரு கழுத்து வேதனை மட்டுமே.

நீ என்ன நினைக்கிறாய் அம்ரிடோ? கழுத்து வலிக்கு மருந்து ஏதாவது உண்டா? நான் அதைப்பற்றிக் கேள்விப் பட்டதே இல்லை. நான் எனது மருத்துவரைக் கேட்கிறேன். அவர் ஒரு விஷயம் தெரிந்த மருத்துவர். இங்கிலாந்தின் ராஜசபையின் ஒரு அங்கத்தினர்.

தனி மனிதத்துவம் மறையட்டும், ஆவியாகிப் போகட்டும்.

உனது தனி நபர் தன்மை மறைந்து போவது என்பது நீ மறைந்து போவதாகாது. இதை நினைவில் கொள். அதற்கு மாறாக அது உன்னுடைய தோற்றம். உனது தனிநபர் தன்மை மறையும் பொழுது உனது தனி குணாதிசயங்கள் மறைந்து போகின்றது. உனது தனித்துவம் எழுகிறது.

ஓர் தனி நபர் ஆளுமையைக் கொண்டிருப்பது போலி யானது.

தனித்துவம் கொண்டிருப்பது உனது பிறப்புரிமை.

ஓர் குருவின் செயல்பாடு என்பது நீயாக அல்லாத எல்லா வற்றையும் எடுத்தெறிந்து விட்டு, முக்கியமாக நீயாக உள்ளதை உனக்கு உயிர் வாழ்தலினால் தரப்பட்டதை மட்டுமே விட்டு விடுவதுதான்.

எனக்க இது புரிகிறது. அங்கே ஒரு அச்சம் எழுகிறது. உனது தனி நபர் தன்மையுடன் நீ நெடுங்காலமாக வாழ்ந்து விட்டாய். அதோடு உன்னை ஒருங்கிணைத்துக் கொண்டுள் ளார். அது மறையத் தொடங்கும் போது ஒரு பயம் எழுகிறது. என்ன நடக்கிறது? நான் மறையத் தொடங்குகிறேனா?

இப்போது உண்மையாக உள்ளது மறையப் போவ தில்லை. உண்மையாக அல்லாதது மறைந்து போவது அவசி யம். எனவே துணிவுடன் இரு.

உனது தனி நபர்த்தன்மை உன்னை விட்டுப் போகும் போது அதற்கு முற்றுமாக விடை கொடுத்து விடு. திரும்பி விடாதே. வேறு யாரையாவது கண்டு பிடி. சுற்றிலும் எத்த னையோ பேர் இருக்கிறார்கள். ஏனெனில் ஒரே ஒரு தனி நபர் தன்மையை மட்டுமே கொண்டு இருக்காத பல நபர்கள் உள்ளனர். அவர்கள் செல்வந்தர்கள், அவர்களிடம் பல தனி நபர் தன்மைகள் உள்ளன. அவர்கள் தனது மனைவியுடன் இருக்கும் போது ஒரு தனி நபர் தன்மையையும், தமது காதலியுடன் இருக்கும் போது மற்றொரு தனி நபர் தன்மையை யும் கொண்டு இருக்கிறார்கள். ஒரு தனி நபர் தன்மை போதாது. அவர்கள் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறார்கள். அது ஒரு தானாக நிகழும் செயலாகி விடுகிறது.

இந்தக் காலத்தின் தலை சிறந்த குருக்களில் ஒருவரான ஜார்ஜ் குர்ட்ஜிஃப் சில வழிமுறைகளைக் கையாண்டார். இவற்றுள்

ஒன்று உங்கள் தனி நபர் தன்மைகளை உங்களுக்குத் தெரியப் படுத்துவதாகும். அவர் இதில் மிகவும் கைதேர்ந்தவர். நீங்கள் அவரது வலது புறத்திலும் உங்கள் நண்பர் அவரது இடது புறத்திலும் உட்கார்ந்திருக்கலாம். ஒருவருக்கு அவர் கோபமான முகத்தையும் மற்றவருக்கு அவர் மிக சாந்தமான ஆனந்தமான அன்பு நிறைந்த முகத்தையும் காட்டுவார்.

பின்னர் நீங்கள் சந்தித்துக் கொள்ளும் போது ஒருவர், 'என்ன மனிதன்! எனக்கு மிகவும் பயமாக இருந்தது. முழு நேரமும் அவர் மிகவும் கோபமாக இருந்தார்' என்பார்.

மற்றவரோ, 'நீ என்ன சொல்கிறாய்? அவர் மிகவும் அன்புடன் புன்னகைத்தபடியே இருந்தார்' என்பார். பின்னால் தான் அவர் ஒரு விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார் என்று தெரிய வரும். அவர் தனி நபர் தன்மைகளை மாற்றிக் கொள்ளும் கலையை மிக நன்றாகத் தெரிந்து வைத்திருந்தார். ஒரே சமயத்தில் அவரால் இரண்டு தனி நபர் தன்மைகளைப் பயன்படுத்த முடியும்.

குர்ட்ஜிஃபால் ஒரு பாதி தனி நபர்தன்மையைத் தனது மனைவியிடமும் மறுபாதியை காதலியிடமும் காட்ட முடியும். இது ஒரு நெடிய பயிற்சி.

அதற்குத் தேவையில்லை. உன்னிடம் ஒரு தனி நபர் தன்மை இருந்தாலும் பல இருந்தாலும் அவையெல்லாம் குப்பை தான். அவற்றை விட்டு விடு. நீ நீயாகவே இரு.

முதலில் அது சற்றே சங்கடமாக இருக்கும். நீ நிர்வாணமாக இருப்பது போல - ஒரு குறிப்பிட்ட வகையில் அது ஒரு நிர்வாணம்தான். ஆனால் வெகு விரைவில் நீ நீயாகவே இருப்பதன் அழகையும் கள்ளமற்ற தன்மையையும் நீ புரிந்து கொள்வாய்.

எனது தாத்தா இறந்து போனார். நாங்கள் மிக நல்ல நண்பர்கள். எனது குடும்பத்திலேயே நாங்கள் இருவரும்தான்

நல்ல நண்பர்களாக இருந்தோம். யாருமே என்னோடு சுமூகமாக உணர்ந்ததில்லை. யாருமே அவரோடும் சுமூகமாக உணர்ந்ததில்லை. அவர் மிகவும் வயதானவர். ஆனால் ஒரு தொந்திரவு உண்டாக்கும் மனிதர். ஆனால் என்னோடு அவர் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார்.

நாங்கள் இருவரும் ஒன்றாக ஆற்றுக்கு, கோவிலுக்கு, பொதுக் கூட்டங்களுக்குப் போவோம். அவர் என்னிடம் சொல்வார்: ''குழப்பம் உண்டாக்கு. ஏதாவது கேள்வி கேட்டுத் தலைவனைச் சங்கடப்படுத்து.''

அவர் ஒரு அருமையான அழகான மனிதன். அவர் இறந்து போனார். எனவே குடும்பம் முழுவதும் சோகத்தில் ஆழ்ந்தது. மக்கள் அழுது கொண்டிருந்தனர்.

நான் அருகிலிருந்த ஒரு இனிப்புக் கடைக்குச் சென்று முதலாளியிடம், ''இன்று செய்துள்ள அத்தனை இனிப்புகளையும் என்னிடம் கொடுத்து விடு'' என்றேன்.

''உனக்குப் பைத்தியமா? உனது தாத்தா இறந்து விட்டார். நீ கேள்விப்படவில்லையா?'' என்றான் அவன்.

''அதனால்தான்! மரணத்தில் கொண்டாட்டம். நாங்கள் பிரமாதமான நண்பர்கள். உனக்குத் தெரியுமா?'' என்றேன் நான்.

''எனக்குத் தெரியும். ஆனால் உன்னுடைய அப்பா, சித்தப்பா எல்லாம் என்னைக் கொன்று போடுவார்கள். அவன் ஒரு ராஸ்கல். ஆனால் நீ? ஏன் அவனுக்கு இனிப்புகளைக் கொடுத்தாய்? இது கொண்டாடுவதற்கான சமயமா? என்பார்கள்'' என்றான் அவன்.

''நீ எனக்குக் கொடுக்கப் போகிறாயா? இல்லை ஏதாவது தகராறு உண்டு பண்ணவா?''

''வேண்டாம். எனக்குத் தகராறு எதுவும் வேண்டாம். நீ அவற்றை எடுத்துக் கொள். ஆனால் இதற்கு நீதான் பொறுப்பு.''

''நான் எப்போதுமே எல்லாவற்றையும் எனது பொறுப்பில் தான் செய்வேன்'' என்றேன் நான்.

இதற்குள் அங்கே சில நபர்கள் கூடி விட்டனர். ''இந்த எல்லாரும் இதற்கு சாட்சிகள். நான் இந்த இனிப்புகளை எனது பொறுப்பில்தான் எடுத்துக் கொள்கிறேன். இந்த மனிதன் முழுவதும் குற்றமற்றவன். உண்மையில் இவன் என்னைத் தடுக்க முயற்சிகள் செய்திருக்கிறான். ஏனெனில் எனது தாத்தா சொர்க்கத்துக்குப் போயிருக்கிறார். இது கொண்டாட்டத்துக்கான சமயம் என்று அவனுக்குப் புரியவில்லை'' என்று நான் சொன்னேன்.

பின்னர் நான் எனது வீட்டின் முன்பாக உட்கார்ந்து இனிப்புகளை விநியோகித்தேன். எனது குடும்பம் முழுவதும் அங்கே கூடி, ''நீ என்ன செய்து கொண்டு இருக்கிறாய்?'' என்று கேட்டனர்.

''கொண்டாடிக் கொண்டு இருக்கிறேன்'' என்றேன் நான்.

''இது கொண்டாடுவதற்கான சமயமா?'' என்றனர் அவர்கள்.

''உள்ளதைச் சொன்னால், நீங்கள் அனைவருமே கிழவன் செத்து விட்டான் என்று நிம்மதியாக இருக்கிறீர்கள். என்னைத் தவிர யாருமே துக்கமாக இல்லை. ஆனால் நீங்கள் எல்லாரும் போலிகள்'' என்றேன் நான்.

எனது தந்தை, ''அவ்வளவு சத்தம் போட்டுப் பேசாதீர்கள். கூட்டம் கூடி விடும். கூட்டம் கூடி விட்டால் அவன் எப்போதுமே ஜெயித்து விடுவான்'' என்று அவர்களிடம் கூறினார். என்னிடம், ''உனக்கு என்ன விருப்பமோ அதைச் செய்து கொள். அவர் உனது தாத்தா. உனக்குக் கொண்டாட வேண்டும் போல் இருந்தால் நீ கொண்டாடு'' என்றார்.

ஆனால் நான் இனிப்பு கொடுத்தவர்கள் எல்லாம், ''இது சரியான சமயமல்ல'' என்றுதான் கூறினர்.

நான், ''இதுதான் சரியான சமயம். ஏனெனில் என்னைத் தவிர எனது குடும்பம் முழுவதும் கொண்டாடிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் வருத்தமாக உட்கார்ந்து முதலைக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறார்கள். அது சுத்தக் குப்பை. எனக்கு அவர்களைத் தெரியும். இவர்கள் தங்கள் போலித்த னத்தை பிடித்துக் கொண்டு இருக்க வேண்டியதால் அவர்களால் கொண்டாட முடியவில்லை. எனவே நான் இந்த வேலையைச் செய்ய வேண்டியுள்ளது. ஆனால் நான்தான் உண்மையிலேயே வருத்தத்துடன் இருக்கிறேன். ஏனெனில் அவர் எனது நண்ப னாக இருந்தார். மேலும் எல்லாரும் அவர் சொர்க்கத்துக்குச் சென்று விட்டார் என்று சொல்லுகிறார்கள். எனவே ஏன் இதை ஒரு கொண்டாட்டமாக ஆக்கக் கூடாது?'' என்றேன்.

''அவர் நரகத்துக்குச் சென்றிருந்தால் இது சரியாக இருக்கும். முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு கண்ணீருடன் உட் கார்ந்து இரண்டு மூன்று நாட்களுக்கு சாப்பாடு சாப்பிடாமல் முடிந்த அளவு கலாட்டா செய்து கொண்டு இருக்கலாம். ஆனால் அவர் சொர்க்கத்துக்குப் போயிருந்தால் ஏன் நீங்கள் பொறாமைப் படுகிறீர்கள்? கொண்டாடுங்கள், மகிழ்ச்சியாக இருங்கள்.''

இரவு வெகு நேரம் சென்ற பின், எனது தந்தை என்னிடம் கூறினர்: ''முழு நாளும் நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். ஒரு வேளை நீ சொல்வது சரியாக இருக்கலாம். நாங்கள் உண்மை யாக இல்லை. அவர் எப்போதும் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்ததால் நாங்கள் நிம்மதியடைந்தோம். அவர் எப்போ துமே தொந்தரவு தான் கொடுத்துக் கொண்டிருந்தார்.''

எங்கள் கடையில் அவர்கள் அவரை தவிர்த்துக் கொண்டிருந் தனர். அவர் கடைக்கு வந்தால், வேறு எங்காவது அனுப்பி விடுவார்கள். ஏனெனில் அவர் வாடிக்கையாளரிடம், ''அவன் உங்களை ஏமாற்றுகிறான் (அவரது சொந்தமகன்). அந்தத் துணி பன்னிரண்டு ரூபாய் பெறாது. எட்டு ரூபாய் மட்டுமே அதன் மதிப்பு. நீங்கள் சற்று நேரம் காத்திருந்தால் அதை நான் உங்களுக்கு எட்டு ரூபாய்க்கு தருவேன். இல்லா விட்டால்,

உங்களிடம் தூக்கியெறிய அதிகம் பணம் இருந்தால், தூக்கி எறியுங்கள்'' என்று சொல்வார்.

எனவே கடையில் எனது சித்தப்பாக்கள் அனைவரும் எனது அப்பா, எல்லாருமே அவரை தவிர்க்க முயற்சி செய்தனர்.

''வாடிக்கையாளர்கள் வருகிறார்கள். அவரை அனுப்பி விடுங்கள். அவர் என்ன செய்ய விரும்பினாலும் செய்யட்டும். எங்கேயாவது அனுப்பி விடுங்கள். ஆனால் அவர் இங்கே இருந்தால் உண்மையைச் சொல்லி விடுவார்!'

நான் அங்கே இருந்தால், நான் வாடிக்கையாளரிடம் சொல்லு வேன்: ''கொஞ்ச நேரம் பொறுங்கள். எனது தாத்தா வருகிறார். அப்போது இதையே நான்கு அல்லது ஐந்து ரூபாய் குறைத்துப் பெறலாம்!''

எனவே அவர்கள் அவரை மட்டும் தவிர்ப்பது மட்டுமல்லா மல் நான் கடைக்குள் நுழைந்தாலே, ''போஸ்ட் ஆபீசுக்குப் போ'' என்று கூறுவார்கள்.

நான் அவர்களிடம், ''நீங்கள் என்னை வீணாக அலைக்கழிக் கிறீர்கள். உங்கள் தபாலை எல்லாம் சாயங்காலம் ஒன்றாக எடுத்து வையுங்கள். நான் தினமும் போகிறேன். ஆனால் என்னால் இதை நாள் முழுவதும் செய்ய முடியாது. நான் வரும்போதெல்லாம் ஒரே ஒரு கார்டுதான். இதை தபாலாபீஸில் போட்டு விடு என்கிறீர்கள். இது ஒரு தந்திரம்தான். வேறு ஒன்றுமில்லை. நான் கடையில் எனது தாத்தா இருக்கும் போதுதான் போவேன். எங்களில் ஒருவராவது இங்கே இருக்க வேண்டும். இல்லையென்றால் வாடிக்கையாளர்கள் ஏமாற்றப் படுவார்கள், சுரண்டப்படுவார்கள்'' என்றேன்.

எனவே எனது அப்பா சொன்னார்: ''நீ சொன்னது சரி. நாங்கள் எல்லாரும் நிம்மதியாக உணர்ந்தோம். எங்களது கண்ணீர் எல்லாம் பொய்யானது. ஆனால் நீ அதை ஒரு மிகத் திறந்த ரகசியமாக்கி விட்டாய். ஊரிலுள்ள எல்லாருக்கும் இனிப்பு

வழங்கி எனது குடும்பம் முழுவதும் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லி விட்டாய்.''

''நான் சொன்னது சரியென்றால் நீங்கள் இந்த முகமூடிகளை தூக்கி எறிந்து விட வேண்டும். உங்கள் சொந்த அப்பாவின் சாவின் போது கூட உங்கள் முகமூடிகளை உங்களால் தூக்கி எறிய முடியவில்லை. எப்போதுதான் நீங்கள் உண்மையாக இருக்கப் போகிறீர்கள்?''

உங்களது தனிநபர் ஆறாமைகள் எல்லாமே மூடி மறைப்பன. அவை உங்கள் தனித்துவத்தை மறைக்கின்றன.

எனவே நீ அருகில் நெருங்கி வருவதும், ஒரு காந்த சக்தியின் இழுப்பை உணர்வதும் நடந்து கொண்டிருக்கிறது என்றால் அது மிகவும் சரியானது. அதை எதிர்க்காதீர்கள். உதவி செய்யுங்கள். அந்த தனிநபர் ஆளுமைகள் இறந்து போகட்டும். அவற்றின் இறப்பு உங்கள் புது வாழ்க்கையாகும்.

அந்த வாழ்க்கை ஒரு ஆனந்தமாக, கள்ளமற்ற தன்மையாக ஒளியாக, இதயத்தின் ஒரு தொடர்ந்த நடனமாக ஆகும். கொஞ்சம் துணிவு கொள்ளுங்கள்...

என்ன நடக்கிறது என்று கேட்காதீர்கள். அதை நடக்க விடுங்கள். பின்னர் பாருங்கள். நான் சொல்லிக் கொண்டிருப்பது ஒன்றுமேயில்லை. நடக்கப் போவது ஆயிரம் மடங்கு அதிகமாக இருக்கும்.

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் உங்களை மிகவும் நேசிக்கிறேன். எனினும் எனது மனதில் எழும் எத்தனையோ கேள்விகள் எனது இருண்ட பாகத்தை பிரதிபலிக்கின்றன. நான் உங்களுக்கு சலிப்பூட்ட பயப்படுகிறேன். ஆனால் எப்படியோ இந்தக் கேள்விகள் அடிக்கடி மிகவும் உண்மையானதாகவும் நேர்மையானதாகவும் எனக்குத் தோன்றுகின்றன. தயவு செய்து கருத்துத் தெரிவியுங்கள்.*

ஓஷோ: லதீஃபா, ஒரு விஷயத்தைத் தொடர்ந்து நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். எது இருட்டு, எது வெளிச்சம், எது சரி, எது தவறு, எது நல்லது, எது தீயது என்று தீர்வு செய்வதுதான். ஏனெனில் நீ மதிப்பீடு செய்யும் தருணத்திலே நீ அடக்கி வைக்கத் தொடங்குகிறாய். நீ இருட்டு, தீயது, தவறு என்று முடிவு செய்யும் எதையும் காட்ட விரும்புவதில்லை.

அப்போது நீ உன்னில் ஒரு பாதியை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொள்கிறாய். அது நீ பகலை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொண்டு இரவை மறுப்பது போல் ஆகும்.

ஆனால் இரவுக்கு அதற்கே சொந்தமான அழகுகள் உண்டு. அதன் இருட்டும், ஒரு அழகுதான் - அதற்கு ஒரு ஆழம், அமைதி, நிம்மதி உண்டு - விண்மீன்கள், பகலுக்கென்று சொந்தமான அழகு உண்டு என்றால், இரவுக்கும் அதற்குச் சொந்தமான ஒரு அழகு உண்டு. அவை இரண்டும் தனித் தன்மை வாய்ந்தவை, அவை ஒன்றுக்கொன்று ஆதாரமானவை.

நீ செய்து கொண்டிருப்பது என்னவென்றால், நன்றாகத் தோற்றமளிக்கும் கேள்விகளைக் கேட்பதுதான். கெட்டது என்று நீ முடிவு செய்துள்ள கேள்விகளை நீ அடக்கி வைக்கிறாய். இயற்கையாகவே நீ நல்லது என்று அழைக்கும் பகுதி நாள் செல்லச் செல்ல காலியாகி விடுகிறது. நீ கெட்டது என்று சொல்லும் பகுதி மட்டும் உள்ளே நின்று விடுகிறது. அப்புறம் நீ கறுப்பாக இருப்பது எல்லாவற்றுடனும் கொதித்துக் கொண் டிருக்கிறாய். நாட்கள் முடிந்து விடுகின்றன. இரவுகள் மடடுமே மீதமுள்ளன.

இப்போது நீ உன்னைத் திறந்து காட்டப் பயப்படுகிறாய். ஏனெனில் யாருமே இருட்டை மட்டுமே பார்ப்பார்கள். வேறு எதையும் அல்ல. மேலும் அதே நேரத்தில் நீ அது முற்றிலும் உண்மையானது என்று உணருகிறாய். அது உன்னிடம் ஒரு பகுதி.

அது போலியானது அல்ல; ஆனால் முழுப் பிரச்சனையும் உனது மதிப்பீட்டில் உள்ளது.

செய்வது என்பது குற்றங்களில் ஒன்று.

நாம் தொடர்ந்து பிறரை மதிப்பிட்டுக் கொண்டே இருக்கிறோம். அதையே நமக்கும் செய்து கொள்கிறோம். நாம் நமது எண்ணங்களை செயல்களை எது நல்லது, எது கெட்டது, எது செய்யப் பட்டிருக்க வேண்டும், எது செய்யப்படக் கூடாது என்றெல்லாம் தொடர்ந்து மதிப்பீடு செய்து கொண்டே இருக்கிறோம். இதனால் நாம் தொடர்ந்து முரண்பாடுகளையும் இரட்டைத் தன்மைகளையும் உருவாக்கிக் கொண்டே இருக்கிறோம்.

இங்கே என்னுடன் நீங்கள் ஒரு ஒருமையை உருவாக்க வேண்டும். இரவுக்கும், பகலுக்கும் இடையே வாழ்வுக்கும், சாவுக்கும் இடையே ஒரு அழகான இணக்கத்தை உருவாக்க வேண்டும். எதிரெதிர் துருவங்களாகத் தோன்றும் எந்த இரு விஷயங்களுக்கும் இடையே ஒரு முழுமையை உருவாக்க வேண்டும். அப்போது நீ எதை வெளிக் கொண்டு வந்தாலும் அது உங்களை வெளிப்படுத்தி விடும் என்று உணர மாட்டீர்கள். அது சும்மா உங்கள் முழுமையைத் தான் காட்டும்.

ஒரு ரோஜாப்புதரைப் பற்றி சற்றே எண்ணிப் பாருங்கள். அந்த ரோஜாப் புதர் தனது முட்களைப் பற்றிக் கவலைப்பட்டு அவற்றை அடக்க வைக்கத் தொடங்கினால் அதன் முழு சக்தியும் முட்களை அடக்கி வைப்பதிலேயே ஈடுபட்டு விடும்.

ஒருவேளை அதனால் ரோஜாப் பூக்களை கொண்டு வர முடியாமற் போகலாம் அல்லது அது அவ்வாறு கொண்டு வந்தாலும் அவை தகுதியற்ற மலர்களாக இருக்கலாம். ஊன முற்று தொடக்கத்திலிருந்தே செத்துப் போய்க் கொண்டிருக்கும் மலர்களாக இருக்கலாம்.

ஆனால் நீங்கள் முட்களும் மலர்களைப் போலவே ரோஜாப் புதரின் ஒரு அங்கம் என்று ஏற்றுக் கொண்டு விட்டால், எனது

சிறுபிள்ளைப் பருவத்திலிருந்தே நான் ரோஜாப் புதரின் முட்களை ரோஜாக்களின் காவலர்களாக எண்ணி வந்துள்ளேன். நிச்சயமாக அவை காவலர்கள்தான் - அவற்றைப் பாதுகாக்கின்றன. அவை ஒரே வேரிலிருந்து வருகின்றன. ஒரே புதரின் பாகங்கள். ஒரே சாற்றில் உயிர் வாழ்கின்றன. அவை சகோதர சகோதரிகள்; அவை ஒரு ஆழமான இணக்கத்தில் வாழ்கின்றன. அங்கே முரண்பாடு இல்லை. முட்களும் ரோஜாக்களும் சண்டையிட்டுக் கொள்வதை நீங்கள் எப்போதாவது பார்த்ததுண்டா? ஒரு ரோஜாப்புதர் முட்களைக் கொண்டிருப்பதற்காக வெட்கப்பட்டு நீங்கள் பார்த்ததுண்டா?

முட்களுக்கு அவற்றிற்கே சொந்தமான அழகு உண்டு.

தொடர்ந்து மதிப்பீடுகளைச் செய்து கொண்டு இருக்கும் மனம் உங்களுக்குள் துயரத்தை உண்டு பண்ணுகிறது.

ஆனால் நாம் மதிப்பீடு செய்யும்படி கற்றுத் தரப்பட்டுள்ளோம்.

நாம் அக்கறை கொண்டிருக்காத மனிதர்களைப் பற்றிக் கூட நாம் மதிப்பீடு செய்கிறோம். இந்த மனிதன் நல்லவன், அவன் கெட்டவன், உங்களுக்கு அதைப் பற்றி என்ன அக்கறை? அது உங்கள் வேலையா?

அவனது முழுக்கதையும் உங்களுக்குத் தெரிந்திருந்தால் ஒரு வேளை நீங்கள் கெட்டது என்று நினைத்த அந்தச் செயல் முழுவதும் தவிர்க்க முடியாதது என்று எண்ணக் கூடும். இந்த செயல் இல்லாமற் போனால் கதையில் ஏதாவது ஒரு குறை இருந்திருக்கக் கூடும்.

உங்களுக்கு பகுதிகள் மட்டுமே தெரியும். ஒரு கதையிலிருந்து ஒரு பக்கத்தை மட்டும் கிழித்து எடுத்துக் கொண்டு முழுக் கதையையும் அதிலிருந்து மதிப்பீடு செய்வது போல அது முழு முட்டாள்தனம். முதலில் முழுக் கதையையும் படியுங்கள்.

மனித வாழ்க்கையைப் பொறுத்த மட்டில், யாருமே ஒரு தனி மனித வாழ்க்கை முழுவதையும் அறிந்து கொள்ள முடியாது. அது மிகப் பிரம்மாண்டமானது, ஒரு குறுகிய காலத்திற்குள் சுருக்கி வைக்கப்பட்டுள்ளது. எழுபது அல்லது எண்பது வருடங்கள், எத்தனையோ சிக்கல்கள், குழப்பங்கள் - அதை முழுமையாக உங்களால் பார்க்க முடிந்தால் அதில் ஏதோ கெட்டது என்று நீங்கள் சொல்ல மாட்டீர்கள். ஒரு நபரின் வாழ்க்கையின் முழு திட்டத்திலும் அது மிகச் சரியாகப் பொருந்துகிறது.

எது எப்படியானாலும், நாம் யார்? நம்மை யார் நீதிபதிகளாக்கியது?

ஒரு முறை மனம் மதிப்பீடு செய்யும் தந்திரத்தைக் கற்றுக் கொண்டு விட்டதானால், அது தொடர்கிறது. அப்புறம் நீங்கள் தொடர்ந்து உள்ளுக்குள் மதிப்பீடு செய்து கொண்டே இருக்கிறீர்கள் - இது நல்லது, இது கெட்டது, பின்னர் நல்ல பக்கத்தை மட்டுமே எப்போதும் காட்டிக் கொண்டு கெட்ட பக்கத்தை உங்களுக்குள்ளேயே வைத்துக் கொள்கிறார்கள். மிக மிக மெதுவாக, நல்ல பக்கம் அதிகமாக வெளிக்காட்டப்பட்டு அனைவரும் அதில் சலிப்படைந்து விடுகிறார்கள். நீங்களே அதில் சலிப்படைந்து விடுகிறீர்கள். கெட்ட பக்கத்தை உங்களால் காட்ட முடியாது. ஏனென்றால் அது கெட்டது.

உங்கள் முழுமையையும் காட்டுங்கள்.

உங்களது நல்ல பக்கம் மட்டுமே நிச்சயம் சலிப்பூட்டச் செய்யும், மிகவும் உப்புச் சப்பின்றி இருக்கும்.

உங்களது கருமையான பாங்களுடன் அது ருசிகரமாக, மேலும் அதிக ஆர்வமூட்டுவதாக இருக்கும்.

ஒரு நல்ல மனிதனுக்கு வாழ்க்கையில்லை என்று சொல்லப்படுகிறது. நான் இந்தக் கூற்றை ஒப்புக் கொள்கிறேன். இதை யார் சொல்லியிருந்தாலும் சரி, ஒரு நல்ல மனிதனுக்கு என்ன

இருக்க முடியும்? ஒரு கெட்ட மனிதனுக்கு ஒரு வாழ்க்கை இருக்கிறது!

நீங்கள் முழுமையாக இருந்தால், உங்களது வெளிப்பாடுகள் அதிக உயிரோட்டமுள்ளதாக இருக்கும். உப்புச் சப்பற்று சலிப்பூட்டுவதாக இருக்காது. எப்போதுமே ஆச்சரியமான விஷயங்களைக் கொண்டு இருக்கும். மற்றவர்களை மட்டும் ஆச்சரியப்படுத்தாமல் உங்களையும் கூட வியப்பில் ஆழ்த்தும் ''கடவுளே, என்னாலா இதைச் செய்ய முடிந்தது?''

வாழ்க்கை என்பது எவ்வளவு முழுமையுடன் வாழப்பட முடியுமோ அவ்வளவு முழுமையுடன் வாழப்பட வேண்டும். அப்படி வாழ்வதும், அன்பு செலுத்துவதும், இறுதியில் நன்றாகச் சிரிப்பதும் தான் ஒரே வழி. எது சரி, எது தவறு என்று கவலைப்படாதீர்கள்.

சும்மா ஒரு உதாரணத்திற்காக, கடவுள் உலகைப் படைத்தார். நிச்சயமாக சாத்தான் இல்லையென்றால் உலகில் ஒன்றுமே இருந்திருக்காது. உலகைப் படைத்த பெருமை முழுவதும் கடவுளுக்குப் போனாலும், ஆதாம் ஏவாள் இவர்களை அறிவின் மரத்தின் கனியை உண்ண வைத்த சாத்தானுக்கப் போக வேண்டும்.

அவன்தான் முதல் புரட்சிக்காரன். உலகில் கொஞ்சம் உயிரோட்டத்தைக் கொண்டு வந்த முதல் ஆள். இல்லாவிட்டால் இன்று வரை ஆதாமும், ஏவாளும் புல்லைத்தான் தின்று கொண்டிருப்பார்கள். ஈடன் தோட்டத்தில் வேறு எதைத்தான் செய்ய முடியும்? அறிவின் மரத்திலிருந்து முடிவற்ற வாழ்வின் மரத்திலிருந்து எதையும் சாப்பிட வேண்டாமென்று கடவுள் சொல்லியிருந்தார். அதை விட்டால் வேறு என்ன இருக்கிறது? அறிந்து கொள்வது தடை செய்யப்பட்டிருந்தது? வாழ்வது தடை செய்யப்பட்டிருந்தது - சும்மா எருமை மாடுகளைப் போல உட்கார்ந்து புல்லை மென்று கொண்டிருக்க வேண்டும்.

சாத்தானின் கருணையால்தான் இந்த முழு உலகையும் நீங்கள் பார்க்கிறீர்கள். கடவுள் இதை உருவாக்கவில்லை. கடவுள் உருவாக்கிய உலகத்தில் ஆதாமும் ஏவாளும் மிருகங் களைப் போல இருந்தனர். இது மனித குலம் முழுவதும், மகத்தான மனிதர்கள் அனைவரும் - கௌதம புத்தர், யேசு, மோஸஸ், முகமது மற்றும் மகாவீரர் - இவர்களைப் பற்றி எல்லாம் நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். இவர்கள் எல்லாம் தோன்றியது சாத்தானால்தான்.

இதை நினைவில் கொள்ளுவது மிக முக்கியமானது. சாத் தான் என்ற வார்த்தை தெய்வீகம் என்று அர்த்தம் கொண்ட ஒரு சமஸ்கிருத வார்த்தையிலிருந்து வருகிறது. 'தேவ்' என்பது தான் அது. தெய்வீகம் என்ற வார்த்தையும் அதிலிருந்துதான் வருகிறது. சாத்தான் டெவில் என்ற வார்த்தையும் அதிலிருந்து தான் வருகிறது.

சாத்தான் அத்தனை தெய்வீகமான வேலையைச் செய்துள் ளது. இந்த முழுப் படைப்பும் சாத்தானுக்கும் கடவுளுக்கும் இடையிலான ஒரு ஆழமான கூட்டுத் தொழிலால் ஏற்பட்டது தான். கடவுளாலும் அதைத் தனியாகச் செய்ய முடியாது. ஏனென்றால் அவரால் உப்புச் சப்பற்ற பொருள்களைத் தான் உருவாக்க முடியும். சாத்தானாலும் அதைத் தனியாகச் செய்ய முடியாது - ஏனென்றால் அவனுக்குப் புரட்சி செய்யத்தான் தெரியும். அவன் ஒரு புரட்சிக்காரன். எதிராகப் புரட்சி செய்வ தற்கு முதலில் ஏதாவது இருந்தாக வேண்டும். சாத்தான் எதிராகப் புரட்சி செய்வதற்குக் கடவுள் தேவை. அதன் பின்னர் செயல் பாடுகள் நிகழத் தொடங்குகின்றன. வாழ்வும் சாவுமான இரவும், பகலுமான, நல்லதும், கெட்டதுமான சக்கரம் சுற்றத் தொடங்கு கிறது.

வாழ்க்கை எதிர்மறைகளைக் கொண்டது. இதை நினைவில் கொள்ளுங்கள். மதிப்பீடு செய்ய முயலாதீர்கள். சும்மா முழுவ தையும் வாழுங்கள், அது எதுவாக இருந்தாலும் சரி.

நான் உங்களுக்கு முழுமையாகக் கற்றுக் கொடுக்கிறேன். நீங்களோ பகுதிகளை மதிப்பீடு செய்கிறீர்கள். பாகங்களுக்கு எந்தப் பயனும் இல்லை. பாகங்கள் தமது தனித்தன்மையை இழந்து விட்டு ஒரு இசைக் குழு செயல்படுவது போல செயல்படுவதுதான் முழுமையாகும்.

நான் எப்போதுமே எதையும் நல்லது என்றோ கெட்டது என்றோ எண்ணிப் பார்ப்பதில்லை. ஒரு சிறு கணம் கூட எதையும் கெட்டது அல்லது நல்லது என்று எண்ணியதில்லை. இவை இரண்டும் ஒன்றாக இருப்பவை, ஒன்றாகத்தான் அவை இருக்க முடியும். நீங்கள் வாழ விரும்பினால் அவற்றை அவை ஒன்றாக இருக்கும் தன்மையில் வாழுங்கள்.

அவற்றின் ஒன்றாக இருக்கும் தன்மையைக் கண்டு அஞ்சிய மனிதர்கள், 'வாழ்க்கையைத் துறந்து விடு, வாழ்க்கையிலிருந்து தப்பித்துச் செல், ஏனெனில் இங்கே கெட்டதைத் தவிர்க்க முடியாது.' நீ என்ன செய்தாலும் நல்லது செய்தாலும் கூட, தீயதைத் தவிர்க்க முடியாது.

இந்தியாவில் ஜைன மதத்தில் தேராபந்த் என்ற பிரிவு உள்ளது என்பதை அறிய நீங்கள் வியப்படைவீர்கள். பம்பா யில் தேராபந்தின் வழி நடப்பவர்கள் பலர் உள்ளனர். அது மிகவும் நியாயமானது. ஆனால் வெகு விநோதமான ஒரு கொள்கை.

யாராவது ஒருவர் ஒரு கிணற்றில் விழுந்து விட்டால் அவரை வெளியே எடுத்து விடக் கூடாது என்று கூறுகிறது. அவன் கூவியழைத்துக் கொண்டு இருக்கலாம். நீங்களும் கிணற்றின் பக்கத்திலே இருக்கலாம், அங்கே வேறு யாரும் இல்லாமல் இருக்கலாம் - நீங்கள் உங்கள் வழியே செல்ல வேண்டும்; அக்கறை காட்டக் கூடாது. இது மிகவும் விநோதமாகத் தோன்றுகிறது. இது ஒரு அஹிம்சைத் தத்துவம். ஒரு மனிதன் செத்துக் கொண்டு இருக்கிறான். உங்களைக் கவலைப்படாமல் உங்கள் வழியே போகச் சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் இதற்குக் காட்டும் காரணம் குறிப்பிடத் தக்கது. அவர்கள் சொல்லுகிறார்கள், 'இன்று நீங்கள் அவனைக் காப்பாற்றலாம். ஆனால் நாளைக்கு அவன் ஒரு மனிதனைக் கொலை செய்தால்

அதற்கு நீங்கள் கூடத்தான் பொறுப்பு. மேலும் அவனது நாளையைப் பற்றி நிச்சயமாக என்ன சொல்ல முடியும்? இதில் தலையிடாமல் இருப்பதுதான் நல்லது.

முதல் கட்டமாக அவன் கிணற்றினுள் விழுந்து விட்டான். இது அவனது கடந்த கால வாழ்வில் செய்த ஏதோ கெட்ட செயலால் இருக்கலாம். இல்லா விட்டால் அவ்வன் ஏன் கிணற்றில் விழ வேண்டும்? இப்போது அவன் தனது செயலுக்கான தண்டனையைப் பெற்றுக் கொண்டிருக்கிறான்? நீங்கள் அதில் குறுக்கிட்டால் செயல்பாட்டின் மகத்தான விதியினுள் குறுக்கிடுகி றீர்கள். இரண்டாவதாக அவன் நாளைக்கு யாரையாவது கொலை செய்தால் அப்போது அந்தத் தீய செயலில் நீங்களும் பங்கு பெறுவீர்கள். எனவே மௌனமாக மேலே செல்வது நல்லது. அவனுக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று கவலைப் படாமல் இருப்பது நல்லது.'

இந்த மனிதர்கள் தான் மதிப்பீடு செய்து கொண்டு இருப்பார் கள். இப்போது மதிப்பீடு அதன் இறுதி எல்லைக்குச் சென்று விட்டது. ஒருவன் தாகமாக இருக்கிறான். அவனுக்குத் தண்ணீர் கொடுக்காதீர்கள். ஒருவன் பசியோடு இருக்கிறான். அவனுக்கு உணவு கொடுக்காதீர்கள். ஏனெனில் அவன் என்ன செய்யப் போகிறான் என்று உங்களுக்குத் தெரியாது. அவனுக்குத் தண்ணீர் கொடுப்பதன் மூலம் நீங்கள் அவனது வாழ்க்கையில் தலையிடுகிறீர்கள். இல்லா விட்டால் அவன் ஒரு வேளை இறந்து போயிருக்கக் கூடும். அவனுக்குத் தண்ணீர் தருவதன் மூலம் நீங்கள் அவனை உயிரோடு இருக்கச் செய்கிறீர்கள். இப்போது அவன் என்ன செய்தாலும், நீங்கள் அதில் பங்கு கொள்ளப் போகிறீர்கள். நீங்கள் ஒரு தீய செயலைச் செய்யவில்லை ஆனால் வாழ்க்கை அத்தனை எளிமையானது அல்ல. அது ஒரு வேளை தீய செயலாக மாறக் கூடும்.

இது தர்க்க ரீதியில் சரியாகத் தோன்றுகிறது. ஆனால் மிகவும் மனிதத் தன்மை இல்லாத செயல்.

இது மிகவும் நியாயமாகத் தென்படுகிறது. ஆனால் இது இரக்கமற்றது, அன்பற்றது.

ஆனால் விஷயங்களை மதிப்பீடு செய்வதன் நியாயமான இறுதி முடிவு இதுவாகத்தான் இருக்க முடியும்.

நீங்கள் மதிப்பிடுவதை விட்டொழித்து விட்டு மதிப்பிடுதல் இல்லாத ஒரு வாழ்க்கையை அதன் முழுமையில் வாழ வேண்டும் என்று நான் விரும்புகிறேன். முழுமை என்பது நல்லதும் அல்ல, கெட்டதும் அல்ல என்று கண்டு நீங்கள் வியப்படைவீர்கள்.

முழுமை என்பது எல்லாவற்றையும் கடந்தது. அது நன்மைக்கும் தீமைக்கும் அப்பாற்பட்டது.

மனித குலத்தின் முழு சரித்திரத்திலேயும் ஃபிரெடிரிக் நீட்சே என்ற ஒரே ஒரு மனிதன்தான் 'நன்மையையும் தீமையையும் தாண்டி' என்ற புத்தகத்தை எழுதியிருக்கிறான். என்னுடைய உட்பார்வையிலும் புரிதலிலும் அந்த ஒரு மனிதன்தான் மதிப்பிடுதலை அதன் தர்க்க ரீதியான முடிவுக்கு எடுத்துச் சென்று பார்த்திருக்கிறான்.

ஒரு உண்மையான மனிதன் நல்லதையும் தீயதையும் தாண்டி வாழ வேண்டும். நல்லது எது, கெட்டது எது என்று அவன் கவலைப்படுவதில்லை.

அவன் தீவிரத்துடனும் முழுமையுடனும் வாழ்கிறான். அந்தத் தருணம் அவன் என்ன செய்ய அனுமதிக்கிறதோ அவன் செய்ய உணருகிறானோ அதை அவன் செய்கிறான்.

ஆனால் எல்லா மதங்களும், மதவாதிகளும், புனிதர்களும் உட்கார்ந்து கொண்டு இது சரியா தவறா என்பது பற்றி எண்ணமிட்டுக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் சொல்லுவதை நீங்கள் கவனித்தால், வாழ்வது இயலாத செயல் என்று கண்டு கொள்வீர்கள். எல்லாமே தவறாகத் தோன்றுகிறது.

நான் உலகின் மத நூல்களிலே எல்லாம் இதைக் கண்டறிய முயன்று பார்த்துள்ளேன்.

ஒரு வேளை யாராலும் குற்றம் சொல்லப்படாத ஏதாவது ஒரு விஷயம் இருக்குமா? ஆனால் அப்படி இல்லை. எல்லா

வற்றை பற்றியும் ஒருவரோ அல்லது மற்றவரோ எதிராகப் பேசியுள்ளனர். யாராவது ஒருவரோ அல்லது மற்றவரோ சாதகமாகப் பேசும் விஷயங்களும் இருக்கின்றன. எது நல்லது, எது கெட்டது என்று அறுதியிட்டுச் சொல்லக் கூடிய வரையறை என்று எதுவுமே இல்லை.

என்னைப் பொறுத்தவரையிலும் எனது மக்களைப் பொறுத்த வரையிலும் அவர்கள் முழு மனதோடு வாழ வேண்டும். பகலையும், இரவையும் வாழ வேண்டும். எதையும் தவற விட்டு விடக் கூடாது.

உங்களது வாழ்க்கையை இணைவான முழுமையுடன் வாழுங்கள். எல்லாமே ஒன்றுடன் ஒன்று சரியாகப் பொருந்தி யிருக்கும்படியும், அதை ஒரு கலைப் பொருளாக, ஒரு அழகான அம்சமாக ஆக்கும்படியும் வாழுங்கள்.

○

மூன்று

○

## புனிதமான ஒரு அணுகுமுறை

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் எனது கண்களை மூடும் பொழுது ஒரு மிகப் பிரம்மாண்டமான முன்னிலையை பரந்த இருத்தலை ஒரு பேரின்பத்தை உணர்கிறேன். ஆனால் அது நிறைவானது, காலியானது அல்ல.*

*இந்த நிறைவைப் பற்றியும், நீங்கள் பேசிக் கொண்டிருக்கும் ஒன்றுமில்லாததைப் பற்றியும் காலியானதைப் பற்றியும் ஏதாவது சொல்ல முடியுமா?*

ஓஷோ: மைத்ரி, நீ அனுபவித்துக் கொண்டிருக்கும் நிறைவும்; நான் பேசிக் கொண்டு வந்துள்ள ஒன்றுமில்லாத் தன்மையும் இரு வேறு கண்ணோட்

டங்களிலிருந்து காணப்படுகின்ற ஒரே பொருளின் இரண்டு பெயர்கள்தான்.

உலகின் துயரங்கள், கவலைகள், இருள் மற்றும் மரணத்திலிருந்து அதைப் பார்த்தால் அது ஒன்றுமில்லாதது - ஏனெனில் இந்த விஷயங்கள் எல்லாம் அதில் இல்லை. உனது முழு உலகம் என்று அழைக்கப்படுவதும் அதன் அனுபவங்களும் அதில் இப்போது இல்லை.

ஆனால் நீ மீதமிருப்பதைப் பார்க்கும் பொழுது, அல்லது, துயரம் இருள் இவை இல்லாமற் போவதால் வெளிப்படுவதைப் பார்க்கும் பொழுது நீ பேரானந்தத்தால், ஒளி வெள்ளத்தால், ஒரு பிரம்மாண்டமான பேரின்பத்தால், மகத்தான அருளாசியால் நிறைந்து காணப்படுகிறாய். அது ஒரு நிறைவு.

அது உலகத்தால் காலியானது, கடவுளால் நிறைந்தது; உனது போலித்தன்மைகள் இல்லாதது, உனது முக்கியமான உண்மைத் தன்மையால் நிறைந்தது.

இந்த இரண்டு வார்த்தைகளும் முரண்பாடானவை அல்ல. அவை ஒரே அனுபவத்தை இரு வேறு கண்ணோட்டங்களிலிருந்து சுட்டிக் காட்டுகின்றன.

முடிவான இறுதியான ஒரு அனுபவத்திற்கு ஒன்றுமில்லாததை காலியானதைப் பயன்படுத்திய ஒரே நபர் கௌதம புத்தர்தான் என்பதைப் புரிந்து கொள்ளுவது மிக முக்கியமானது. உலகின் பிற எல்லா ஞானிகளும் நிறைவை, முழுமையை இறுதியான அனுபவத்தின் அடையாளமாகப் பயன்படுத்தி உள்ளனர்.

கௌதம புத்தர் ஏன் ஒரு எதிர்மறைப் பெயரைத் தேர்ந்தெடுத்தார்?

உனது சொந்த ஆன்மிக வளர்ச்சிக்கான வெறும் தத்துவக் காரணங்களுக்காக அல்ல; இதைப் புரிந்து கொள்வது முக்கியம். நான் தத்துவக் காரணங்களுக்காகப் பேசுவதில்லை. உயிர்

வாழ்தலின் தொடர்புள்ள அர்த்தம் இருக்கிறது என்று நான் பார்க்கும் போது மட்டுமே நான் பேசுகிறேன்.

நிறைவானது என்ற கருத்து, கடவுள், மிகச் சரியான குறையற்ற ஒன்று, முழுமை மற்றும் இறுதியானது என்ற கருத்து - இவையெல்லாம் நேர் சக்தி கொண்ட பெயர்கள். இதில் மனித மனத்தின் தந்திர குணத்தைக் கண்டு கௌதம புத்தர் பெருவியப் படைந்தார்.

ஒன்றுமறியாத ஞானிகள், அது தமது அனுபவமாக இருந்த தால் இந்த நேர்மறையான வார்த்தைகளைப் பயன்படுத்தினர். இனிமேலும் இல்லாமற் போன துயரத்தைப் பற்றி ஏன் கவலைப்படுவது? இப்போது இருப்பதைப் பற்றி ஏன் ஏதாவது சொல்லக் கூடாது? அவர்களது இருத்தலில் இருந்த இந்த கள்ளமற்ற ஞானிகள் பேசியிருந்தார்கள். ஆனால் பல நூற்றாண் டுகளாக உலகில் இருந்த மனிதர்களின் தந்திர புத்தி இதைப் பயன்படுத்தி வந்துள்ளது.

தந்திர குணமுள்ள மனதிற்கு, நிறைவானது என்ற கருத்தும், நேர்மறைப் பெயர்களும் தான் என்றதை பெரிதுபடுத்தி காட்டும் ஒரு பயணமாக ஆகி விட்டது. "நான் கடவுளாக வேண்டும்; நான் முழுமையடைய வேண்டும், பிரம்மாவாக வேண்டும், அறுதியான விடுதலையை நான் பெற வேண்டும்.'' நமது கூற்றுகளில் எல்லாம் நான் மையம் கொண்டு இருந்தது.

இதில் பிரச்சனை என்னவென்றால் அறுதியான ஒரு அனுப வத்தை தான் என்பதன் நோக்கமாக .நம்மால் ஆக்க முடியாது.

தான் என்பது ஒரு தடை, அது ஒரு பாலமாக ஆக முடியாது.

ஆகவே, எல்லா நேர்மறையான பெயர்களும் தவறாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. தான் என்பதை அழிப்பதற் குப் பதிலாக, அவை அதை அலங்கரிக்கும் பொருள்கள் ஆகிவிட்டன. கடவுள் ஒரு இலட்சியம் ஆகி விட்டார். நீ அந்த

இலட்சியத்தை அடைய வேண்டும். நீ கடவுளைப் விடப் பெரியவனாக ஆகி விட்டாய்.

நினைவில் கொள்ளுங்கள். இலட்சியம் உங்களை விடப் பெரியதாகி விட முடியாது. அடையும் பொருள் அடைபவனை விடப் பெரியதாகி விட முடியாது. இது புரிந்து கொள்ள ஒரு மிகச் சாதாரணமான உண்மை.

ஞானிகளின் இந்த மிக எளிமையான கள்ளமற்ற தன்மை யால் எல்லா மதங்களும் தோற்று விட்டன.

கௌதம புத்தர், ஞானிகளிலேயே மிக அதிகமாகக் கல்வி கற்றவர், நாகரிகம் அடைந்தவர், கலாசாரம் தெரிந்தவர். முழு சரித்திரத்திலும் அவருக்கு ஒப்பிட யாரும் இல்லை. ஒரு தந்திரமான மனம் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பை தமக்குத் தெரியாமலேயே இந்த ஒன்றுமறியாத ஞானிகள் எங்கே கொடுத்து விட்டார்கள் என்பதை அவரால் பார்க்க முடிந்தது. எனவே அவர் இறுதியான லட்சியத்திற்கு எந்த ஒரு நேர்மறைச் சொல்லையும் பயன்படுத்துவதில்லை என்று முடிவெடுத்தார். இதன் மூலம் உங்கள் 'தான்' என்பது அழிக்கப்படுகிறது. உங்களது தான் இதைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடிய சாத்தியப்பாடும் அழிக்கப்படுகிறது.

அவர் இறுதியானதை ஒன்றுமில்லாதது, காலியானது, சூன் யம், பூஜ்யம் என்று அழைத்தார். இப்போது 'தான்' என்பது எவ்வாறு பூஜ்யத்தைத் தனது நோக்கமாகக் கொள்ள முடியும்? கடவுள் லட்சியமாகக் கொள்ளப்படலாம். ஆனால் பூஜ்யம் என்பது இலட்சியமாக ஆக முடியாது.

பூஜ்யமாக வேண்டுமென்று யார் விரும்புவார்கள்? அது தான் பயம். எல்லாருமே பூஜ்யமாக ஆவதற்கான எல்லாச் சாத்தியப் பாடுகளையும் தவிர்த்துக் கொண்டு இருக்கிறார்கள். புத்தர் அதை இறுதியானதின் ஒரு வெளிப்பாடாக ஆக்கினார்.

அவரது வார்த்தை 'நிர்வாணா.'

அவர் ஒரு மிக அழகான வார்த்தையைத் தேர்ந்து எடுத்தார். ஆனால் இறுதியான முடிவான ஒரு அனுபவத்தின் மிக முக்கியமான வெளிப்பாடாக நிர்வாணா என்ற வார்த்தையைத் தேர்ந்தெடுத்ததின் மூலம் அவர் எல்லா சிந்தனையாளர்கள் மற்றும் தத்துவ ஞானிகளை அதிர்ச்சியடைச் செய்தார்.

நிர்வாணா என்பது விளக்கை ஊதி அணைப்பது ஆகும்.

பிற ஞானிகள் நீங்கள் ஒரு பிரமாதமான ஒளி வெள்ளத்தால் நிரப்பப்படுகிறீர்கள், ஆயிரக்கணக்கான சூரியன்கள் உங்களுக்குள் திடீரென்று உதித்தது போல உணர்கிறீர்கள், உங்களது இதயத்துக்குள் விண்மீன்கள் நிறைந்த ஆகாயம் வந்து இறங்கியது போல உணர்கிறீர்கள் என்றெல்லாம் கூறினார்கள்.

இந்தக் கருத்துக்கள் தான் என்பதற்கு கவர்ச்சிகரமாகத் தோன்றின.

தான் என்பதற்கு எல்லா நட்சத்திரங்களும் மார்புக்குள் இல்லை என்றாலும் மார்பிற்கு வெளியே மேற்சட்டையில் தொங்கிக் கொண்டு இருப்பது பிடிக்கும். ''மிகப் பெரிய ஒளி...'' என்றால் தான் என்பது மிகவும் விருப்பத்துடன் இருக்கிறது.

இந்த வேர்களை எல்லாம் அறவே வெட்டிக் களையும்படி, புத்தர், 'இந்த அனுபவம் ஒரு விளக்கை ஊதி அணைப்பது போல உள்ளது' என்கிறார். விளக்கில் ஒரு சிறிய சுடர் ஒரு சிறிய வெளிச்சத்தைக் கொடுத்துக் கொண்டு இருந்தது. அதுவும் போய் விட்டது. உங்களைச் சுற்றிலும் முழுமையான ஆழம் காண முடியாது இருள் சூழ்ந்துள்ளது.

மக்கள் அவரிடம் வந்து சொல்வார்கள், ''நீங்கள் தொடர்ந்து இத்தகைய விஷயங்களைப் பற்றிப் போதித்துக் கொண்டிருந்தால் உங்களை யாரும் பின்பற்றப் போவதில்லை. யாருக்கு இருட்டு வேண்டும், பிரம்மாண்டமான இருட்டு? உங்களுக்குப் பைத்தியம் பிடித்துள்ளது. இறுதியான அனுபவம் என்பது இறுதியான மரணம் என்று நீங்கள் சொல்கிறீர்கள். மனிதர்களுக்கு

நிரந்தரமான வாழ்க்கை தேவை. ஆனால் நீங்களோ இறுதியான மரணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டு இருக்கிறீர்கள்.''

ஆனால் அவர் ஒரு கொள்கை மாறாத மனிதன். நாற்பத்து இரண்டு வருடங்கள் அவர் தான் என்ற அகம்பாவத்திற்கு ஒரு போதும் விட்டுக் கொடுக்காமல், கீழை நாட்டு புத்திச் சாதுர் யத்தை விடாமல் இடித்துக் கொண்டிருந்தார் என்பதை உங்க ளால் காண முடியும்.

அவர் இருள் என்று அழைப்பது மிக அதிகமான ஒளி என்பதையும் அவர் அறிவார். அதனால்தான் அது இருளைப் போலத் தோன்றுகிறது. ஆயிரம் சூரியன்கள் உங்களுக்குள் உதித்தால் என்னாகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? பிரம் மாண்டமான ஒளியை நீங்கள் உணர்வீர்கள் என்றா? அது மிகவும் கண்ணைக் கூசச் செய்யும் வெளிச்சமாக இருக்கும். உங்கள் கண்கள் குருடாகிப் போவது போல நீங்கள் உணர்வீர் கள். ஓராயிரம் சூரியன்கள் உங்களுக்கும் உங்கள் மனதுக்குள் இருந்தால் அந்த அனுபவம் இருளாகத்தான் இருக்கும். வெளிச்ச மாக அல்ல.

அதற்குப் பழக்கப்படுவதற்கு உங்களுக்கு வெகு நேரம் பிடிக்கும். உங்கள் கண்கள் பார்க்கக் கூடிய அளவு சக்தி பெறுவதற்கு - மிக மிக மெதுவாக - இருள் ஒளியாக மாறும், மரணம் வாழ்க்கையாக மாறும், காலியானது நிறைவானதாக மாறும்.

ஆனால் அவர் இதைப் பற்றியெல்லாம் பேசவில்லை. இருள் எப்போதாவது ஒளியாக மாறும் என்று அவர் ஒரு போதும் சொன்னதில்லை.

மேலும் அவர் மரணம் என்பது பின்னாளில் ஒரு சமயம் ஒரு உயிர்த்தெழுதலாக மாறும் என்றும் ஒரு போதும் சொன்ன தில்லை. ஏனெனில் தான் என்பது எத்தனை தந்திரம் வாய்ந்தது என்று அவருக்குத் தெரியும். அது சொல்லப்பட்டால், தான் சொல்லும், அப்படியென்றால் பிரச்சனையில்லை. நமது நோக்

கம் ஒன்றாகத்தான் இருக்கிறது. இதில் நாம் ஆத்மாவின் ஒரு சிறிய இருட்டான இரவைத் தாண்டிச் செல்ல வேண்டி உள்ளது. ஆனால் இறுதியில் நாம் பெரும் வெளிச்சத்தை ஆயிரக்கணக் கான சூரியன்களைப் பெறுவோம்.

கௌதம புத்தர் கடவுள் இருக்கிறார் என்பதையே மறுக்க வேண்டியதாயிற்று. அவர் கடவுளுக்கு எதிராக இருந்தார் என்ப தில்லை. கௌதம புத்தரைப் போன்ற ஒரு மனிதன் கடவுளுக்கு எதிராக இருக்க முடியாது. மேலும் கௌதம புத்தர் கடவுளுக்க எதிராக இருந்தால், கடவுளின் சார்பாக யார் நின்றாலும் அதில பயனில்லை. அவரது முடிவு மனித குலம் முழுமைக்குமான முடிவு. அவர் நமது ஆத்மாவிற்கே பிரதிநிதி ஆகிறார். ஆனால் அவர் கடவுளுக்கு எதிராக இல்லை. அவர் உங்கள் 'தான்' என்பதற்கு எதிராக இருந்தார். உங்கள் தான் என்பது நிலைத்தி ருக்க எந்தவித பற்றுக் கோடும் கொடுக்காமல் இருப்பதில் அவர் தொடர்ந்து கவனமாக இருந்தார். இதில் கடவுள் ஒரு பற்றுக் கோடாக ஆக முடியும் என்றால் அப்போது கடவுள் கூட இல்லாமற் போகிறார்.

ஒரு விஷயம் மிகவும் தெளிவாகிறது. அவர் முதன் முறையாக எல்லா எதிர்மறைப் பெயர்களையும் பயன்படுத்தினா லும் அவர் ஒரு மிகக் கவர்ச்சிகரமான குணங்களைக் கொண்ட மனிதராக இருந்திருக்க வேண்டும். அவர் கோடிக்கணக்கான மனிதர்களை தன் வசப்படுத்தினார். அவரது தத்துவம், கேட்டுக் கொண்டிருப்பவர்களை தடுமாறச் செய்யும். இத்தனை தியானங் கள், தன்னையே வருத்திக் கொள்ளுதல், உலகைத் துறத்தல், ஒரு நாளைக்கு ஒரே ஒரு முறை உணவு உட்கொள்ளல் இவற்றுக்கெல்லாம் என்ன பயன்? இறுதியில் நீங்கள் ஒன்றுமில் லாததைச் சாதிக்கிறீர்கள். ஒரு பூஜ்யம் ஆகிறீர்கள். நாம் ஏற்க னவே இதைவிட மேலாகத்தான் இருக்கிறோம். நாம் ஒரு வேளை மிக மோசமான பூஜ்யங்களாக இருக்கலாம். ஆனால் நாம் இருக்கவாவது குறைந்தபட்சம் செய்கிறோம்.

நிச்சயமாக நீங்கள் ஒரு முழுமையான பூஜ்யமாக இருந்தால் அங்கே எந்தத் துயரமும் இருக்க முடியாது. பூஜ்யங்கள் துயரத்துடன் இருப்பதாகத் தெரிய வந்ததில்லை. ஆனால் இதில் என்ன லாபம்?

ஆனால் அவர் மக்களை நம்பச் செய்தார் - தனது தத்துவத்தின் மூலமாக அல்ல, தனது தனித்துவத்தின் மூலமாக, தனது முன்னிலையின் மூலமாக. அவர் மக்களுக்கு அனுபவத் தைக் கொடுத்தார். அதன் மூலம் அவர்களைப் புரிந்து கொள்ளச் செய்தார். உலகத்தைப் பொறுத்த வரையில் அது காலியாக இருத்தல், தான் என்பதற்கு காலியாக இருத்தல். உயிருருவுக்கு நிறைவாக இருத்தல்.

இந்தியாவில் புத்த மதம் மறைந்து போவதற்குப் பல காரணங்கள் உண்டு. ஆனால் அவற்றுள் இது மிக முக்கியத்து வம் வாய்ந்த ஒன்று. பிற எல்லா இந்திய ஞானிகளும், தத்துவ அறிஞர்களும், யோகிகளும் நேர்மறையான சொற்களைப் பயன் படுத்தி வந்துள்ளனர்.

புத்தருக்குப் பல நூற்றாண்டுகள் முன்பிருந்தே இந்தியா முழுவதும் நேர்மறையான எண்ணங்களையே கொண்டிருந்தது வழக்கமாக இருந்தது. எதிர்மறையான விஷயங்களை யாரும் கேள்விப்பட்டதில்லை. கௌதம புத்திரரின் பாதிப்பின் கீழ் அவர்கள் அவரைப் பின்பற்றினார்கள். ஆனால் அவர் இறந்த பின்னர், அவரைப் பின்பற்றுதல் மறையத் தொடங்கியது - ஏனெனில் அவரைப் பின்பற்றியவர்கள் அறிவு ரீதியாக நம்ப வைக்கப்படவில்லை. அவரது முன்னிலையின் காரணமாக அவர் கள் நம்பிக் கொண்டிருந்தார்கள்.

கௌதம புத்தரின் கண்கள் வழியாக அவர்களால் காண முடிந்தது - "இந்த மனிதர், ஒன்றுமில்லாததில் வாழ்ந்து கொண்டிருந்தால் அப்போது அதில் பயம் இல்லை. நாம் ஒன்றுமில்லாமல் இருக்க மிகவும் விரும்புவோம். பூஜ்யம் என்பது இங்கேதான் வந்து சேருகிறது என்றால் அவ்வாறு

இருப்பதால் கண்களில் இத்தகைய தாமரை மலர்கள் பூக்கின்றன. இத்தகைய எழிலும் நளினமும் ஊற்றெடுக்கிறது என்றால் இந்த மனிதனுடன் செல்ல நாங்கள் தயார். இந்த மனிதனிடம் மந்திர சக்தி இருக்கிறது''

ஆனால் அவரது தத்துவம் மட்டுமே உங்களை நம்பச் செய்யாது. ஏனெனில் அது தான் என்பதற்குக் கவர்ச்சிகரமாக இல்லை.

புத்த மதம் சீனா, இலங்கை, பர்மா, ஜப்பான், கொரியா, இந்தோசீனா, இந்தோனேஷியா ஆகிய நாடுகளில் இந்தியாவைத் தவிர முழு ஆசியாவிலும் தழைத்து வளர்ந்தது - ஏனெனில் அங்கே சென்று சேர்ந்த புத்த மதத்தினர், எதிர்மறைப் பெயர் களைக் கைவிட்டனர். அவர்கள் நேர்மறையான விஷயங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினர். அப்போது இறுதியானது, முழுமை யானது, மிகச் சரியானது - என்ற பழைய வார்த்தைகள் திரும்ப பயனுக்கு வந்தன. இது ஒரு ஒத்துப் போதல் ஆகும். விட்டுக் கொடுத்தல் ஆகும்.

என்னைப் பொறுத்த வரையில் புத்த மதம் கௌதம புத்தரோடு இறந்து போனது. இப்போது புத்த மதம் என்று வழக்கத்தில் இருப்பதற்கும் புத்தருக்கும் ஒரு தொடர்பும் இல்லை. ஏனெனில் அது அவரது அடிப்படைப் பங்களிப்பை விட்டு விட்டது. அதுதான் அவரது எதிர்மறைக் கண்ணோட்டம்.

எனக்கு இரண்டு பாரம்பரியங்களும் தெரிந்துள்ளன. நான் கௌதம புத்தர் இருந்ததை விட மேலான இடத்தில் இருக்கி றேன். கௌதம புத்தருக்கு ஒரே ஒரு விஷயம் மட்டுமே தெரிந்திருந்தது! - அதாவது தான் என்பது நேர்மறை விஷயங் களைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடும் என்பதுதான். அது அவரது மகத்தான பங்களிப்பாக மிகவும் துணிகரமான பங்களிப் பாக இருந்தது. அவர் நேர்மறையைத் தூக்கி எறிந்து விட்டு எதிர்மறையை வலியுறுத்தினார். அழுத்தந்திருத்தமாகக் கூறினார். இது தான் என்பதற்கு கவர்ச்சிகரமான இல்லாததால் மக்கள்

இதைப் பின்பற்ற மாட்டார்கள் என்பதை அவர் மிகச் சரியாகவே தெரிந்து வைத்திருந்தார்.

எனக்கு இப்போது இரண்டு பாரம்பரியங்களும் கிடைக்கப் பெறுகின்றன. நேர்மறைக்கு என்ன ஆயிற்று என்று எனக்குத் தெரியும். தான் என்பது அதைப் பயன்படுத்திக் கொண்டது. கௌதம புத்தரின் மரணத்திற்குப் பிறகு அவரது சீடர்கள் விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. எதற்கு எதிராக கௌதம புத்தர் புரட்சி செய்து கொண்டு இருந்தாரோ அதை விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று.

எனவே நான் உங்களுக்கு இரண்டு அணுகுமுறைகளையும் ஒன்றாக விளக்க முயற்சி செய்து கொண்டு இருக்கிறேன். உலகைப் பொறுத்த வரையில் காலியான நிலை, உள்ளார்ந்த அனுபவத்தைப் பொறுத்தமட்டில் முழுமையான நிலை. இது ஒரு முழுமையான அணுகுமுறை. இது இரண்டையும் கவனத்தில் எடுத்துக் கொள்கிறது. பின்னால் விட்டு விடப்பட வேண்டிய ஒன்றையும், பயனாகக் கொள்ளப்பட வேண்டிய ஒன்றையும். நான் எனது அணுகுமுறையை ஒரே ஒரு புனிதனான அணுகுமுறை என்று அழைக்கிறேன்.

வேறு எல்லா அணுகுமுறைகளும் இதுவரை பாதிப் பாதியாகத்தான் இருந்து வந்துள்ளன. மகாவீரர், சங்கரர், மோஸஸ், முகமது எல்லாருமே நேர்மறையைப் பயன்படுத்தினர்கள். கௌதம புத்தர் எதிர்மறையைப் பயன்படுத்தினர். நான் இரண்டையும் பயன்படுத்துகிறேன். இதில் எந்த முரண்பாட்டையும் நான் பார்க்கவில்லை.

நீங்கள் என்னைத் தெளிவாகப் புரிந்து கொண்டீர்களானால், நீங்கள் இந்த இரண்டு கண்ணோட்டங்களின் அழகையும் அனுபவிக்கலாம். நீங்கள் உங்கள் 'தான்' என்பதால் சுரண்டப் படாமலும் மரணம், இருள் மற்றும் ஒன்றுமில்லாமல் இருப்பதைப் பற்றி பயப்படாமலும் இருக்கலாம்.

மைத்ரி, இவை இரண்டும் இரண்டு விஷயங்கள் அல்ல. இது கிட்டத்தட்ட நான் ஒரு குவளைத் தண்ணீரை உன் முன்னர்

வைத்து - பாதி நிரம்பியும் பாதி காலியாகவும் உள்ளது - உன்னை குவளை நிறைந்துள்ளதா, காலியாக உள்ளதா என்று கேட்பது போன்றது. எந்த பதிலுமே தவறாக இருக்கும். - ஏனெனில் குவளை பாதி நிறைந்ததும் பாதி காலியாகவும் இருக்கும். ஒரு பக்கத்திலிருந்து பார்த்தால் அது காலியாக உள்ளது. மற்றொரு புறத்தில் அது நிறைந்துள்ளது.

உனது வாழ்வின் ஒரு பாதி அன்றாட உலகில் ஒரு பகுதியானது, மற்றொரு பகுதி புனிதமானதின் பகுதியாகிறது. இது மிகவும் துரதிர்ஷ்டவசமானது. ஆனால் இதற்கு வேறு வழியே இல்லை. நாம் அன்றாட உலகிற்கும் புனிதமான உலகிற்கும் ஒரே மொழியைத் தான் பயன்படுத்த வேண்டியுள் ளது.

எனவே நாம் மிகவும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். அன்றாட வாழ்வைத் தேர்ந்தெடுப்பது என்பது மற்றதை இழக்க வேண்டியதாகும். அன்றாட வாழ்வைப் பற்றி நீ எண்ணமிட் டால், புனிதமான வாழ்க்கை காலியாக இருக்கும். புனிதமான வாழ்வைப் பற்றி நீ எண்ணமிட்டால் அது நிரம்பி வழியும்படி நிறைவாக இருப்பதைக் கண்டறிவாய்.

*அன்பிற்குரிய பகவான்,*

*நீங்கள் இந்திய மற்றும் மேலை நாட்டு சன்னியாசிகளைப் பற்றிப் பேசும் பொழுது நீங்கள் கூறிக் கொண்டிருந்தது உண்மை என்று நான் உணர்ந்தேன். சில சமயங்களில் இந்தியர் கள் மிகவும் இதயம் சார்ந்தவர்களாக அதிகம் இருக்கிறார்கள். அவர்களுக்கு மறுப்புத் தெரிவிப்பது கடினமாக இருக்கிறது. எனினும் அவர்களது எதிர்பார்ப்புகளுக்கும் விதிமுறைகளுக்கும் ஒப்புக் கொள்ள முடியாத செயலாகிறது. அவர்கள் செவிடாக இருக்கிறார்கள். இது ஏன் இவ்வாறு இருக்கிறது என்று நீங்கள் விளக்க முடியுமா?*

**ஓஷோ:** இந்த கேள்விக்குப் பல பகுதிகள் உள்ளன.

முதல் பகுதி - இந்தியர்கள் மிக அதிகமாக இதயத்தைச் சார்ந்தவர்களாக இருக்கிறார்கள். இந்தக் கூற்று தவறானது.

ஒருவர் ஒருபோதும் மிக அதிகமாக இதயம் சார்ந்து இருக்க முடியாது. உயிர் வாழ்தலின்படி இது இயலாத காரியம்.

இதயமும் அதன் தன்மைகளும் அதை மிக அதிகமாக நீங்கள் கொண்டிருக்கக் கூடிய தன்மையுடையவை. இதற்குக் கட்டுப்பாடு கிடையாது. வானமே இதற்கு எல்லை.

ஆனால் எனக்கு உன் பிரச்சினை புரிகிறது.

சில சமயங்களில் கீழை நாட்டு மனிதர்கள் மிகவும் அன்பு செலுத்துபவர்களாக இருக்கிறார்கள். இது உனக்குக் கஷ்டமாகத் தோன்றுகிறது. அவர்களுக்கு உன்னால் மறுப்புச் சொல்ல முடிவதில்லை. ஏற்றுக் கொள்ளவும் முடிவதில்லை.

நான் முதன் முதலில் பம்பாய்க்கு வந்தது எனக்கு நினைவுக்கு வருகிறது. நான் ஒரு மதிய உணவுக்கு அழைக்கப்பட்டு இருந்தேன். நான் புதியவனாக இருந்தேன். என்னை இங்கு அழைத்தவர்களும் புதியவர்களாக இருந்தார்கள். எங்களில் யாருமே ஒருவரை ஒருவர் அறிந்திருக்கவில்லை.

அந்த மனிதர் பம்பாய்க்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு முன்னரே வந்திருந்தார். எனது வாழ்வில் நான் சந்தித்த மிக அழகான மனிதர்களில் அவர் ஒருவர் ஆவார். என்னோடு கூட அவர் குறைந்தபட்சம் மேலும் இருபது பேரை அழைத்திருந்தார். உணவு மிக அருமையாக இருந்தது. ஆனால் அவர்கள் அனைவரையும் உண்ணும்படி சும்மா வற்புறுத்திக் கொண்டு இருந்தது நம்ப முடியாதபடி இருந்தது.

அங்கே மூன்று சகோதரர்கள் இருந்தனர். அவர்களில் இருவர் ஒரு நபரைப் பிடித்துக் கொள்ள மூன்றாமவர், 'ஒரே ஒரு லட்டு மட்டும்' என்று வற்புறுத்துவார்.

அந்த மனிதரோ 'நான் செத்து விடுவேன் - என்னை விட்டு விடுங்கள்' என்று சொல்ல முயன்று கொண்டிருப்பார்.

அவர்களோ, 'இந்த ஒன்று மட்டும்!' என்பார்கள். இது முடிவில்லாமற் போனது.

வீட்டுப் பெண்களும் கூட இதற்கு உதவினார்கள். மனிதர்கள் அறையை விட்டு வெளியே ஓட முயன்று கொண்டிருந்தனர். இந்தப் பெண்கள் வாயிலில் நின்று கொண்டிருப்பார்கள்.

நான் அந்த மனிதரிடம், ''உங்கள் அன்பு நன்றாக இருக்கிறது. உங்கள் இனிப்புகளும் நன்றாக இருக்கின்றன. ஆனால் எதற்கும் ஒரு எல்லை உண்டு. அந்த மனிதர் நான் செத்து விடுவேன் என்கிறார். நீங்கள் அவர் சாவைப் பற்றிக் கவலைப் படவில்லை. மேலும் உணவை அவர் மீது திணிப்பதில்தான் குறியாக இருக்கிறீர்கள்'' என்றேன்.

அவர் என்னிடம் சொல்லியதை நான் இன்னும் மறக்கவில்லை. அவர் சொன்னார்: ''நாங்கள் இதைச் செய்யவில்லை என்றால் எனது தந்தையின் ஆத்மா மிகவும் வருத்தப்படும்.''

''கடவுளே! உங்கள் தந்தையின் ஆத்மா கூட இங்கே இருக்கிறதா?'' என்றேன் நான்.

''இல்லை. அதுவல்ல விஷயம். இது எங்கள் பாரம்பரியம். எனது தந்தையின் நாட்களில் இது வழக்கமாக இருந்தது. விருந்தாளி சண்டை போட்டு உங்களை அடித்தால் ஒழிய அவரை விட்டு விடாதீர்கள். விஷயங்கள் அந்த முடிவுக்கு வந்தாக வேண்டும்'' என்றார் அவர்.

நான் சொன்னேன்: ''கேளுங்கள், இதை எனக்குச் செய்யாதீர்கள். ஏனெனில் என்னால் உங்களை அடிக்க முடியாது. உங்களோடு சண்டையிடவும் எனக்கு விருப்பமில்லை.''

''ஆனால் எங்கள் தந்தையின் ஆத்மா...'' என்றார்கள் அவர்கள்.

''மடையர்களே! உங்களது தந்தையின் ஆத்மா இன்னேரம் மறுபிறவி எடுத்திருக்கும். எப்போது அவர் இறந்தார்?''

''இருபது வருடங்கள் இருக்கும்.''

"அவர் எங்கேயாவது ஒரு கல்லூரியில் படித்துக் கொண்டிருப்பார். அவரை மறந்து விடுங்கள். இதற்கும் அவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை."

"நீங்கள் சொன்னால் சரி. ஆனால் நாங்கள் பெரிதும் குற்ற உணர்வு கொள்வோம்."

"நீங்கள் என் மீது எதையாவது கட்டாயமாகத் திணித்தால் நான் மீண்டும் பம்பாய்க்கு வர மாட்டேன்" என்றேன் நான்.

கண்களில் கண்ணீருடன் அவர் என் கால்களைப் பிடித்துக் கொண்டார்.

"அது மிகச் சரி. நான் உங்களைக் கட்டாயப்படுத்த மாட்டேன். ஒரே ஒரு லட்டு, சண்டை வேண்டாம். ஆனால் தொடர்ந்து வந்து கொண்டிருங்கள். நீங்கள் வரும் போதெல்லாம் குறைந்தது ஒரு உணவாவது எனது வீட்டில் உண்பீர்கள் என்று எனக்கு வாக்குக் கொடுங்கள். நாங்கள் உங்களை ஒரு போதும் கட்டாயப்படுத்த மாட்டோம். ஒரே ஒரு லட்டு மாத்திரம் சாப்பிடுங்கள்."

"ஆனால் நீங்கள் என்னைக் கட்டாயப்படுத்துகிறீர்களே, இது வேறு ஒரு வழிமுறை - கண்ணீர், என் காலைப் பிடிப்பது, அது எனது கழுத்தைப் பிடிப்பதிலிருந்து மாறுபட்டது அல்ல. இது அதைவிட மோசம். நீங்கள் எனக்கு மிக அதிகமான இனிப்புகளைக் கொடுத்து விட்டீர்கள். அது நிச்சயம் எனக்குத் தொந்தரவு உண்டாக்கும். எனினும் உங்கள் கண்ணீரைப் பார்க்கும் பொழுது..."

அவர் சொன்னார்: "நான் என்ன செய்வது? எனது தந்தையின் ஆத்மாவைப் பற்றி எண்ணும் பொழுது..."

"உங்கள் தந்தையின் ஆத்மாவை விட்டு விடுங்கள். நான் இந்த லட்டுவைச் சாப்பிட்ட பின் என்னை எதுவும் கேட்க மாட்டீர்கள் என்று உறுதி கூறுகிறீர்களா?" என்றேன் நான்.

"நான் முழுமையாக உறுதியளிக்கிறேன்" என்றார் அவர்.

இந்த வழிமுறையைப் பற்றி நான் அறிந்திருக்கவில்லை அது ஒரு சகோதரரின் வாக்குறுதி. அங்கே மூன்று சகோதரர்கள் மூன்று மனைவிகளுடன் இருந்தனர்.

நான் சொன்னேன்: ''கடவுளே! எனது ஆத்மா உங்கள் தந்தையின் ஆத்மாவைச் சந்திக்கச் சென்று விடும் போல் இருக்கிறது! அவரிடம் ஏதாவது செய்தி சொல்ல வேண்டியிருந் தால் நான் எடுத்துச் சென்று சேர்க்கிறேன். மேலும் நான் திரும்ப வரவே மாட்டேன்.''

அவர்கள் எல்லாரும் தரையில் அமர்ந்து என் கால்களைப் பிடித்துக் கொண்டனர்.

''நீங்கள் வந்தாக வேண்டும்.''

அன்பு என்பது ஒரு விஷயம். இது அன்பு அல்ல.

ஏனெனில் அன்பு என்பது என்னைப் பற்றி கவனித்துக் கொள்ளும், நான் உடல் நலமின்றிப் போகாதபடி பார்த்துக் கொள்ளும். அவர்கள் தமது தந்தையின் ஆத்மாவைப் பற்றி அக்கறை எடுத்துக் கொள்கிறார்கள், என்னைப் பற்றிக் கவலைப் படவில்லை.

எனவே உங்கள் கேள்வியை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. சில சமயங்களில் அவர்களது அன்பு மிக அதிகமாகி றது. அவர்களது இதயம் மிக அதிகமாகிப் போகிறது. உங்களால் மறுப்புச் சொல்ல முடிவதில்லை. ஆம் என்று சொல்லவும் முடிவதில்லை.

ஆனால் கீழை நாட்டு மக்களைப் பற்றி நீங்கள் வெகு தெளிவாக இருக்க வேண்டும். அவர்கள் அன்பை ஏற்றுக் கொள்ளுங்கள். அதற்காக நன்றியுடன் இருங்கள், ஆனால் அது உங்கள் பகுத்தறிவுக்கு எதிராகச் செல்லும் பொழுது இல்லை என்று சொல்லாமல் இருக்க முடியாது. இது பொதுவாக அன்புக்கு எதிராக இருக்கத் தேவையில்லை. நீங்கள் சும்மா உங்களையே பாதுகாத்துக் கொள்கிறீர்கள். உங்களுக்கு உங்க

ளைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமை இருக்கிறது. ஆம் என்று சொல்ல முடியா விட்டால் ஆம் என்று சொல்லாதீர்கள்.

மேலும் அவர்கள் செய்து கொண்டிருப்பது அன்புக்காக அல்ல, ஏதோ ஒரு பாரம்பரியம், ஒரு மரியாதை, ஒரு வழக்கம். இது அன்பில் ஒரு பகுதி அல்ல. அவர்கள் தமது சொந்த பாரம்பரிய வழக்கமான பண்பாட்டு கருத்துக்களைப் பின்பற்றி நிறைவேற்றுகிறார்கள்.

அது அன்பாக இருந்தால் உணவு கட்டாயப்படுத்தபடாது. அப்போது விருந்தாளிக்கு பரிமாறப்பட்டு அவருக்கு என்ன விருப்பமோ, எவ்வளவு விருப்பமோ அதை உண்ண அனுமதிக் கப்படுவார். அன்பு அந்த சுதந்திரத்தை கொடுக்கும்.

இது இதயம் சார்ந்ததும் அல்ல. இதைப் பிரிக்கும் கோடு மிக மெல்லியது. அதனால்தான் எப்படி மறுப்பது என்று உங்களுக்குப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் அத்தனை அன்போடு இருக்கிறார்.எனவே அதற்காகச் சற்றே துன்பப்பட லாம் என்றும் மறுப்புத் தெரிவிக்க முடியாது என்றும் தோன்று கிறது. ஆனால் இது அன்பு இல்லை.

அன்பு ஒரு போதும் யார் மீதும் எதையும் திணிக்காது. அன்பு மேலாதிக்கம் செலுத்தவோ, ஆணையிடவோ செய்யாது.

இதை நீங்கள் அன்பு என்றா அழைக்கிறீர்கள்? இரண்டு பேர் ஒரு மனிதரின் கைகளைப் பிடித்துக் கொண்டு, மூன்றாமவர் ஒரு லட்டுவை அவர் வாய்க்குள் திணித்துக் கொண்டிருக்கிறார். அந்த மனிதனோ, ''நான் செத்து விடுவேன்! நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இப்படி நடக்கும் என்று சொல்லியிருந்தால் நான் வந்தே இருக்க மாட்டேன்'' என்று கூறுகிறார்.

ஆனால் அவர்கள் ஒரு குறிப்பிட்ட கருத்தைக் கொண்டிருக் கிறார்கள். இது பல நூற்றாண்டுகளாக அவர்கள் குடும்பத்தில் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு விருந்தாளி அவர்களை அடிக்கத் தொடங்கவில்லை என்றால் நீங்கள் சரியான விருந்தளிப்பவர்

அல்ல. உமது பெயருக்கு அருகதையானவர் அல்ல. ஒரு வினோதமான கருத்து!

நீங்கள் முடியாது என்று சொல்லியாக வேண்டும். அவர்களுக்கு அடிப்பதுதான் தேவை என்றால், அவர்கள் உணவைக் கட்டாயப்படுத்தித் திணிக்கும் முன்னரே அவர்களை அடிக்கத் தொடங்கி விடுவது நல்லது. அது மட்டும் தான் அவர்களைத் தடுத்து நிறுத்தும். அவர்களது தந்தையின் ஆன்மாவை திருப்தி படுத்தும் என்றால், அவர்கள் உங்கள் உடல் நலத்தைப் பாதிக்கும் முன் அவர்களை அடித்து விடுங்கள்.

விழிப்போடு இருங்கள்; அன்பு என்ற கருத்தைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். அது இடையூறு செய்யாதது எதையும், எதைப் பற்றியும் கட்டாயப்படுத்தாது.

அன்பு என்பது உங்களுக்கு சுதந்திரம் தரும் பொழுதுதான் நேர்மையானதாகின்றது. அன்பு என்றால் என்ன என்று உங்களுக்குக் காட்டக் கூடிய ஒரு வினோதமான கீழைநாட்டுக் கதை எனக்கு நினைவுக்கு வருகிறது.

ஒரு மனிதன் ஒரு பெண்ணின் மேல் மிகுந்த அன்பு வைத்திருந்தான். பெண்ணோ அவனிடம், ''நான் உன்னைத் திருமணம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை'' என்றாள்.

அன்புக்கு நிபந்தனைகள் கிடையாது என்ற ஒரு சாதாரண உண்மையை அவன் அறிந்திருந்தால், அந்த இடத்திலேயே அவளுக்கு விடை கொடுத்திருப்பான். ஆனால் இவன் ஒரு பைத்தியக்காரன், உண்மையிலேயே காதலில் குருடாகிப் போனவன். அவன் எதையும் செய்யத் தயாராக இருந்தான்.

''எந்த நிபந்தனையாக இருந்தாலும் சரி, நான் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றான்.

''எனது நிபந்தனை கஷ்டமானது'' என்றாள் அவள்.

''எதுவானாலும் சரி, கவலைப்படாதே. நீ அதைச் சும்மா சொல்.''

"உனது வீட்டிற்குச் சென்று உனது தாயைக் கொன்று விடு. அவளது இதயத்தை ஒரு தட்டில் வைத்து என்னிடம் கொண்டு வா. இந்த நிபந்தனையின் பேரில்தான் நான் உன்னைத் திருமணம் செய்து கொள்வேன். ஏனெனில் இதுதான் நீ உண்மையிலேயே என்னைக் காதலிக்கிறாய் என்று நிருபிக்கும்" என்றாள் அப்பெண்.

குருட்டுக் காதலால் எதையும் செய்ய முடியும். அவர்கள் இந்தக் கதையில் மட்டுமல்ல, உலகெங்கிலும் அப்படித்தான் இருக்கிறார்கள். அவன் வீட்டிற்குச் சென்று தனது தாயைக் கொன்றான். அவளது இதயத்தை ஒரு தட்டில் எடுத்து வைத்தான். அதை எடுத்துக் கொண்டு வேகமாகச் சென்றான். அவன் தனது காதலியைச் சென்று சேர மிகவும் அவசரமாக இருந்ததில் பாதையில் விழுந்து விட்டான். தட்டு உடைந்து இதயம் தரையில் பல துண்டுகளாகச் சிதறியது.

அந்தத் துண்டுகளிடமிருந்து ஒரு குரல் வந்தது: "மகனே, உனக்கு அடிபட்டு விட்டதா? அதற்கு நான் வருந்துகிறேன். ஆனால் அது என் தவறு அல்ல. துண்டுகளைப் பொறுக்கி எடுத்து வேறு ஒரு தட்டில் வைத்து உனது காதலியிடம் கொண்டு போ!"

இதைக் கேட்டதும் அவன் சட்டென ஒரு கனவிலிருந்து விழித்துக் கொண்டவன் போலானான். அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்? என்ன செய்து விட்டான்? அவனது தாயோ இன்னும் குறை சொல்லவில்லை, கோபப்படக் கூட இல்லை. மாறாக அவள், "உனக்கு அடிபட்டு விட்டதா? நீ கீழே விழுந்து விட்டாயே. நான் எப்போதுமே உன்னை மெதுவாகப் போகச் சொல்லுவேன். நீ அதை ஒரு போதும் கேட்பதில்லை. இப்போது துண்டுகளை எல்லாம் பொறுக்கி எடுத்துக் கொண்டு வீட்டிற்கு திரும்பப் போ!"

அவன் துண்டுகளைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்று அந்தப் பெண்ணைப் பற்றி முற்றிலும் மறந்து விட்டான்.

அப்பெண் காத்திருந்தாள். ஒரு நாள் சென்றது; மறுநாளும் சென்றது. ''என்னாயிற்று?'' என்று எண்ணி அவள் அவனுடைய வீட்டிற்குச் சென்றாள். அங்கே அவன் தனது தாயைக் கொன்று விட்டதைக் கண்டாள்.

''பின்னர் என்னவாயிற்று? இதயம் எங்கே?''

அது ஒரு தட்டின் மேல் துண்டுகளாக இருந்தது.

அவன் சொன்னான்: ''இதுதான் அந்த இடம். ஆனால் வழியில் நடந்த சம்பவம் என்னைத் திரும்பி வரச் செய்து விட்டது. முதன் முறையாக எனக்கு அன்பு என்றால் என்ன என்று தெரியவந்துள்ளது. நான் உன்னிடம் நன்றியுடன் இருக்கிறேன். இல்லா விட்டால் எனது தாய் என் நலனில் இவ்வளவு அக்கறை கொண்டிருந்தாள் என்பது எனக்குத் தெரியாமல் போயிருக்கும். மேலும் என்னையே என்னால் மன்னிக்க முடியவில்லை. நான் என் கரங்களாலேயே அவளைக் கொன்று போட்டேன். இந்த மாதிரி ஒரு நிபந்தனையைப் போட்ட உன்னை...''

அன்பு நிபந்தனைகள் போடாது.

அன்பு நீங்கள் நீங்களாகவே இருப்பதற்கான சுதந்திரத்தை கொடுக்கும். நீங்களாகவே இருக்க உதவி செய்யும். தனக்கு எதிராகவே எதுவும் சென்றாலும் அன்புள்ள மனிதன் தான் அன்பு செலுத்துபவர் துன்பப்படுவதை விட தான் துன்பமடைவதையே விரும்புவான்.

மற்றொரு புராதனக் கதை.

ஒரு பெண் தனது கணவன் மீது மிகவும் அன்பு வைத்திருந்தாள். கணவனோ அவளைக் கவனிப்பதே இல்லை. அவன் ஒரு கணிகையிடம் அன்பு வைத்திருந்தான். கணிகையர் பல வாடிக்கையாளர்களைக் கொண்டு இருப்பதால் அவர்கள் அன்பு செலுத்துவதில்லை என்பதை அவன் நன்கு தெரிந்து வைத்திருந்தான். அவளுக்கு அவன் ஒரு வாடிக்கையாளன் மட்டுமே, காதலன் அல்ல. அவன் தனது வாழ்நாளில் ஒரு வாடிக்கையாள

னிடம் பணம் காலியான பிறகு, கணிகையின் வீட்டுக் கதவு அவனுக்கு மூடப்பட்டு விடும் என்று பார்த்திருக்கிறான்.

அவன் தனது உடல் நலத்தைக் கெடுத்துக் கொண்டான். பணத்தை விரயம் செய்தான். இப்போது சாகும் தருவாயில் இருந்தான். செத்துக் கொண்டிருக்கும் போது அவன் மனைவி கேட்டாள்: ''நீங்கள் திருப்தியுடன் சாகும்படி உங்களுக்கு ஏதாவது இறுதி ஆசை இருக்கிறதா?''

''ஆம், எனக்கு ஒரு ஆசை உள்ளது. அதை உன்னிடம் சொல்வதற்கு வெட்கமாக உள்ளது'' என்றான் அவன்.

''வெட்கப்படாதீர்கள். இது வெட்கப்படுவதற்கான சமய மல்ல. நான் உங்களை நேசிக்கிறேன். நீங்கள் எப்படி இருக்கிறீர் களோ அப்படியே இதில் வெட்கப்படுவதற்கு எதுவுமில்லை'' என்றாள் மனைவி.

''எனது ஒரே விருப்பம் சாவதற்கு முன்பு அந்த கணிகையை ஒரே ஒரு முறை பார்க்க வேண்டும் என்பதுதான்!''

''அதில் ஒன்றும் பிரச்சனையில்லை'' என்றாள் அவள்.

அவன் தனது பணத்தை எல்லாம் தொலைத்திருந்தான். வீட்டில் பணமேயில்லை. அவள் அவனைக் கணிகையின் வீட்டிற்குத் தனது தோள்களின் மீது தூக்கிச் சென்றாள். கதவைத் தட்டினாள். கணிகை கதவைத் திறந்தாள். அவளால் தனது கண்களையே நம்ப முடியவில்லை. அவள் சொன்னாள்: ''நான் என்ன கனவு காண்கிறேனா? இது உண்மைதானா? நீ அந்த மனிதனின் மனைவிதானே?''

''ஆம், நான் அவன் மனைவியும் காதலியும் கூட!''

''அப்படியென்றால் ஏன் அவனை இங்கே கொண்டு வந்திருக்கிறாய்? அவன் உனது வாழ்க்கையை நாசம் செய்தான்; உனது பணம் முழுவதையும் செலவு செய்தான்; என் மீது பைத்தியமாக இருந்தான். என்னைப் பொறுத்தவரையில் பணம் தீர்ந்து போனவுடன் உறவும் போய் விடுகிறது. அவன் ஒரு வெறும் வாடிக்கையாளன் மட்டுமே. இது ஒரு சந்தை. அதுவும்

அவனுக்கு நன்றாகத் தெரியும். நீ ஒரு வினோதமான பெண்' என்றாள் கணிகை.

"ஆனால் இது அவனது கடைசி ஆசை. அவன் உன்னைப் பார்க்க வேண்டும் என்றான். நான் அவனை மிகவும் நேசிக்கிறேன். அதை மறுக்க முடியவில்லை. அவனது சந்தோஷம் தான் எனது சந்தோஷம். அவன் திருப்தியுடன் இறந்தால் நான் எனது கடமையை, காதலை நிறைவேற்றியதுபோல உணர்வேன்" என்றாள் மனைவி.

அந்த மனிதனைப் பற்றி அவனது நடத்தைப் பற்றி ஒரு குறை கூறுதலும் இல்லை. கணிகையின் மீது பொறாமையும் இல்லை.

அன்புக்குப் பொறாமை கிடையாது. குறை கூறுதல் கிடையாது.

அன்பு என்பது ஒரு ஆழமான புரிதல்.

நீங்கள் யார் மீதாவது அன்பு செலுத்தினால், அவரும் உங்கள் மீது அன்பு செலுத்த வேண்டும் என்று அர்த்தமில்லை. அது ஒரு ஒப்பந்தமல்ல.

அன்பு என்பதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்.

உங்களது காதல் உறவுகளிலிருந்து அன்பின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாது.

வினோதமான முறையில், நீங்கள் ஆழமாக தியானம் செய்வதன் மூலம் மேலும் அமைதியாக ஒன்றாக, சௌகரியமாக இருப்பதன் மூலம் அன்பின் அர்த்தத்தைப் புரிந்து கொள்வீர்கள். ஒரு குறிப்பிட்ட சக்தியை நீங்கள் கதிர் வீச்சு செய்யத் தொடங்குவீர்கள். நீங்கள் அன்பாக மாறுவீர்கள். அன்பின் அழகான தன்மைகளைத் தெரிந்து கொள்வீர்கள். அதற்கு சரி என்று சொல்லத் தெரியும். முடியாது என்று சொல்லவும் தெரியும். அது குருடானது அல்ல.

ஆனால் அது உங்கள் தியானத்திலிருந்து வெளி வர வேண்டும். அப்போதுதான் அன்புக்குக் கண்கள் இருக்க முடியும்; இல்லா விட்டால் அது குருடாக இருக்கிறது.

அன்புக்குக் கண்கள் இருந்தாலொழிய அதற்கு மதிப்பு எதுவும் இல்லை. அது உங்களுக்கு மேலும் மேலும் துன்பங்களை ஏற்படுத்தும். ஏனெனில் இரண்டு குருடர்கள், குருட்டுத்தனமான எதிர்பார்ப்புகளுடன் இருப்பது வாழ்வின் துன்பங்களை இரட்டிப்பாக்குவது மட்டுமல்ல; அவற்றைப் பன்மடங்கு பெருக்கவும் போகிறார்கள்.

எனவே அமைதியாக இருங்கள். விழிப்புடன் இருங்கள். அன்புடன் இருங்கள்.

மகத்தான அன்புடன் உங்களால் மறுப்புத் தெரிவிக்க முடியும். மறுப்புத் தெரிவிப்பது உங்களிடம் அன்பு இல்லை என்று அர்த்தமாகாது. ஒத்துக் கொள்வதும் உங்களிடம் அன்பு உள்ளது என்று அர்த்தமாகாது. சில சமயங்களில் ஆம் என்று சொல்வது நீங்கள் வெறுமனே பயத்துடன் இருக்கிறீர்கள் என்று கூட பொருளாகலாம். பயத்திலிருந்து ஒப்புக் கொள்ளுதல் வரலாம். எனவே அன்பு என்றால் ஒத்துக் கொள்ளுதல், மறுப்பு சொல்ல முடியாது என்று அவசியமல்ல.

கண்கள் உள்ள அன்புக்கு எப்போது மறுப்பு சொல்லுவது எப்போது ஒத்துக் கொள்வது என்று தெரியும்.

அன்பு என்பது பிறர் வாழ்க்கையில் தலையிடாது, பிறரைத் தன் வாழ்க்கையில் தலையிட அனுமதிக்காது.

அன்பு பிறருக்குத் தனித்துவம் கொடுக்கும், ஆனால் தனது தனித்துவத்தை இழக்காது.

இது மேலை நாடு அல்லது கீழை நாடு என்பது பற்றிய ஒரு கேள்வியல்ல. நான் உங்களுக்கு சொல்லிக் கொண்டிருப்பது அனைவருக்கும் பொருந்தும். நீங்கள் மேலை நாட்டிலிருந்து வந்திருப்பதுதான் பிரச்சனை என்பது போல நீங்கள் கேள்வி கேட்டிருப்பதால் மட்டும்...

இது நன்றாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும். இது நீங்கள் மேல் நாட்டிலிருந்து வந்திருப்பது பற்றிய விஷயம் அல்ல. இதயமும் பகுத்தறிவும் எப்போதுமே முரண்பட்டு நிற்பது தான் இங்குள்ள பிரச்சனை. மேலை நாடு அதிகமாகப் பகுத்தறிவு சார்ந்தது. ஆனால் அது தனது அரசுகள் மற்றும் கல்வித் திட்டங்களினால் உலகெங்கிலும் பரவியுள்ளது. இப் போது வெகு சுத்தமான ஒரு கீழை நாட்டு மனிதனைக் காண்பது வெகு சிரமம். மேலை உலகம் எல்லாரையும் தனது விஷத்தால் பாதித்து உள்ளது.

பகுத்தறிவு வெகுவாக உயர்ந்துவிட்டது.

எனவே இதை பகுத்தறிவு மற்றும் இதயம் தொடர்பாகப் பாருங்கள் - மேல்நாடு கீழ்நாடு என்று பார்க்காதீர்கள். ஏனெனில் கீழை நாடுகளில் கூட தங்கள் பகுத்தறிவைக் கொண்டு வாழ்ந்து வரும் மக்களுக்கு கலாசாரம் மிக்க, கல்வியறிவு கொண்டவர்கள் அனைவருமே தமது பகுத்தறிவைக் கொண்டு வாழ்ந்து வருகின் றனர். பிரச்சனை ஒன்றேதான்.

இதயத்திற்கு அதற்கென உள்ள மொழி உண்டு, பகுத்தறி வுக்கும் அதன் மொழி உண்டு; இவை இரண்டும் ஒன்றோடு ஒன்று ஒத்துப் போகத் தேவையில்லை. பெரும்பாலும் அவை ஒத்துப் போவதில்லை. ஏனெனில் பகுத்தறிவு மற்றொரு பரிமா ணத்தில் சிந்திக்கிறது.

எனக்கு ஆல்பர்ட் ஐன்ஸ்டைனும் அவரது மனைவி திருமதி ஐன்ஸ்டைனும் நினைவுக்கு வருகின்றனர். அவரது மனைவி ஒரு கவிஞர். அவரோ திருமணம் செய்து கொள்ள முற்றிலும் பொருத்தமற்ற ஒரு ஆசாமி. ஒரு கணித நிபுனர். இயற்பியல் வல்லுநர். கணக்கில் ஒன்றும் ஒன்றும் எப்போதுமே இரண்டு தான். காதலில் ஒன்றும் ஒன்றும் எப்போதுமே ஒன்றுதான். இதன் மொழிகள் மிகவும் மாறுபட்டன.

திருமதி ஐன்ஸ்டைன் ஒரு திறமையான பெண்மணி. இயல்பாகவே அவள் தனது கவிதைகள் சிலவற்றைத் தனது கணவனிடம் காட்ட விரும்பினாள். உலகில் தலைசிறந்த கணித

மேதை, இயல்பியல் நிபுணர், விஞ்ஞானியால் பாராட்டப்படுவதை பற்றி பெரிதும் மகிழ்ந்து இருப்பாள். ஆனால் ஐன்ஸ்டைனின் முகத்தில் எந்தவித பாவத்தையும் கண்களில் எந்தவித மாற்றத்தையும் அவளால் காண முடியவில்லை. அவளது கவிதைகளை அவர் ஒரு கற்சிலையைப் போல இருந்து கேட்டார்.

அவள் ஒரு அழகான கவிதை எழுதியிருந்தாள். அதில் தான் அன்பு செலுத்தும் நபரைப் பற்றிக் கூறி அவரது முகத்தை நிலவுடன் ஒப்பிட்டு எழுதியிருந்தாள்.

அந்தச் சமயத்தில் ஐன்ஸ்டைன் கூறினார்: ''போதும் நிறுத்து! இது மிகவும் அதிகம். நிலவைப் பற்றி நீ எதுவும் புரிந்து கொள்ளவில்லை. உனக்கு அதன் அளவுகள் தெரியுமா? ஒரு மனிதனின் உடல் மேல் நிலவு வைக்கப்பட்டால் அவன் துண்டு துண்டாக நசங்கிப் போவான். மேலும் நிலவு அழகானது என்று உனக்கு யார் சொன்னது? அது ஒரு உயிரற்ற பிறை. தண்ணீரோ, செடி, கொடிகளோ மரங்களோ, பூக்களோ, பறவைகளோ அங்கே கிடையாது. அது அழகானதென்று உன்னிடம் யார் சொன்னது? அழகு என்றால் என்னவென்று நீ கூறுகிறாய்?''

அவர் மனைவி அதிர்ச்சியுற்றாள். ஒரு மகத்தான விஞ்ஞானி இந்த மாதிரிப் பேசுவார் என்று அவளால் நம்ப முடியவில்லை. ஆனால் அவர் வேடிக்கையாகப் பேசவில்லை. பகுத்தறிவு இப்படித்தான் சிந்திக்கிறது.

பகுத்தறிவினால் கவிதையைப் புரிந்து கொள்ள முடியாது. அது அதன் பாதை அல்ல.

அது மிகவும் உரைநடைத்தனமானது. திருமதி ஐன்ஸ்டைன் தனது நினைவுக் குறிப்புகளில் பின்வருமாறு எழுதியிருக்கிறாள்.

''அவரிடம் நான் கவிதையைப் பற்றிப் பேசியது அதுதான் முதலும் கடைசியுமாகும். அதை விட ஒரு கற்பாறையிடம்

பேசலாம். ஒருவேளை இந்த மனிதனை விட அந்தக் கற்பாறை மேலாகப் பதில் அளிக்கக் கூடும்.''

இது மேற்கையும், கிழக்கையும் பற்றிய கேள்வி அல்ல. இது இதயத்தையும் பகுத்தறிவையும் பற்றியது.

கீழை நாடுகளில் இதயம் முதன்மையாக இருந்து வந்துள்ளது. ஆனால் அது யாருமே விவாதிக்காத ஒரு பிரச்சனையை உருவாக்கி உள்ளது.

யாராவது இந்த பிரச்சனை பற்றி எப்போதாவது எண்ணியதுண்டா என்று நான் புராதன வேதங்கள், இலக்கியங்கள், விளக்கவுரைகள் இவற்றில் அலசிப் பார்த்துள்ளேன். ஏனெனில் இது மிக முக்கியமானது, ஒதுக்கி விட முடியாதது.

கீழை நாடுகள் அதிகமாக இதயத்தின் பக்கம் சாய்ந்து காணப்படுவதால் அது பகுத்தறிவு முழு அளவு வளர்த்துக் கொள்ளவில்லை. ஆனால் தொடர்ந்து விதிமுறைகள் மறு பிறப்பு, சொர்க்கம், நரகம் என்றெல்லாம் பேசிக் கொண்டிருக்கிறது. இவை எல்லாம் புராணம் பற்றியவை என்று யாராவது சொன்னால் பரவாயில்லை. ஆனால் மனிதர்கள் இவை பகுத்தறிவுக்கு உட்பட்ட விதிமுறைகள் என்று அடித்துச் சொல்லுகின்றனர்.

உங்கள் கேள்வி பொருத்தமானதுதான்; கீழ்நாட்டு மனிதனுடன் பேசுவது மிகவும் கடினமான செயலாகிறது. ஏனெனில் முட்டாள்தனமாக, அர்த்தமற்றதாக தோன்றும் விதிகளைப் பற்றி அவன் தொடர்ந்து பேசிக் கொண்டே போகிறான். ஆனால் அவனுக்கு அவை முழுவதும் நியாயமானதாத் தெரிகின்றன. ஏனெனில் அவன் பகுத்தறிவில் பயிற்சி ஏதுவும் பெறவேயில்லை.அவனது நிச்சயமான தன்மை அவனது இதயம் தொடர்பானது.

நீங்கள் புரிந்து கொள்ளும்படி சில உதாரணங்களை நான் உங்களுக்கு தருகிறேன். ஒரு முறை மகாவீரரை ஒரு பாம்பு

கடித்து விட்டதாகவும் அப்போது இரத்தத்திற்கு பதிலாக பால் வெளிப்பட்டதாகவும் ஜைனர்கள் கூறுகின்றனர். இப்போது இதை ஒரு புராணம், உதாரணக் கதை, கவிதை என்றெல்லாம் நீங்கள் கூறினால் பிரச்சனையே இல்லை.

நான் முதல் முறை பம்பாயில் பேசிய பொழுது ஒரு ஜைனத் துறவி சித்ரபானு எனக்கு முன்பாக பேசியிருந்தார். அவர் இந்தச் சம்பவத்தைக் குறிப்பிட்டு ஏன் பால் வெளிவந்தது என்ற காரணத்தையும் கூறினர். ஏனெனில் மகா வீரர் அன்பு மயமான வர். ஒரு பாம்பு அவரைக் கடித்த போதும் அவரது அன்பினா லும் இரக்க குணத்தினாலும் பால் வெளிவருகிறது. அது பாம்புக்குக் காலை உணவு. கோபமில்லை. வன்முறையில்லை.

இருபத்தி ஐந்து நூற்றாண்டுகளாக ஜைனர்கள் தமது புத்த கங்களில் இது உண்மையானது என்று எழுதி வந்துள்ளனர்.

நான் சித்ரபானுவுக்கு அடுத்துப் பேச வேண்டியிருந்தது.

நான் சொன்னேன்: "இது உண்மை என்றால் பல விஷயங் கள் விளக்கப்பட வேண்டும். இதன் மூலம் மகாவீரரின் உடல் இரத்தத்தினால் அல்லாமல் பாலினால் நிறைந்திருக்க வேண்டும். பாம்புக் கடி நிகழ்ந்த போது அவர் கிட்டத் தட்ட ஐம்பது வயதாகி இருந்தார். எனவே ஐம்பது வருடங்களாக அந்தப் பாலெல்லாம் நிச்சயமாக தயிராகி இருக்கும்.

மேலும் அவர் ஆடையின்றி வெறுங்காலால் நடந்து செல்வார். ஐம்பது வருடங்களில் அந்தத் தயிரும் வெண்ணெ யாகி இருக்கும். இந்த வெப்ப நாட்டின் சூட்டில் அந்த வெண்ணையும் நெய்யாகி இருக்கும்.

எனவே அவர் காலிலிருந்து பாலுக்குப் பதிலாக நெய் வெளி வந்திருந்தால் அதில் ஏதாவது பகுத்தறிவுக்கு ஒத்ததாக இருந்திருக் கும். ஆனால் பால்? இது மிகவும் முட்டாள்தனமானது. ஒரு மனிதனின் உடல் முழுவதும் தயிர்... அவன் மீது தயிர் நாற்றம் அடித்திருக்கும். ஐம்பது வருடங்களாக பாலாலும் தயிராலும்

வெண்ணெயாலும் நெய்யாலும் நிறைந்திருப்பது என்றால்.... அவனது பரிதாப நிலையை எண்ணிப் பாருங்கள்! வெயில் காலத்தில் அவன் வியர்வை சிந்த மாட்டான், நெய்யாக வழிந்தி ருப்பான்!

எனவே நான் சொன்னேன், ''இது முட்டாள்தனமானது. இதில் ஒரே ஒரு சாத்தியப்பாடுதான் இருக்கிறது. ஒரு பெண்ணின் உடலில் இருந்து பால் வெளிவரும். அவனது மார்பகத்தில் இரத்தத்தைப் பாலாக மாற்றும் ஒரு அமைப்பு இருக்கிறது. இதை ஒரு பகுத்தறிவுள்ள மனதால் ஏற்றுக் கொள்ள முடியும். மகாவீரருக்கு அதே போன்ற அமைப்பு அவர் காலில் இருந்திருக் கக் கூடும். அவரது கால்கள் மார்பகங்களைத் தவிர வேறில்லை. ஆனால் வினோதமாக பாம்பு அவரது காலைத்தான் கொத்தும் என்று அவர் எப்படி எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்? ஒரு வேளை அவரது உடலெங்கும் மார்பகங்கள் இருந்திருக்கலாம். எனவே பாம்பு எங்கே கொத்தியிருந்தாலும் பால் வெளி வந்திருக்கும்.

ஒரு பெண்ணின் மார்பகம் கூட அவள் ஒரு குழந்தையை பெற்றிருந்தால்தான் பால் கொடுக்கும். எனவே நான் சொன் னேன், ''இது மேலும் மேலும் பிரச்சனைகளுக்குள் செல்கிறது. இது ஒரு கவிதை என்று சும்மா ஏற்றுக் கொள்வதே மேலானது. இதை சரித்திரமாக்காதீர்கள். விதிமுறையாக்காதீர்கள். அறிவியல் ரீதியாக ஆக்காதீர்கள். அவர் அத்தனை அன்புள்ளவராக இருந் தார் என்பதை கவிதை மயமாகச் சொல்லும் வழி என்று சொல்லுங்கள். அதை எப்படிக் கவிதை வடிவில் சொல்வது? எனவே நாம் அதை பால் வெளிவந்தது, தாயின் மார்பிலிருந்து அன்பினால் பால் வெளி வருவது போல என்று கூறலாம்.''

பாலுக்கு அன்புடன் ஒரு குறிப்பிட்ட தொடர்பு உண்டு. ஏனெனில் குழந்தை பாலையும் அன்பையும் ஒரே மார்பிலிருந்து பெறுகிறது. அதுதான் இந்த உலகத்தில் அவனது முதல் அனுபவம். அதனால்தான் மனித குலம் மார்பகங்கள் மீது இத்தனை ஆழ்ந்த ஈடுபாடு கொண்டுள்ளது. ஓவியர்கள்

தொடர்ந்து மார்பகங்களை வரைந்து கொண்டும், சிற்பிகள் அவற்றைச் சிலை செய்து கொண்டும் உள்ளனர்.

கவிஞர்கள், கதாசிரியர்கள், எல்லாவிதமான உருவாக்கும் திறன் படைத்த மனிதர்களும் ஒரே ஒரு பொருளின் மீது வெறி கொண்டுள்ளனர். அது ஒரு பெண்ணின் மார்பகங்கள்தான். இதன் காரணம் வெகு தெளிவானது. அது ஒரு குழந்தையின் முதல் அனுபவம். அன்பு, வெம்மை, மனித உடல், பிறர், உலகம் இவற்றின் முதல் அனுபவம். அதில் ஏகப்பட்டது அடங்கியுள்ளது. எனவே அன்பு வெதுவெதுப்பு இவற்றின் உணர்வை வெளிப்படுத்த பால் ஒரு அடையாளமாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆனால் எந்த ஒரு ஜைனனும் என்னோடு ஒத்துக் கொள் ளப் போவதில்லை. ஏனெனில் அப்போது ஒரு அற்புதம் காணாமற் போகிறது. கவிதை ஒரு அற்புதம் அல்ல. அற்புதம் என்பது அந்த உண்மையின் சரித்திர முக்கியத்துவத்தில் உள்ளது.

எனவே இந்த மக்களை எவ்வாறு கையாளுவது என்று நீங்கள் கேட்டது சரிதான். அவர்கள் மிகவும் அன்பு காட்டுகிறார் கள். இதயத்தால் நிறைந்து காணப்படுகிறார்கள். ஆனால் அவர் கள் தொடர்ந்து அந்தக் குப்பையைப் பேசுகிறார்கள். மிகவும் மறை பொருளாக மாய மந்திரமாக..

மேலும் கீழை நாட்டில் உள்ள் அனைவருக்கும் நிறையத் தெரிந்திருக்கிறது. அவர்கள் எல்லாருமே முக்தி பெற்ற ஆத்மாக்க ளாகத் தோன்றுகிறார்கள். இவர்களை எங்கே நிறுத்துவது இவர்களுக்கு எங்கே மறுப்புத் தெரிவிப்பது?

நீங்கள் மிகத் தெளிவாக மிக அன்பாக ஆனால் விட்டுக் கொடுக்காமல் இருக்க வேண்டும். இந்த மனிதர்கள் கதைகளில் இறங்கும் போது முட்டாள்தனமான விதிகளை உருவாக்கும் போது அவர்களது வேதப் புத்தகங்களிலே அவை நிறைய உண்டு. அந்தத் தருணத்திலே அவர்களை நிறுத்த வேண்டும்.

இது கீழை நாடுகளின் துரதிருஷ்டங்களிலே ஒன்று. அதாவது கவிதை சரித்திரம் அல்ல என்று மக்கள் முற்றிலும் மறந்துவிட்டார்கள். கவிதை சரித்திரத்தை விட முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை மறந்து விட்டார்கள். அப்போது விதி முறைகள் செய்தல், பகுத்தறிவுக்கு உள்ளாக்குதல், இவை எல்லாம் அர்த்தமற்றவை; அவை விஞ்ஞான ரீதியானவை என்று நிரூபிக்கச் செய்யப்படும் முயற்சிக் எல்லாமே கீழை நாடுகள் முழுவதையும் நகைப்புக்குள்ளாக்குகின்றன.

எனது சொந்த அணுகுமுறை வெகு எளிது!

உங்களது இதயம், புத்தியை மழுங்கச் செய்யத் தொடங்க நீங்கள் அனுமதிக்காத வண்ணம் விழிப்புடன் இருக்க வேண்டும். அதே போல் உங்கள் புத்தி உங்கள் இதயத்தை அமுக்கி விடாமலும் நீங்கள் விழிப்புடன் இருக்க வேண்டும். அவற்றின் செயல்பாடுகள் வேறு வேறானவை. புத்தி பொருள்களின் உலகத்தில் செயல்பட வேண்டும். இதயம் மனித உணர்நிலையின் உலகத்தில் செயல்பட வேண்டம். அவை ஒன்றையொன்று மேலேறிச் செல்லும் போது அங்கே ஒரு குறிப்பிட்ட குழப்பம் உண்டாகத்தான் செய்யும்.

நீங்கள் அதை உணரும் போதெல்லாம் இந்த மனிதன் இத்தனை அன்புடன் இருக்கிறான், அவனுக்கு எப்படி மறுப்புச் சொல்வது? கவலைப்படாதீர்கள். இது எனது முழு வாழ்வின் சிரமமாக இருந்து வந்துள்ளது. ஏனெனில் இந்தியாவில் உள்ள அனைவருமே மிகவும் அறிவு நிறைந்து உள்ளனர். அந்த அறிவு எல்லாம் சும்மா புனித பசுஞ்சாணம் மட்டுமே, அதில் உள்ளே ஒன்றும் இல்லை.

ஆனால் இந்த மனிதர்கள் நல்லவர்கள் - அதுதான் பிரச்சனை. மனிதர்கள் நல்லவர்கள் - மிகவும் தாராள சிந்தை படைத்தவர்கள், மிக அன்புள்ளவர்கள், மிகவும் உதவிகரமானவர்கள். அவர்களது இதயங்கள், அவர்களது தலைகளை ஆளுகின்றன. எனவே அவர்கள் சொல்லுவது எதுவானாலும் நீங்கள் சற்றே விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.

நீங்கள் அவர்களுக்கு மறுப்புத் தெரிவிக்கும் போது அவர்கள் வருத்தமடைகிறார்கள். அவர்கள் தமது அன்பு நிராகரிக்கப் பட்டு விட்டதாக உணர்கிறார்கள். எனவே நீங்கள் மிகவும் கவனமாகவும் நிறையத் தெளிவாகப் பேசிக் கொண்டும் இருக்க வேண்டும்.

இது ஒரு கடினமான செயல் - எனக்கு அப்படித் தான் இருந்தது. ஏனெனில் எனது குடும்பம், எனது ஆசிரியர்கள், எனது பேராசிரியர்கள் ...எங்கு சென்றாலும் நான் பிரச்சனையில் இருந்தேன். ஏனெனில் ஒரு நன்கு படித்த ஒரு பேராசிரியர் எப்படி இவ்வளவு முட்டாள்தனமாகப் பேச முடியும் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அவர் ஒரு நல்ல மனிதர்; அவரது நேர்மையைப் பற்றி சந்தேகம் ஏதும் இருக்க முடியாது. அவரது புத்தி சற்றே மழுங்கிப் பின் தங்கி இருப்பதுதான் பிரச்சனை. அவரது இதயம் மட்டும் வளர்ந்துள் ளது. அதில் அழகு உள்ளது. ஆனால் இதயம் புத்திக்கு முன்னால் வழிகாட்டிச் செல்கிறது. எனவே அவர்கள் எல்லாவித மான குப்பைகளையும் பேசுகின்றனர்.

நான் அவர்களை நிறுத்த வேண்டியிருந்தது. ''சற்றுப் பொறுங்கள். இதை நீங்கள் பகுத்தறிவோடு சொல்ல முடியாது. ஒன்று அதைக் கவிதையாக ஏற்றுக் கொள்ளுங்கள் அல்லது அதைப் பின்வாங்கிக் கொள்ளுங்கள்.''

ஆனால் இதன் விளைவு நான் இந்தக் கல்லூரியிலிருந்து, அந்தப் பல்கலைக்கழகத்திலிருந்து வெளித்தள்ளப்பட்டேன். அதற்கு அவர்களுக்குக் காரணம் எதுவுமில்லை.

துணை வேந்தர் என்னிடம் கூறினார்: ''உன்னை வெளியே அனுப்ப எங்களிடம் எந்தக் காரணமும் இல்லை. இத்தகைய தண்டனையைப் பெற நீ ஏதும் செய்யவில்லை. ஆனால் நீ எங்கள் சிரமத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். நீ நிறையப் பேராசிரியர்களுக்கு அதிகத் தொந்திரவு கொடுத்து வருகிறாய். நீ இந்தப் பல்கலைக்கழகத்தை விட்டு விலகவில்லை என்றால்

அவர்கள் தமது வேலையை ராஜினாமா செய்து விடுவதாக மிரட்டுகிறார்கள். எங்களால் அதைத் தாங்கிக் கொள்ள முடியாது. அவர்கள் எங்களது மதிப்பு வாய்ந்த பேராசிரியர்கள்.''

''முதலில் நீங்கள் அவர்களைக் கூப்பிட்டு பிரச்சனை என்ன என்றும், ஏன் என் மீது இவ்வளவு கோபமாக இருக்கிறார்கள் என்றும் கேட்க வேண்டும்'' என்று நான் சொன்னேன்.

பேராசிரியர்கள் கூறினார்கள்: ''நாங்கள் உன் மீது கோபமாக இருப்பதல்ல விஷயம். நீ எழுப்பும் சில கேள்விகள் எங்களை முழு வகுப்புக்கு முன்பாக அவமானமடையச் செய்கின்றன. மாணவர்கள் சிரிக்கிறார்கள். எங்களால் பதில் சொல்ல முடிய வில்லை. முப்பது, நாற்பது வருடங்களாக நாங்கள் நிலை நிறுத்தியுள்ள மரியாதை, அந்தஸ்து இவற்றை நீ அழித்துக் கொண்டிருக்கிறாய். அரை மணி நேரத்தில் அது முழுவதையும் அழித்து விடுகிறாய். பிறர் எங்கள் மேல் உள்ள மதிப்பை இழந்து விடுவார்கள்.''

''நான் எப்போதாவது உங்களை அவமதித்ததுண்டா?'' என்று கேட்டேன்.

''நீ எங்களை ஒரு போதும் அவமதித்ததில்லை. விஷயம் அதுவல்ல. இப்போது எங்களால் மாற முடியாது என்பதுதான் விஷயம். எங்களது வாழ்நாள் முழுவதும் நாங்கள் சில கோட் பாடுகளுடன் வாழ்ந்து விட்டோம். நாங்கள் அவை விஞ்ஞான ரீதியானவை என்று நம்பினோம். அவற்றை ஒரு போதும் சந்தேகித்ததில்லை. திடீரென்று நீ இங்கே வருகிறாய், ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் ஒரு கேள்வியை உருவாக்குகிறாய், நாங்கள் செய்வதறியாமல் திகைக்கிறோம்.''

பேராசிரியர்களில் ஒருவர் பிரமச்சாரி. அவர் தொடர்ந்து பிரம்மசரியத்தை வலியுறுத்திப் பேசிக் கொண்டிருந்தார். ஆன்மி கத்திற்கு ஒரே வழி பிரம்மசரியம் என்று கூறிக் கொண்டிருந்தார்.

நான் அவரிடம் கேட்டேன்: ''நான் உங்கள் வீட்டிற்கு வந்திருக்கிறேன். அங்கே ராமர் சீதையுடன் உள்ள படம் உள்ளது. இராமர் ஒரு இந்துக் கடவுள். அவர் தனது மனைவி சீதையுடன் நிற்கிறார். இவர் என்னவிதமான பிரம்மசரியத்தைப் பின்பற்றுவார்? இந்த பிரம்மசரியத்தின் வழியாக இரண்டு பிள்ளைகள் பிறந்துள்ளன. நீங்கள் இந்த மனிதனை உங்கள் வீட்டை விட்டுத் தூக்கி எறிய வேண்டும். ஆனால் நீங்கள் அவனை வழிபடுகிறீர்கள். பல்கலைக்கழகத்தில் பிரம்மசரியத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள். இதன் முரண்பாட்டை நீங்கள் பார்க்கிறார்களா? இல்லையா? உங்களது வேத காலக் குருக்கள் எல்லாருமே திருமணமானவர்கள். உபநிஷத ஞானிகள் எல்லாம் திருமணமானவர்கள். நீங்கள் ஸ்ரீமந் பாகவதத்தை தினமும் படிக்கிறீர்கள். கிருஷ்ணனுக்கு பதினாறு ஆயிரம் மனைவியர் இருந்தனர். இது எந்தவிதமான பிரம்மசரியம்?'' என்று நான் கேட்டேன்.

இந்த மனிதன் எனது கையைப் பிடித்துக் கொண்டு, ''என்னுடன் துணை வேந்தரிடம் வா. இது மிக மிக அதிகம். இப்போது ஒன்று நீ இந்த பல்கலைக்கழகத்தில் இருக்கப் போகிறாய் அல்லது நான் இருக்கப் போகிறேன்'' என்றார்.

''நான் உங்களை ஒரு கேள்வி மட்டும்தானே கேட்டேன். நீங்கள் ஒரு திருப்திகரமான பதிலைக் கொடுத்து என்னை திருப்திப்படுத்தலாம் அல்லது பிரம்மசரியம் காக்காத இந்த மனிதர்களை விட நீங்கள் சிறந்தவர் என்று கூறலாம். ஆனால் நீங்கள் ஏன் அவர்களை வழிபடுகிறீர்கள்? அவர்கள்தான் உங்களை வழி பட வேண்டும்'' என்று நான் சொன்னே.

போகும் வழியில் அவர் என்னிடம், ''நாம் துணை வேந்தரிடம் போக வேண்டுமா?'' என்றார்.

''அது உங்களைப் பொறுத்தது. ஏனெனில் இந்த முழு விஷயமும் விவாதிக்கப்படும். துணை வேந்தர் உங்கள் வீட்டைப் பார்வையிட வேண்டும் என்று நான் வலியுறுத்திக்

கூறுவேன். இராமன் சீதையுடனும், கிருஷ்ணர் ருக்மிணியுடனும் நின்று கொண்டிருக்கும் படி ஒரு கோவிலை நீங்கள் அமைத்துள் ளீர்கள். இது மிகவும் போலித்தனமானது. அவர் ருக்மிணியை மணந்திருந்தார். ஆனால் ஒரு போதும் அவளுடன் வாழ வில்லை. அவரால் அது எப்படி முடியும்? பிற வீடுகளிலிருந்து திருடப்பட்ட பதினாறு ஆயிரம் பெண்கள்... அவர் ஒரே ஒரு பெண்ணைத்தான் மணம் செய்து கொண்டு இருந்தார். மற்ற அனைவரும் திருடப்பட்டவர்கள். கட்டாயமாக கொண்டு வரப் பட்டவர்கள். கிருஷ்ணன் ஒரு அழகான பெண்ணைப் பார்த்து விட்டால் அவனது வீரர்கள் அவளைத் தூக்கிச் சென்று விடுவார் கள். கணவனைப் பற்றியோ, பிள்ளைகள் அல்லது வயதான பெற்றோரைப் பற்றியோ எந்த அக்கறையும் காட்டப்பட வில்லை. இருந்தும் இந்த போலித்தனத்தால் பாவம் ருக்மிணியை நீங்கள் கிருஷ்ணனுக்கு அருகில் வைக்கிறீர்கள். நான் துணை வேந்தரை உங்கள் வீட்டுக்கு அழைத்து வந்து பார்க்கச் சொல்வேன். அங்கேயே அப்போதே விஷங்களை முடிவு கட்டி விடலாம்.''

மேலும் நான் சொன்னேன், ''நீங்கள் வேலையை ராஜி னாமா செய்யத் தேவையில்லை. நீங்கள் பிரம்மசரியத்தை விட்டு விடுங்கள். திருமணம் செய்து கொள்ளுங்கள். பிரச்சனை தீர்ந்து விடும். நானும் பல்கலைக்கழகத்தை விட்டு விலக்கப்பட வேண் டாம். நீங்களும் ராஜினாமா செய்ய வேண்டாம். உங்களுக்கு நாணமாயிருந்தால் ஒரு நல்ல மனவியை நானே உங்களுக்குத் தேடித் தருகிறேன்.''

''நிறுத்து! இப்படிப் பேசாதே. நீ என்னைக் கிட்டத்தட்ட வற்புறுத்துகிறாய். இது என்னைக் கெடுப்பதாகும்'' என்றார் அவர்.

''அப்போது வந்து துணை வேந்தரைப் பாருங்கள்'' என் றேன் நான்.

நாங்கள் சென்றோம். துணை வேந்தர் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு என்னிடம், ''நீ சொல்வது தவறு அல்ல. ஆனால் நாம் என்ன செய்ய முடியும்? இந்திய தர்க்க சாஸ்திரத்

தைப் பொறுத்த வரையில் இந்தப் பேராசிரியர் இந்தியாவிலேயே மிகச் சிறந்தவர். நாங்கள் அவரை இழக்க முடியாது'' என்றார்.

''நீங்கள் சற்றே சிந்தித்துப் பாருங்கள். இவர் முற்றிலும் முன்பின் முரணானவர். இவர் எப்படி இந்திய தர்க்கவியலில் நிபுணராக இருக்க முடியும்? அவரது நடத்தையும் முன்பின் முரணானது. ஒரு பிரம்மசாரி திருமணம் ஆனவர்களை வழிபட்டுக் கொண்டு இருக்கிறார்'' என்றேன் நான்.

ஆனால் துணை வேந்தரோ, ''நீ வேறு ஏதாவது ஒரு பல்கலைக்கழகத்தைத் தேர்ந்து எடுத்துக் கொள். நானே உனக்கு சிபாரிசு செய்கிறேன். நான் உன்னை வெளியேற்ற மாட்டேன். மாறாக மிக உயர்வாக சிபாரிசு செய்கிறேன்'' என்றார்.

ஆனால் எந்தப் பல்கலைக்கழகமும் என்னை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. ஏனெனில் எனக்கு முன்பாக எனது புகழ் அங்கே சென்று சேர்ந்து விட்டிருந்தது. இந்த நபர் கல்லூரி அல்லது பல்கலைக்கழகத்திலிருந்து சேர வந்து கொண்டிருக்கிறான் என்று.

இந்தியாவில் இது ஒரு பிரச்சனை. மனிதர்கள் பகுத்தறிவுக்கு ஏற்றபடி நடப்பதில்லை. பகுத்தறிவுக்கு ஏற்றபடி நடப்பதாக பாவனை செய்து கொண்டிருப்பவர்களின் நடவடிக்கை கூட பகுத்தறிவுக்கு ஏற்றதாக இருப்பதில்லை.

அவர்கள் மிகவும் அன்புடன் இருப்பார்கள்; ஆனால் அவர்கள் உங்கள் புத்தியை அழிக்க அனுமதிக்காதீர்கள். இதயம் வளர வேண்டும்; புத்தி கூர்மையாக இருக்க வேண்டும். ஏனெனில் உங்கள் வளர்ச்சியின் முழுமையில் அவை இரண்டும் தத்தமது செயல்களை நிறைவேற்ற வேண்டும்.

ஒரு மகத்தான இதயம் மற்றும் சிறந்த புத்திக்கூர்மையைக் கொண்டு, இவற்றுக்கு இடையில் எந்தவித முரண்பாடும் இல்லாத ஒரு மனிதன் உண்மையிலேயே ஒரு அறிவாளி.

இதற்கான சாத்தியப்பாடு அனைவரிடமும் உள்ளது. ஆனால் எல்லாரும் புத்தியாலோ இதயத்தாலோ ஆளப்பட்டு

வருகின்றனர். எல்லாரும் ஒரு சமச்சீர் இல்லாத வாழ்க்கையை வாழ்ந்து வருகின்றனர்.

சர்க்கஸ் விளம்பரங்களை நீங்கள் பார்த்ததுண்டா? ஒரு சர்க்கஸ் ஒரு ஊருக்கு வரும்பொழுது - இதை நான் பல ஊர்களில் பார்த்திருக்கிறேன் - அதில் சைக்கிள்கள் உண்டு; ஒரு சிறய சக்கரத்தையும் ஒரு பெரிய சக்கரத்தையும் கொண்ட சைக்கிள்கள். இதில் பெரிய சக்கரத்தின் மையம் நடுவில் இருக்காமல் ஒரு ஓரத்தில் இருக்கும்.

எனவே இதை ஓட்டிக் கொண்டிருக்கும் மனிதன் மேலும் கீழும் மாறி மாறிச் செல்வான். இயல்பாகவே இது கூட்டத்தைக் கவர்ந்திழுக்கும். "என்ன நடக்கிறது? ஒரு மனிதன் திடீரென்று மேலும் கீழும் செல்கிறான். அவன் ஒரு கோமாளி; கோமாளி யின் உடையை அணிந்திருப்பான். சர்க்கஸின் பெயர், நேரம், கட்டணம் எல்லாம் அவனது சட்டையில் பொறித்திருக்கும்.

ஒரு தனி மனிதன் அனைவரையும் கவர்ந்து இழுப்பான். இது ஒரு மிகச் சாதாரணமான அமைப்பு.

ஆனால் இந்த விதமான விளம்பரத்தை பார்த்தபோது கிட்டத்தட்ட எல்லாரின் நிலைமையும் இதுதான் என்று நான் எண்ணினேன்.

உங்களுக்கு இரண்டு சக்கரங்கள் உண்டு - புத்தி மற்றும் இதயம்.

ஒருவரின் இதயம் பெரிதாகவும் புத்தி சிறியதாகவும் இருக் கிறது. அப்போது அவர் மேலும் கீழும் போகிறார்.

ஒருவரின் புத்தி பெரியதாகவும், இதயம் சிறியதாகவும் இருக்கிறது. அப்போது அவர் மேலும் கீழும் போகிறார்.

எல்லாரும் மேலும் கீழும் போகிறார்கள் - நீங்கள் யாருக்காக விளம்பரம் செய்து கொண்டு இருக்கிறீர்கள்?

மேலும் அந்த சைக்கிளில் உட்காருவது சுலபமான காரியம் அல்ல; நான் உட்கார்ந்து பார்த்துள்ளேன். அது மிகவும் கடினமான காரியம். சமச்சீரற்ற முறையில்.

புத்தியும் இதயமும் இணக்கமாக இருந்து கொண்டு ஒரு வரை ஒருவர் ஆதரித்துக் கொண்டு உதவி செய்து கொண்டு உள்ள சமச்சீரான வாழ்க்கை உங்களுக்குத் தேவை. எனவே நீங்கள் யாரைப் பார்த்தாலும் அவர் மேலை நாட்டிலிருந்து வந்தாலும் சரி, கீழ் நாட்டிலிருந்து வந்தாலும் சரி, அவர் உங்கள் இணக்கத்தைப் பாதித்தால் அவரை நிறுத்துங்கள்.

அவரை அன்புடன் நிறுத்துங்கள், கடுமையாகப் பேசத் தேவையில்லை.

ஆனால் அமைதியாக இருக்காதீர்கள். ஏனெனில் அமைதி யாக இருப்பது என்பது அவமதிப்பாகும். நீங்கள் அவரை ஒரு தவறான வழியில் செல்ல அனுமதித்து உள்ளீர்கள். போதுமான அளவு இரக்க குணத்தோடு நீங்கள் இல்லை.

○

நான்கு

○

# செய்தியாக இருங்கள்

அன்பிற்குரிய பகவான்,

நீங்கள் எனது வேண்டுதலைக் கேட்டு ஆகஸ்டு எட்டாம் தேதியன்று என்னை அழைத்தீர்கள். நான் உங்களது அறைக்குள் நுழைந்த போது உங்களை ஒரு பெரிய கடலாக, நான் முன்னெப் போதும் அனுபவித்து அறியாத வெற்றிடமாக உணர்ந்தேன். உங்கள் அழகான உயிருருவைக் கண்டேன். அந்த அழகிலும் வெற்றிடத்திலும் மூழ்கினேன். உங்களிடமிருந்து ஒரு கடலின் வெற்றிடம் எனக்குள்ளே வழிவது போல உணர்ந்தேன். அன்று தொடங்கி உங்களது அந்த வெற்றிடத்திலிருந்து புதிய பாசங்களும் கீதங்களும் வருகின்றன. எனக்கு எதுவும் தெரியாது.

*அன்பிற்குரிய பகவான், குருவின் முன்னிலையில் இது எப்படி இவ்வளவு எளிதாக நிகழக் கூடும் என்று விளக்கிச் சொல்லுங்கள். இது அத்தனை சாதாரணமானதா? இந்தச் சந்திப்பு இல்லாமல் என்னால் இந்த வாழ்க்கையில் வாழ்வது என்பது சாத்தியமாகத் தெரியவில்லை. இது உண்மையா? இந்த உணர்வு வேறுவிதமாக எனக்குப் பல பிறவிகளிலும் ஏற்பட்டிருக்கிறது என்று தோன்றுகிறது. குரு மற்றும் சீடனின் சந்திப்பு பற்றி தெளிவாகச் சொல்லுங்கள்.*

**ஓஷோ:** அசோக் பாரதி, வாழ்க்கையில் மிகத் தெளிவாகத் தெரியும் ஒன்று மிகக் கடினமாகத் தெரிகிறது. மிக எளிமையான ஒன்று மிகச் சிக்கலாகத் தெரிகிறது.

இதன் காரணம், மனதிற்குத் தெளிவாக இருப்பவற்றில் ஆர்வம் இருப்பதில்லை.

அது செய்ய முடியாத காரியத்தைச் சவாலாக எடுத்துக் கொள்ள விரும்புகிறது. செய்ய முடியாத சவாலில்தான் அது தனது 'தான்' என்பதை நிறைவேற்ற முடியும். தெளிவாக இருப்பவற்றில், 'தான்' என்பது வளரவோ, நிலை பெற்று இருக்கவோ முடியாது.

தெளிவாக இருப்பது 'தான்' என்பதன் சவக்குழி. எளிமையாக இருப்பதை நாம் சாதாரணமாக எடுத்துக் கொள்கிறோம். ஏனெனில் அது மிக எளிமையாக இருக்கிறது. தூரமாக தொலைவில் இருப்பதுதான் நமது கண்ணைக் கவர்ந்து நம்மை ஒரு பயணத்திற்கு அழைக்கிறது. இதனால்தான் கொலம்பஸைப் போன்ற மனிதர்கள் உலகைச் சுற்றி வந்தார்கள். மனிதர்கள் சந்திரனுக்குச் சென்றிருக்கிறார்கள். செவ்வாய்க் கிரகத்துக்குச் செல்ல முயற்சி செய்கிறார்கள்; என்றாவது ஒரு நாள் மிகத் தொலை தூரத்தில் உள்ள நட்சத்திரங்களையும் எட்டிப் பிடிக்க எண்ணுகிறார்கள்.

யாருமே தனக்குள்ளே புகுந்து பார்த்து அங்கே உள்ள மிக அற்புதமான, மிக மர்மமான 'மிக அடிப்படையான' வாழ்வின் தத்துவத்தை வாழ்வின் ஆதார கூற்றைக் காண அக்கறை காட்டுவதில்லை. அது மிகவும் நெருங்கியது. மிகவும் தெளிவானது. மிகவும் எளிமையானது.

மனிதர்கள் சந்திரனில் எதையும் காணாமல் போகலாம்; எதையும் அவர்கள் கண்டு பிடிக்கவில்லை. ஆனால் சரித்திர ரீதியாக அவர்கள் மகத்தான மனிதர்கள் ஆகி விட்டார்கள்.

எட்மண்ட் ஹிலரி எவரெஸ்ட்டில் எதையும் கண்டு பிடிக்க வில்லை. ஆனால் அவரது பெயர் அழியாப் புகழ் பெற்று விட்டது. இமயமலையின் மிக உயரமான சிகரமான எவரெஸ் டில் ஏறுவதற்காக சென்ற ஒரு நூற்றாண்டுக் காலமாக மேலை நாட்டு மனிதர்கள் வந்த வண்ணம் இருக்கிறார்கள். எந்த ஒரு இந்தியனும் இது பற்றி அக்கறை காட்டவில்லை. ஒரு இந்திய னுக்கு இது மிகவும் தெளிவானது.

மிகக் கடினமான ஒரு விஷயம், மிகக் கவர்ச்சிகரமாக இருக்கிறது. எதை அடைய முடியாதோ அது பற்றி மனம் ஒரு வெறி கொள்கிறது.

ஒரு மன நல விடுதியைப் பார்வையிடச் சென்ற ஒரு மன நல நிபுணரைப் பற்றி நான் கேள்விப்பட்டதுண்டு. மன நல விடுதியின் பொறுப்பாளர் அவரைச் சுற்றிப் பார்க்க அழைத்துச் சென்றார். அவரது கேள்விகளுக்கு பதில் அளித்தார்.

ஒரு குறிப்பிட்ட நபரைப் பற்றி அவர் மிகுந்த ஆர்வம் காட்டினார். அவன் தனது அறையில் கம்பிகளுக்கு பின்னால் முழு நிர்வாணமாக நின்று கொண்டிருந்தான். சுவரின் மேல் ஒரு சாதாரண பெண்ணின் படம் இருந்தது. அவன் அதன் முன்னால் கைகளைக் கூப்பிய வண்ணம் கண்களில் கண்ணீர் வழிய நின்று கொண்டிருந்தான். மன நல நிபுணர், இந்த மனிதனுக்கு என்னா யிற்று? என்று கேட்டார்.

பொறுப்பாளர், அவனைத் தொந்தரவு செய்யாதீர்கள் என்று சொல்லி, அவரை சற்றுத் தொலைவில் அழைத்து சென்று, ''அவனை பிரார்த்தனையிலிருந்து யாரும் தொந்தரவு செய்வதை அவன் விரும்புவதில்லை. முழு நாளும் அவன் பிரார்த்தனை செய்த வண்ணம் இருக்கிறான்'' என்றார்.

''அந்தப் படம் யாருடையது? என்று நிபுணர் கேட்டார்.

பொறுப்பாளர் சிரிக்கத் தொடங்கினார். ''அது யாருமில்லை, ஒரு சாதாரணப் பெண். அவன் அவளைக் காதலித்தான்; ஆனால் இருவரும் வேறு வேறு சாதிகளைச் சார்ந்திருந்தபடியால், அந்தப் பெண்ணின் தந்தை மறுத்து விட்டார். இவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. அந்தப் பெண் ஒரு தெய்வமாகி விட்டாள். கிடைக்க முடியாமற் போனதால் ஒரு சாதாரணப் பெண் தெய்வமாகி விட்டாள். இப்போது அவன் இந்தப் பிறவியில் நடக்காத ஒன்று, பிரார்த்தனையின் மூலம் அடுத்த பிறவியிலாவது நடக்கும்'' என்று பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறான்.

''இந்த மாதிரி ஒரு கேஸை நான் பார்த்ததேயில்லை'' என்றார் நிபுணர்.

''இன்னும் கொஞ்சம் பொறுத்துப் பாருங்கள்'' என்றார் பொறுப்பாளர்.

அடுத்த அறையில் மற்றொரு மனிதன் தனது தலையைச் சுவரில் மோதிக் கொண்டிருந்தான். அவனை இரண்டு காவலாளிகள் பிடித்துக் கொண்டிருந்தனர்.

''இவனுக்கு என்னாயிற்று? ஏன் இவன் தனது தலையை சுவரில் மோதிக் கொள்கிறான்?'' என்றார் மனநல நிபுணர்.

அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. அவன் தற்கொலை செய்து கொள்ள விரும்புகிறான். இது ஒரு பெரிய பிரச்சனை. அவனைத் தொடர்ந்து பார்த்துக் கொள்ள வேண்டியுள்ளது. இல்லையென்றால் அவன் தன்னைத்தானே காயப் படுத்திக் கொள்கிறான்'' என்றார் பொறுப்பாளர்.

''அவனது மனநிலைக்குக் காரணம் என்ன?'' என்றார் நிபுணர்.

''அதற்குத் தான் நான் உங்களை சற்றுப் பொறுங்கள் என்று சொன்னேன். அவனுக்குத் திருமணமாகியது. அந்தத் திருமணம் படு மோசமாக இருந்தது. அதனால் அவனுக்குப் பைத்தியம்

பிடித்து விட்டது. அவன் தற்கொலை செய்துகொள்ள விரும்பு கிறான். ஏனெனில் என்றாவது ஒருநாள் அவன் இந்த விடுதியி லிருந்து வெளியே அனுப்பப்படுவான். மீண்டும் அந்தப் பெண்ணிடம் சென்று சேர வேண்டியிருக்கும். ஆனால் அந்தப் பெண் நாம் முன்பு கண்ட அதே பெண்தான்... அவளைத் தவிர்க்க வேண்டி அவன் தற்கொலை செய்து கொள்ள விரும்புகி றான்'' என்றார் பொறுப்பாளர்.

“அடக் கடவுளே! அந்த மனிதன் தனது அடுத்த பிறவியில் தான் அடைய வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டி ருக்கும் அதே பெண்ணா இவள்! அவன் இந்த முறை ரயிலைத் தவற விட்டு விட்டான்! இந்த அப்பாவி அதைத் தவற விடவில்லை. இப்போது இவன் ரயிலிலிருந்து குதித்து விட விரும்புகிறான். ஸ்டேஷன் வரும் வரைக் கூட இவனால் காத்திருக்க முடியவில்லை.''

வாழ்க்கை தர்க்க ரீதியானது அல்ல. வாழ்க்கை என்பது அன்பு.

தர்க்கம் ஒரு சிக்கலான விஷயம்.

அன்பு எளிமையானது. கள்ளமில்லாத ஒருமைப்பாடு.

வாழ்க்கை, கணிதத்தை விட இசைக்கு நெருங்கியது. ஏனெனில் கணிதம் மனதைப் பொறுத்தது. வாழ்க்கை உங்கள் இதயத் துடிப்பிலே அதிர்கிறது.

அசோக் பாரதி, நீ என்மீது அன்பு செலுத்தினால் அது எல்லாவிதமான மர்மங்களுக்கும் வழி திறந்து விடும்.

மனிதர்கள் அன்பை பற்றி ஒன்றும் அறியாது இருப்பதால் அன்பு குருடானது என்று சொல்லுகிறார்கள்.

நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; அன்புக்கு மட்டும் தான் கண்கள் உண்டு. அன்பைத் தவிர மீதியெல்லாம் குருடா னது.

உங்களது அன்பின் கண்கள் ஒருமுறை திறந்து விட்டால், நீங்கள் கனவு கூடக் கண்டிராத விஷயங்கள் உண்மையாகத் தொடங்குகின்றன. உங்களுக்கு சாத்தியப்படும் என்று நீங்கள் எண்ணிக் கூடப் பார்த்திருக்காத புதிய பாடல்கள், புதிய கவிதைகள் உருவாகும். நீங்கள்தானா எழுதியது என்று நீங்களே நம்ப முடியாத உட்பார்வைகளோடு உங்களிடம் உருவாகும்.

இதனால்தான் எல்லாப் புராதன வேதங்களிலும் அவற்றை எழுதியவர்களின் பெயர்கள் காணப்படுவதில்லை. ஏனெனில், உபநிஷதங்களை, வேதங்களை எழுதியது தாங்கள்தான் என்று அவர்களால் அதை நம்ப முடியவில்லை. அதிகபட்சமாக அவர்களால் அது எழுதப்பட்டது; அவர்கள் வேறு ஒரு சக்தியால் பீடிக்கப்பட்டு இருந்தார்கள். ஏதோ ஒரு பிரபஞ்ச சக்தி அவர்களைப் பீடித்திருந்தது. அவர்கள் எழுதியதற்கும் அவர்களுக்கும் சம்பந்தம் எதுவுமில்லை. அவர்கள் எழுதிய வேதங்களில் அவர்கள் கையெழுத்து இடவில்லை.

கௌதம புத்தரின் இணையற்ற மிக அழகான சிலைகளை யார் உருவாக்கியது என்று கண்டுபிடிப்பது வெகு சிரமம்.

மனித சக்திக்கு அப்பாற்பட்டது போலத் தோன்றும் அஜந்தா எல்லோரா குகைகளின் மகத்தான கட்டுமானத்தை உருவாக்கியவர்களும் தமது பெயரை எழுதி வைத்துவிட்டுப் போகவில்லை. ஏனெனில் அவற்றைச் செய்தது தாங்கள் தாம் என்று அவர்கள் நம்பவில்லை. அவர்கள் உயிர்வாழ்தல் தங்களை ஒரு கருவியாகப் பயன்படுத்தியது என்றுதான் அவர்கள் உணர்ந்தார்கள். அப்படிக் கருவியாகப் பயன்பட தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து அவர்கள் அருள் பெற்றவர்களாக நன்றியறிதலுடன் உணர்ந்தார்கள். உயிர் வாழ்தல் அவர்களிடம் கருணை காட்டியிருந்தது. அதுவே அவர்களுக்குப் போதுமான பரிசாக இருந்தது.

அசோக் பாரதி ஒரு ஏழ்மையான மனிதன். ஆனால் அவனது இதயம் மிகவும் செழுமையானது. செழுமையான ஒரு

இதயத்தைப் பெற்றிருப்பதுதான் உலகின் ஒரே செல்வம் ஆகும். அவன் ஒரு மகத்தான பாடகனாக, கவிஞனாக, இசையமைப் பாளனாக வருவதற்கான உள்ளடங்கிய சக்தி அவனிடம் இருக் கிறது. ஆனால் அதை அவன் உணரவில்லை.

அவன் என்னைப் பார்ப்பதற்காக மட்டும் வந்திருக்கிறான். அவன் எனது பழைய சன்னியாசி. என்னைப் பொறுத்தவரை யில் மதம் என்பது ஒரு கொண்டாட்டம் என்று அவன் அறிந்திருப்பதால் அவன் தனது சஞ்சாரியைக் கொண்டு வந்திருக் கிறான் - எனக்கு ஒரு பாட்டுப் பாடுவதற்காக. இதைவிட அன்பளிப்பாக வேறு எதைக் கொண்டுவர முடியும்? அவன் மிகவும் வெட்கப்பட்டுக் கொண்டே, ''நான் உங்கள் முன்னிலை யில் ஒரு பாட்டுப் பாடலாமா?'' என்று கேட்டான்.

''எனக்குக் கொண்டு வரப்படும் பரிசுகளிலேயே இதுதான் மிக அழகானது. நீ தினமும் பாடலாம்'' என்று நான் சொன் னேன். கிட்டத்தட்ட ஒரு மாத காலமாக நான் அவனைக் கவனித்து வந்துள்ளேன். அவனது பாடல்களின் நயம், உட்பொ ருள், முக்கியத்துவம் இவை யாவும் ஆழமாகிக் கொண்டே இருக்கின்றன. அவனது தைரியம் வளர்கிறது. முன்போல் அவன் இப்போது தயங்குவதில்லை. இத்தனை பேர் பார்க்கிறார்களே என்று அவன் கவலைப் படுவதில்லை. அவன் ஒரு மேடைப் பாடகன் அல்ல - எல்லாரையும் போல அவன் ஒரு குளியல றைப் பாடகன்.

இது மிக வினோதமானது - குளியலறைகளில் உலகின் மிகப் பிரமாதமான பாடகர்களை நீங்கள் காணலாம். ஆனால் அவர்களை நீங்கள் குளியலறையை விட்டு வெளியே கொண்டு வந்தவுடனே அவர்கள் வாயடைத்துப் போகிறார்கள்.

எல்லாருமே நன்கு உரையாடக் கூடியவர்கள் தான். உலக முழுவதும் எல்லாரும் ஒருவருடன் ஒருவர் பேசிக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் யாரையாவது மேடையில் நிற்க வைத் தால், தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கும் கும்பலைப் பார்த்த

வுடன் அவனது துணிச்சல் கீழே போய்விடுகிறது. தான் தனித்தனியாகப் பேசிக் கொண்டிருந்த அதே மனிதர்கள்தான் இவர்கள். ஆனால் ஆயிரம் கண்களால் பார்க்கப்படும் பொழுது ஒரு பயம் எழுகிறது. அதாவது 'ஏதாவது தவறாகப் போனால் எல்லார் முன்னிலையிலும் நான் நகைப்புக்கு ஆளாவேன்' என்ற பயம் வருகிறது.

நான் அசோக்கைக் கவனித்து வந்திருக்கிறேன். முதல் நாள் அவனிடம் அந்தப் பயம் இருந்தது. மிக மிக மெதுவாக அந்தப் பயம் மறைந்து விட்டது. அதற்கு மாறாக ஒரு அச்சமற்ற தன்மை, ஒரு பலம் வந்துள்ளது.

அவன் தனது சொந்தப் பாடல்களை உருவாக்கி வந்துள்ளான். மிக மிக அழகானவை, அவை மனதால் உருவாக்கப் பட்டவை அல்ல; அவனது அன்பிலிருந்து அவனது இதயத்திலிருந்து அவை எழுகின்றன. அவற்றிலே மிக வேறுபாடான ஒரு அழகு காணப்படுகிறது.

அசோக், நீ என் மீது அன்பு செலுத்தினால், எனது முன்னிலையில் ஒரு பரந்த வெற்றிடத்துக்குள்ளே அல்லது ஒரு பரந்த முழுமையினுள்ளே நீ காணாமற் போவது போல உணர்வாய் என்பது உண்மைதான்.

மனித மனதிற்கு அப்பால், வெற்றிடமும் முழுமையும் ஒரே பொருளைத்தான் கொண்டுள்ளன.

அன்பு உங்களை வெற்றிடமாக்குகிறது - பொறாமை, ஆதிக்க வெறி, கோபம், போட்டியிடுதல், தான் என்ற தன்மை மற்றும் அதன் எல்லாக் குப்பைகளும் இல்லாத ஒரு வெற்றிட மாக்குகிறது.

ஆனால், அன்பு என்பது இப்போது நீங்கள் அறிந்திராத சில விஷயங்களில் நிறைவடையவும் செய்கிறது. அது உங் களை நறுமணம், ஒளி, மகிழ்ச்சி இவற்றால் நிறையச் செய்கிறது.

ஒரு பழைய கதையில், அரசனுக்கு வயதாகி விட்டது. அவனுக்கு மூன்று பிள்ளைகள் உண்டு. மூவருமே புத்திசாலிகள்.

அவர்கள் மூன்று பேரும் ஒன்றாகப் பிறந்தவர்கள். எனவே அவர்களில் யார் மூத்தவன் என்ற கேள்வி கிடையாது. இல்லா விட்டால் அங்கே பிரச்சனை இருந்திருக்காது. மூத்த மகன் அரசுப் பதவியைப் பெற்றிருப்பான். இங்கே பிரச்சனை என்னவென் றால், மூவரில் யார் அரசனாக வருவது என்பதுதான். அவர்கள் மூவரும் ஒரே வயதுடையவர்கள். குதிரையேற்றம், வில்வித்தை இவற்றில் சம திறமை உடையவர்கள். எந்த ஒரு துறையிலும் மூவரில் சிறந்தவன் யார் என்று முடிவு எடுப்பது முடியாத காரியமாக இருந்தது.

அரசன், காட்டில் வசித்து வந்த தனது குருவைக் கேட்டான்: ''எனக்கு வயதாகி விட்டது. எனக்குப் பின்னால் யாராவது இந்த நாட்டை ஆள வேண்டும். சரியான நபரை எப்படித் தேர்ந்து எடுப்பது என்பதில் எனக்கு மிகப்பெரிய சிரமம் உள்ளது. இதுபற்றி நீங்கள் எனக்கு ஏதாவது கருத்துக் கொடுக் முடியுமா?''

முதிய அறிஞர் அவனுக்குச் சில அறிவுரைகள் கொடுத்தார். அரசன் திரும்பி வந்து தனது பிள்ளைகளிடம் சம அளவுள்ள பணத்தைக் கொடுத்தார். அவர்கள் மூவரும் தனித்தனி வீடுகளில் வசித்தனர்.

''இந்தப் பணத்தைக் கொண்டு நீங்கள் உங்கள் மாளிகை களை முழுவதும் நிரப்ப வேண்டும். ஏழு நாட்களுக்குப் பின்னால் நான் வந்து பார்ப்பேன். மாளிகை முழுவதும் மற்ற இருவரைக் காட்டிலும் நன்றாக நிரப்பும் பிள்ளை எனக்குப் பின்னர் அரசனாக வருவான்'' என்றார்.

அவர்கள் திகைப்படைந்தனர். ஏனெனில் பணம் மிக அதிகமான அளவில் இல்லை - அவர்கள் பல விஷயங்களையும் யோசித்தார்கள். மாளிகைகள் மிகப் பெரியவை. அவற்றை எவ்வாறு முழுவதுமாக நிரப்புவது?

முதல் இளவரசன், முன்சிபல் அலுவலகத்திற்கு சென்றான். ''இன்று முதல், ஊருக்கு வெளியே சென்று குப்பையைக்

கொட்டும் வண்டிகள் அதை என் மாளிகையில் கொண்டு வந்து கொட்டட்டும். ஏனென்னில் இந்தப் பணத்தால் மாளிகையை முழுவதும் நிரப்ப வேண்டுமானால் இவ்வளவுதான் செய்ய முடியும்.''

அவன் மாளிகையை முழுவதும் நிரப்பினான். சுற்று வட்டாரத்தில் உள்ள அனைவரும் கோபமுற்றனர். வண்டிப் போக்குவரத்து கூட நின்று போய் விட்டது. ஏனெனில் அங்கே அத்தகைய துர்நாற்றம் எழுந்தது. ஆனால் அவன் இளவரசனாக இருந்த படியால் அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. மேலும் இது ஒரு குறிப்பிட்ட பரீட்சை. இதை அரசனே ஏற்பாடு செய்திருந்தான்.

இரண்டாவது இளவரசன் மிகவும் கவலை கொண்டான். பலரையும் ஆலோசனை கேட்டான். ''இவ்வளவு சிறிய தொகை யைக் கொண்டு இதைச் செய்வது மிகவும் கடினம். உனது சகோதரன் தனது வீட்டை நிரப்பி விட்டான். நீயும் அதேபோல ஏதாவது செய்யலாம். மலிவான புல்லை விலைக்கு வாங்கி வீட்டை நிரப்பு'' என்று அவர்கள் கூறினார்கள். அவன் ஆடுமாடுகள் கூடத் தின்ன மறுக்கும் மலிவான புல்லை வாங்கி தனது மாளிகையை நிரப்பினான். அப்போதும் மாளிகை பாதியளவுதான் நிரம்பியது.

இவர்கள் இருவருமே, மூன்றாவது சகோதரன் என்ன செய்வானோ என்று கவலையடைந்தனர். அவனோ சற்றும் கவலையின்றி இருந்தான். ஆறு நாட்கள் கடந்து விட்டன. அவன் எதுவுமே செய்யவில்லை. ஏழாவது நாளும் வந்தது. மாலை சூரியன் மறைந்ததும் அரசன் தனது குருவோடு வந்தான்.

முதல் மகனின் வீட்டின் அருகே நெருங்குவதுகூடக் கஷ்டமாக இருந்தது.

''இந்த முட்டாள், அவன் உண்மையாகவே தனது வீட்டை நிரப்பியுள்ளான்; ஆனால் குப்பையால்! இது மிகவும் அருவருக் கத் தக்கதாக உள்ளது. எனக்கு வாந்தி வருகிறது'' என்றான் அரசன்.

''நீதான் கேட்டாய், நாம் சென்று பார்த்தாக வேண்டும். கொஞ்சம் பொறுமையோடு இரு. நீ அதிக நேரம் நிற்க வேண்டாம். சும்மா மாளிகை நிரம்பியுள்ளதா இல்லையா என்று பார்க்க வேண்டும்'' என்றான் ராஜகுரு. அவர்கள் சென்று பார்த்தார்கள்.

அவர்கள் இரண்டாவது மகனின் வீட்டிற்குச் சென்றார்கள். அது முன்னதைவிட மேலானது அல்லதான் எனினும், மோசமானதாகவும் இல்லை. அங்கே அழுகிப்போன புல் இருந்தது; ஆனால் வீடு பாதிதான் நிறைந்திருந்தது.

அரசன் மிகவும் ஏமாற்றமடைந்தான். மூன்றாவது மகனின் வீட்டிற்குப் போகாமல் இருப்பதே மேல் என்று நினைத்தான். ஏனெனில் இந்த இரண்டு முட்டாள்களும் செய்திருந்த காரியம் பார்க்கத் தகுந்தது அல்ல.

ஆனால் குருவோ, ''நீ போகத்தான் வேண்டும். ஏனெனில் முடிவு எடுக்கப்பட வேண்டும்!'' என்றார்.

அவர்கள் மூன்றாவது மகனின் மாளிகைக்குச் சென்றனர்.

அவர்கள் மாளிகைக்குள் நுழைந்தனர்; குழப்பமடைந்தனர். ஏனெனில் அது முற்றிலும் காலியாக இருந்தது. அவன் மரச் சாமான்கள், ஓவியங்கள், அலங்கார சிலைகள், வீட்டின் இதர சாமான்கள் இவற்றைக்கூட நீக்கிவிட்டிருந்தான். எல்லாமே எடுக்கப் பட்டிருந்தது. வீடு முற்றிலும் காலியாக இருந்தது.

''நீ என்ன செய்திருக்கிறாய்?'' என்று இளவரசனைக் கேட்டார்கள்.

''பாருங்கள். அது நிரம்பியுள்ளது'' என்றான் அவன் தனது தந்தையிடம்.

அவர் சுற்றிலும் பார்த்தார், ''அது முழுவதும் காலியாக இருக்கிறது. நீ எங்களை ஏமாற்றப் பார்க்கிறாய்'' என்றான் அரசன்.

குருவோ, ''கோபமடையாதே. வீடு நிரம்பியுள்ளது. ஆனால் அது உனக்குப் பழக்கமல்லாத ஒன்றால் நிரம்பியுள் ளது. அவன் செய்துள்ளது என்னவென்றால், மெழுகுவர்த்தி களை வாங்கி வீடெங்கெனும் வைத்திருக்கிறான். அது ஒளியால் நிறைந்துள்ளது'' என்றார்.

ஒளி ஒருபுறப் பொருளல்ல. 'புறப்பொருள்' என்ற வார்த்தை மிக அழகானது. அதற்கு உங்களுக்கு வெளியில் புறத்தில் உள்ளது என்று பொருள். நீங்கள் ஒரு சுவரின் ஊடே செல்ல விரும்புகிறீர்கள். அதை சுவர் தடுக்கும். அது ஒருபுறப் பொருள்.

ஒளி பொருளால் ஆனது அல்ல.

அது பூமியின் மீது ஒரு விநோதமான தன்மை கொண்டது. அது உங்களுக்கு வெளியே உள்ளது. அதனால் அதைப் புறப்பொருள் என்று கூறலாம். மற்றொரு அர்த்தத்தில் அது உங்களைத் தடுப்பது இல்லை. நீங்கள் அதனூடே செல்லலாம். அது பொருளால் ஆனது அல்ல.

பல நூற்றாண்டுகளாக ஒளிக்கு எடை இல்லை என்று கருதப்பட்டது. இப்போதுதான் சமீபத்தில் அதற்கு எடை உண்டு, ஆனால் அது மிகச் சிறியது என்று கண்டுபிடிக்கப்பட் டுள்ளது. வானத்தில் மேகங்கள் இல்லாத பொழுது, சூரியன் மிக உக்கிரமாகக் காய்ந்து கொண்டு இருக்கும் பொழுது ஐந்து சதுர மைல்கள் பரப்பில் விழும் சூரியக் கதிர்களையெல்லாம் ஒன்று சேர்த்துப் பார்த்தால் ஒரளவு எடையைக் கண்டறியலாம். அந்தக் கதிர்கள் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்தால் அவற்றின் மிகச் சிறிய அளவு எடையைக் காணலாம்.

ஆகவே, ஒருவிதத்தில் ஒளி புறப்பொருள் உலகின் ஒரு பகுதியாகும். மற்றொரு விதத்தில் அது பொருளற்ற உலகின் ஒரு பகுதியாகவும் இருக்கிறது.

குரு, ''நீ உனது மகனைப் புரிந்து கொள்ளவில்லை'' என்றார்.

இளவரசன் கொடுக்கப்பட்ட பணத்தில் பெரும் பகுதியைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.

"இது மிக அதிகமாக இருந்தது. நான் இந்த வீட்டைப் பல பரிமாணங்களில் நிரப்பியிருக்க முடியும். இங்கே இசையைக் கொண்டு வந்திருக்கலாம். அதற்கு எடை கிடையாது. நான் இங்கே சாம்பிராணியைக் கொண்டு வந்திருக்கலாம். அதன் நறுமணத்திற்கு எடை கிடையாது. அது இந்த மாளிகையை நிரப்பியிருக்கும். அதெல்லாம் மிக அதிகம் என்று நான் நினைத்தேன். இது போதும். ஏன் உங்கள் பணத்தை வீணடிப்பது? உங்கள் பணத்தைத் திரும்ப எடுத்துக் கொள்ளுங்கள். அதில் ஒரு சிறு பகுதியே போதுமானதாக இருந்தது'' என்றான் அவன்.

அசோக் நீ அன்பு செலுத்தும்போது ஒருவிதத்தில், புறப் பொருள் உலகைப் பொறுத்த வரையில் நீ ஒரு வெற்றிடத்திற்குள் மறைந்து போவதுபோல உணர்கிறாய். ஆனால் அதற்கு மறுபுறம், நீ ஒரு புதிய முழுமைக்குள் நுழைகிறாய். அது பொருளற்றது. ஆன்மிகமானது. இந்த உலகைச் சேராதது.

ஆனால் இதுமட்டுமே ஒரே ஒரு உலகம் அல்ல. இதைத் தாண்டிய வேறு ஒன்று, இதைக் கடந்த அப்பாலுள்ள ஒன்றும் இருக்கிறது.

என்னால் உனது அன்பைக் காண முடிகிறது.

இந்த முழு மாதமும் அது வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. உனக்குள் ஒரு வசந்தம் வந்து விட்டதுபோல, புதிய பச்சை இலைகள், புதிய மலர்கள், ஒரு புதிய மணம்; மேலும் உனது இதயம் புதிய காட்சிகளால் நிறைந்துள்ளது.

தொடர்ந்து அன்பினுள் கரைந்து கொண்டே இரு.

அதுதான் சீடனாக இருப்பதன் பொருள்: அன்புக்குள் கரைந்து போவது, குருவின் முன்னிலையில் கரைந்து போவது. அவரது இதயத் துடிப்போடு ஒன்றிணைந்து போவது. அப்போது பாடல்கள் உன்மீது மழையாகப் பொழியும், முன்னறி

யாத அனுபவித்திராத மணம் பொருந்திய மலர்கள் உனக்குள் மலரும்.

நீ சரியான பாதையில்தான் சென்று கொண்டு இருக்கிறாய்.

பின்னால் திரும்பிப் பார்க்காதே - எங்கேயும் நின்று விடாதே. ஏனெனில் இந்தப் பயணம் தொடங்க மட்டுமே செய்யும், ஒருபோதும் முடிவடையாது.

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் உங்கள் சீடனாக, மிகவும் சுயநலத்தோடு நான் என்ன செய்து கொண்டிருந்தாலும் எனது ஞானத்திற்கான வழியை மட்டுமே கண்டு கொள்வதா அல்லது உங்கள் நோக்கத்தைப் பரப்புவதற்காக ஒரு குறிப்பிட்ட செயலை நிறைவேற்ற வேண்டுமா?*

ஓஷோ: யாருமே எனது நோக்கத்தைப் பரப்ப எனது செய்தியை மக்களிடம் கொண்டு செல்ல கடமைப் பட்டிருக்க வில்லை என்பது வெகு தெளிவாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

'சமயப் பரப்பாளர்' என்ற சொல்லை நான் வெறுக்கிறேன். இவர்கள் உலகிலேயே மிகவும் அவலட்சணமான ஜந்துக்கள்.

சமயப் பரப்பாளர்களை உருவாக்க நான் விரும்பவில்லை.

நீ மிகவும் சுயநலத்தோடு ஞானம் அடைவது என்ற ஒரே ஒரு குறிக்கோளில் தீவிரமாக ஈடுபட்டு இருக்க வேண்டும்.

நிச்சயமாக நீ ஞானம் பெறும்போது, உனது ஒளி பிறரை அடையத் தொடங்கும். எனது செய்தி உன் வழியாக அதிரத் தொடங்கும்; உனது அன்பின் மூலமாக, உனது முயற்சி எதுவும் இல்லாமலேயே இது நடக்கும்.

'முற்றிலும் சுயநலத்தோடு இரு' என்று ஒருபோதும் சொல்லப்படவில்லை. உலகின் எல்லா மதங்களும், 'பிற நலன்

கொண்டு இரு' என்றுதான் கற்பித்து வந்துள்ளன. அவை எல்லாமே தோற்றுவிட்டன. ஏனெனில் அவற்றின் அடிப்படை தவறாக இருந்து வந்துள்ளது.

உண்மை என்னவென்று உங்களுக்குத் தெரியாது. ஆனால் நீங்கள் உண்மையைப் பற்றிய செய்தியைப் பரப்புகிறீர்கள்; நீங்கள் பொய் சொல்லுகிறீர்கள்.

நான் கிறித்தவ சமயப் பரப்பாளர்களை, 'உங்கள் அனுப வம் என்ன?' என்று கேட்டதுண்டு. அவர்களுக்கு எந்த அனுபவமும் கிடையாது. அவர்களிடம் இருப்பது எல்லாம் மதக்கல்விக் கல்லூரிகளிலிருந்து பட்டங்கள் மட்டுமே. ஒருவர் DD ஆக, தெய்விகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவராக இருக்கிறார். அவர் ஒரு ஆய்வுக் கட்டுரை எழுதியுள்ளதால் அவர் தெய்விகத் தின் டாக்டர் ஆகிறார். ஆனால் அவருக்கு தெய்விகத்தைப் பற்றி எதுவும் தெரியாது. தெய்விகம் என்று அவர் சொல்லக்கூடிய எதையும் அவர் ருசி பார்த்ததில்லை. உலகைக் கடந்துள்ள ஒன்றை அவர் தனது வாழ்வின் ஒரு கணத்தில்கூடத் தொட்ட தில்லை. அதற்கு அவருக்கு நேரமில்லை. அவர் புத்தகங்கள் படித்துக் கொண்டும், தனது ஆய்வுக் கட்டுரையை எழுதிக் கொண்டும் இருந்தார். அவர் வார்த்தைகளைப் பற்றி அக்கறை கொண்டு இருந்தார்; அனுபவத்தைப் பற்றி அல்ல.

நான் ஜபல்பூரில் குறைந்தது இருபது ஆண்டுகள் வாழ்ந் தேன். ஜபல்பூரில் ஆசியாவிலேயே மிகப் பெரிய கிறித்துவ சமயக் கல்லூரி இருக்கிறது. அது சமயப் பரப்பாளர்களைத் தயார் செய்கிறது. அதுதான் அதன் பணி.

அதன் முதல்வர் என்மீது பெரிதும் ஈடுபாடு கொண்டிருந் தார். நான் அவரைக் கேட்டேன்: "உண்மையாக இருங்கள். உங்களிடம் உடல் மற்றும் மனதைவிட அதிகமான ஏதோ ஒன்று இருக்கிறது என்று நீங்கள் உண்மையிலேயே உணர்கிறீர் களா? ஆன்மாவைப் பற்றிய ஏதாவது ஒன்றை நீங்கள் அனுப வித்திருக்கிறீர்களா?''

அவர் சொன்னார்: ''நான் அதுபற்றி நிறையப் படித்திருக்கிறேன். அதைப் பற்றி எழுதிய மனிதர்கள் பொய் சொல்லவில்லை என்று நம்புகிறேன்.''

''அவர்களும்கூட உங்கள் நிலைமையிலேயே இருப்பது சாத்தியம்தானே? பொய் சொல்ல மாட்டார்கள் என்று அவர்கள் நம்பிய பிறர் எழுதியதை அவர்களும் படித்திருக்கலாமே? ஆனால் நீங்கள் அனுபவித்தால் ஒழிய நீங்கள் நிச்சயமாகச் சொல்ல முடியாது. உங்கள் பேராசிரியர்களைப் பற்றி என்ன சொல்ல முடியும்? மேலும் நீங்கள் வருடத்திற்கு மூவாயிரம் சமயப் பரப்பாளர்களை ஆசியா முழுவதும் சென்று மக்களை கிறித்தவ மதத்திற்கு மாற்ற பட்டங்கள் கொடுத்து அனுப்புகிறீர்கள். இந்த முழுவிளையாட்டும் போலியானது. உங்கள் ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் ஒருவருக்கும் தியானம் பண்ணுகிற கலை தெரியவில்லை. அவர்கள் யாருமே கடவுளை கண்டதில்லை. மேலும் அவர்களில் எவருமே யேசுவைப்போல சிலுவையில் அறையப்படத் தயாராக இல்லை'' என்றேன் நான்.

''நீங்கள் யேசுவைப்போல் சிலுவையில் அறையப்படத் தயாரா?'' என்று நான் அவரிடம் கேட்டேன்.

''என்ன மாதிரியான கேள்வியை நீ கேட்கிறாய்? எனக்குப் பிள்ளைகள் இருக்கிறார்கள், மனைவி இருக்கிறாள், வயதான பெற்றோர் இருக்கிறார்கள்'' என்றார் அவர்.

''யேசுவுக்கும்கூட வயதான பெற்றோர்கள் இருந்தார்கள். உங்களுக்கு கிட்டத்தட்ட அறுபது வயதாகி விட்டது. அவர் வயது முப்பத்து மூன்று மட்டுமே. அப்படியென்றால் நீங்கள் ஏன் உங்கள் கழுத்தில் தங்கச்சங்கிலியில் தொங்கும் தங்கச் சிலுவையை அணிந்து கொண்டு இருக்கிறீர்கள்? ஏனென்றால் என்னைப் பொறுத்தவரையில் கழுத்துதான் சிலுவையில் தொங்க வேண்டும். தங்கச் சங்கிலியில் தங்கச் சிலுவை உங்கள் கழுத்தில் தொங்கக் கூடாது'' என்றேன் நான்.

''ஒரு நாள் உன்னை எனது மாணவர்களிடம் பேசச் சொல்லலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.'' - அங்கே

சுமார் ஐயாயிரம் மாணவர்கள் இருந்தார்கள். "ஆனால் இப் போது நான் அந்தக் கருத்தைக் கைவிட்டு விட்டேன். நீ மொத்தத்தையும் குழப்பிவிட்டு விடுவாய்" என்றார் அவர்.

இதே கேள்வியைத்தான் நீ என்னிடம் கேட்கிறாய். நான் உன்னை மதம் மாற்றம் செய்யவில்லை. நீ உன்னையே எவ்வாறு மாற்றிக் கொள்வது, எவ்வாறு அதிக ஒளியுடன், அதிக விழிப்புணர்வுடன், உணர்தலுடன் இருப்பது என்று விளக்கிச் சொல்ல முயன்று கொண்டு இருக்கிறேன்.

அந்தத் தெரிநிலையின் மூலம் சாதாரணமாகக் கிடைக்காத அனுபவங்கள் உனக்குக் கிடைப்பதாக இருந்தால், அந்த அனுப வங்களின் உள்ளார்ந்த மதிப்பு அவற்றைப் பிறருடன் பகிர்ந்து கொண்டாக வேண்டும் என்று ஆக்கினால் அப்போது அவற் றைப் பகிர்ந்து கொள். ஆனால் எந்த ஒரு சிந்தாந்தத்தையும் யார்மீதும் திணிக்க முயற்சி செய்யாதே.

நீ என்மீது அன்பு செலுத்துகிறாய். இயல்பாகவே, பிறரும் என்மீது அன்பு செலுத்த வேண்டும் என்ற ஆசை எழுகிறது.

இதில் சரியான வழி என்னவென்றால், பிறர் உன்மீது அன்பு செலுத்தும் நிலைமையை நீ அடைய வேண்டும்.

நான் உன்மூலமாகப் பிறருடன் தொடர்பு கொள்ள வேண் டும். உனது வார்த்தைகளால் அல்ல, உன்னுடைய வாழ்க்கை யால்.

ஒரு சமயப் பரப்பாளராக இருக்கக்கூடாது. நீயே ஒரு செய்தியாக ஆகவேண்டும்.

"உனக்கு என்னாயிற்று? உன்பால் நாங்கள் ஏன் இத்தகைய காந்த சக்தி ஈர்ப்பை உணர்கிறோம்? நீ ஏதோ ஒரு பொக்கி ஷத்தை எங்களிடமிருந்து மறைத்து வைத்திருப்பது போல நாங்கள் ஏன் உணர்கிறோம்? எங்களது சாதாரண காட்சிக்கு வெகு உயரத்தில் நீ சென்றுவிட்டது போல நாங்கள் ஏன் உணர்கிறோம்?" என்று பிறர் உன்னைக் கேட்க வேண்டும்.

அப்போது உனது அனுபவத்தைப் பகிர்ந்து கொள். யாரையும் மதமாற்றம் செய்யத் தேவையில்லை.

அதன்பின்னர், ஒருவர் தானாகவே மாற்றமடைய விரும்பி வரும்போது, ஒரு புதிய முறையில் வாழும் அறிவியல் முழுவதையும் கற்றுக் கொள்ள வரும்பொழுது அது முற்றிலும் மாறுபட்டது. அவர்களது சித்தாந்தத்தைவிட உனது சித்தாந்தம் மேலானது என்று பிறரை நீ எப்படியாவது ஏற்றுக் கொள்ள வைக்கப் போகும் பொழுது, ஒருசிலரை உனது சித்தாந்தத்தை ஏற்றுக் கொள்ளச் செய்வது சாத்தியமாக இருக்கலாம். ஆனால் அது மதமாற்றம் அல்ல. அவர்கள் அவர்களாகவேதான் இருக்கிறார்கள்.

கத்தோலிக்கன், புரோட்டஸ்டண்ட், இந்து, முஸ்லிம், யூதன், கம்யூனிஸ்டு - இவர்களது வாழ்க்கை முறையில் என்ன வேறுபாடு உள்ளது?

நீங்கள் இவர்களில் யாரையாவது அவமதித்தால் அவர்கள் ஒரே மாதிரிதான் எதிர்செயல் காட்டப் போகிறார்கள்.

எனக்கு ஒரு அழகான கதை நினைவுக்கு வருகிறது.

கௌதம புத்தர் உயர்சாதிப் பிராமணர்கள் மட்டுமே குடியிருந்த ஒரு கிராமத்தின் அருகே கடந்து சென்றார். அவர்கள் எல்லாரும் கௌதம புத்தருக்கு எதிரானவர்கள். அவர்கள் எல்லாரும் கௌதம புத்தரை வெறுத்து ஒதுக்கித் திட்டுவதற்கு என்று கிராமத்துக்கு வெளியே கூடியிருந்தார்கள். அவர் அங்கே நின்று அவர்களது அவமதிப்புகளை, குற்றச்சாட்டுகளை, பொய்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். இத்தனை வருடங்களாக அவருடன் கூட இருந்த ஆனந்தன்கூட கோபமுற்றான். ஏனெனில் அவர்கள் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் வீரர்கள். அவர்களது முழுப் பயிற்சியும் சண்டையிடுவதில் இருந்தது. ஆனால் கௌதம புத்தர் அங்கே இருந்ததால், அவன் தன்னைத்தானே அடக்கிக் கொள்கிறான். இல்லாவிட்டால் அங்கிருந்த ஒன்றிரண்டு பேரை அங்கேயே கொன்று போட்டிருப்பான்.

கௌதம புத்தர் அவர்களிடம், ''சூரியன் மறையப் போகி றது. மாலைக்குள் நாங்கள் அடுத்த கிராமத்தை அடைய வேண்டும். நீங்கள் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி முடிக்கவில்லையென்றால், நான் திரும்பி வரும்போது நீங்கள் சொல்வதை மீண்டும் கேட்க நேரம் ஒதுக்குகிறேன். இரண்டு நாட்களில் நான் இந்த வழியாகத்தான் திரும்பி வருவேன். எனவே தயவுசெய்து நீங்கள் இன்னும் இரண்டு நாட்கள் பொறுக்க வேண்டும்'' என்றார்.

கூட்டத்திலிருந்த ஒருவன், ''நீ வருத்தப்படுவதாகவே தெரி யவில்லையே. நாங்கள் ஒன்றும் உன்னிடம் சும்மா பேசிக் கொண்டிருக்கவில்லை. உன்னைத் திட்டுகிறோம்; அவமதிக் கிறோம்'' என்றான்.

''நீங்கள் சற்றுத் தாமதமாக வந்து விட்டீர்கள். பத்து வருடங்களுக்கு முன்பு வந்திருந்தால் உயிரோடு திரும்பிப் போயிருக்க மாட்டீர்கள். நானும் ஒரு போர்வீரன்தான். இங்கே இரத்த வெள்ளம் பாய்ந்திருக்கும். இந்தக் கட்டத்தில் ஒருவன்கூட உயிரோடு திரும்பிப் போயிருக்க மாட்டான்'' என்றார் கௌதம புத்தர். ''இதற்கு முன்பு உள்ள கிராமத்தில், மக்கள் இனிப்பு களையும் பழங்களையும் கொண்டு வந்தனர். அவர்களிடம் 'நாங்கள் ஒரு நாளைக்கு ஒருமுறைதான் உண்பது வழக்கம். நாங்கள் ஏற்கனவே உண்டு விட்டோம். எனவே இவற்றை மீண்டும் உங்களுடனேயே எடுத்துச் சென்றுவிடுங்கள். நன்றி' என்று கூறினோம். அந்த இனிப்புகளையும் பழங்களையும் அவர்கள் என்ன செய்தார்கள் என்று நினைக்கிறீர்கள்?'' என்றார் கௌதமபுத்தர்.

''அதைக் கொண்டு போய் தமக்குள் பங்கிட்டுக் கொண்டி ருப்பார்கள். அவற்றை அவர்களே சாப்பிட்டு இருப்பார்கள்'' என்றான் ஒருவன்.

''நீங்கள் புத்திசாலிகள்தான். அதையே நீங்களும் செய்யுங் கள். நீங்கள் என்னவெல்லாம் கொண்டு வந்தீர்களோ அவற்றை

நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அவற்றைத் திரும்ப எடுத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் உங்கள் அவமதிப்பை நான் ஏற்றுக் கொண்டால் ஒழிய, நீங்கள் என்னை அவமதிக்க முடியாது. இது ஒரு இரு வழிப்பட்ட விஷயம். அது உங்கள் வாய், அதனால் நீங்கள் என்ன வேண்டுமென்றாலும் சொல்லலாம். ஆனால் நான் அதை ஏற்றுக் கொள்ளாவிட்டால் நீங்கள் சும்மா காற்றில்தான் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். வீட்டிற்குத் திரும்பிச் சென்று நீங்களே அவற்றை ஒருவருக்கொருவர் சொல்லி மகிழுங்கள். மேலும் இன்னும் இரண்டு தினங்கள் கழித்து நான் மீண்டும் இந்த வழியாகத்தான் வருவேன். எனவே தயாராக இருங்கள்'' என்றார் கௌதம புத்தர்.

அவர்கள் அதிர்ச்சியுற்றனர் - அவர்களால் இதை நம்ப முடியவில்லை. என்ன விதமான ஆள் இந்த மனிதன்?

அவர்கள் சென்றுவிட்ட பின்னர், புத்தரிடம் ஆனந்தன் சொன்னான்: ''இது ரொம்ப அதிகம். சில சமயங்களிலே நான் அந்த மனிதனைக் குதித்தெழுந்து அடித்திருப்பேன்! உங்களால் தான் நான் அந்த ஆசையை அடக்கிக் கொண்டேன்:''

புத்தர் கூறினார்: ''இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அவர்கள் சொன்னது என்னை வருத்தப்படுத்தவில்லை. நீ சொல்வதுதான் என்னை வருத்தப்படுத்துகிறது. நீ என்னுடன் இத்தனை வருடங்களாக இருந்திருக்கிறாய். இருந்துமா எதை எடுத்துக் கொள்வது எதை எடுத்துக் கொள்ளக்கூடாது என்று உனக்குத் தெரியவில்லை? உன்னால் பாகுபடுத்திப் பார்க்க முடியவில்லையா?''

நான் நீங்கள் சமயப் பரப்பாளராக ஆவதை விரும்பவில்லை, நீங்களே செய்திகளாக ஆவதை விரும்புகிறேன்.

நீங்கள் முற்றிலும் சுயநலமாக இருந்தால்தான் அது சாத்தியம். அதாவது, பிறருக்கு உதவி செய்ய நீங்கள் தொடங்குவதற்கு முன்பு, நீங்கள் உங்களுக்கே உதவி செய்து கொண்டீர்கள். பிறரை ஞானம் பெற வைக்கத் தொடங்குமுன், நீங்களே ஞானம் பெற்றவர்கள் ஆகிறீர்கள்.

அதைத்தான் நான் சுயநலத்தோடு இருப்பது என்று கூறுகிறேன்.

நீங்கள் பரப்ப விரும்புவது எதுவாக இருந்தாலும் அது உங்கள் வாழ்க்கையின் அனுபவமாக இருக்க வேண்டும்.

அன்பிற்குரிய பகவான்,

உங்களுடன் இங்கே இருக்கின்ற நாட்கள் நிச்சயமாயக மிக அழகானவை. எதுவுமே செய்யாமல் தோட்டத்தில், எனது அறையில் அமைதியாக அமர்ந்திருக்க இத்தனை நேரம்... காற்றில் மரங்கள் ஆடுவதையும், வெயிலில் பளபளப்பதையும் காண முடிவது... எத்தனை அழகு!

எனது மனம் இறுதியாக மூடப்பட்டு இருக்கும் கருத்துக்கு பழகிப் போய் விட்டது. நான் மிகமிக அமைதியாக, மகிழ்ச்சியாக இருக்கிறேன். இன்று இப்போது, இந்த மௌனத்தின் பாதையில் மீண்டும் உள்ளே செல்லும்போது எனது எண்ணங்கள் மிதந்து விலகிச் சென்று என்னை ஒரு வெற்றிடம் சூழ்ந்து கொள்ளும் பொழுது, எனக்குள் ஒரு இறுக்கத்தை உணர்கிறேன். அது நான் எதையோ பற்றிக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது.

எனது அன்பிற்குரிய குருவே, நான் எதைப் பற்றிக் கொண்டிருக்கிறேன். அதை நான் எவ்வாறு விட்டு விடுவது?

ஓஷோ: நீ எதைப் பற்றிக் கொண்டிருக்கிறாய், உனது மெல்லிய இறுக்கம் உள்ளே என்னவாக இருக்கிறது என்பதைக் கண்டறிவது கடினம் அல்ல.

நீ முன்னெப்போதும் உணராத அளவு சமாதானமாக, மௌனமாக, மகிழ்ச்சியாக உணர்கிறாய். எனவே இதற்குப் பக்கத்திலேயே ஒரு அச்சமும், குடிகொண்டு இருக்க வேண்டும். விரைவில் நீ இங்கிருந்து போய்விடுவாய். இந்த சமாதானம், இந்த மௌனம், இந்த சந்தோஷம் உன்னில் ஒரு பகுதியாக நிலைத்திருக்குமா? அல்லது நீ என்னைவிட்டு விலகிச் சென்றவுடனேயே இதுவும் மறைந்து விடுமா?

இந்த பயம் உனக்குள் மட்டுமல்ல, ஒவ்வொரு சீடனின் மனதிலும் உள்ளது. அதாவது நீ இங்கே இருக்கும்பொழுது அது ஒரு விஷயம், நீ மீண்டும் கடைத் தெருவுக்கு, உலகத்திற்குச் செல்லும்போது, அதுமேலும் துயரமிக்கதாக, முன்னைவிட வருத்தம் தருவதாக உணர்வாய். ஏனெனில் அதோடு ஒப்பிட்டுப் பார்க்க இப்போது உன்னிடம் வேறு ஒரு விஷயம் இருக்கிறது.

இதை நீ பார்த்ததுண்டா? நீ ஒரு சாலையின் பக்கத்தில் நின்று கொண்டு இருக்கிறோம். முகப்பு விளக்குகளோடு ஒரு கார் கடந்து செல்கிறது. ஒரு சிறிய தருணம் இருள் மறைந்து போகிறது. கார் சென்று விடுகிறது. வினோதமாக, கார் சென்ற பின்னர் இருள் மேலும் கரியதாக கார் வருமுன் இருந்ததைவிட அடர்த்தியாகத் தெரிகிறது. நீங்கள் ஒளியைப் பார்த்து விட்டீர்கள். இப்போது ஒரு ஒப்புநோக்குதல் உள்ளது.

இந்த பயம் இயற்கையானதுதான்.

இதைப் பற்றி ஒன்றுதான் செய்யமுடியும். அது, அதை அடக்காமல் மேலே வர அனுமதிப்பதுதான். நீ அடக்கி வைக்கிறாய். அதனால் உள்ளே எங்கேயோ உன்னை எது சஞ்சலப் படுத்துகிறது என்று உன்னால் கண்டு பிடிக்க முடியவில்லை. அதை மேலே வர அனுமதி கொடு. அந்தப் பயத்தையும் அனுபவித்துப் பார்.

அந்தப் பயத்தை ஏற்றுக் கொள், பயத்தின் சவாலை ஏற்றுக் கொள். உனது மனதிடம், 'நான் எங்கே இருக்கிறேன் என்பது முக்கியமல்ல. நான் எதை அனுபவித்தேனோ அது என்னுடைய அனுபவம். அதை என்னால் மீண்டும் உருவாக்க முடியும்' என்று சொல்லுங்கள்.

அது என்னுடைய முன்னிலையால் தூண்டப்பட்டு இருக்கலாம். ஆனால் அது எனது அனுபவம் அல்ல, உன்னுடைய அனுபவம்.

அது உன்னுடைய அனுபவம் என்பது உனக்குள் ஆழமாக நிச்சயப்படுத்திக் கொள்ளப் படட்டும். அதற்கும் எனக்கும் ஒரு தொடர்பும் இல்லை. நான் ஒரு கிரியா ஊக்கியாக இருந்திருக்க லாம்? ஆனால் அந்த அனுபவம் உன்னுடையது.

மேலும் இப்போது ஒருமுறை நடந்த பின்னர், அதை உலகில் எங்கு வேண்டுமானாலும் உருவாக்கலாம். ஒருவேளை, நீங்கள் முதலில் அதைச் சற்றுக் கடினமாக உணரலாம்; ஏனெனில் நீங்கள் எனது முன்னிலையோடு தொடர்புபடுத்திப் பழகி விட்டீர்கள். ஆனால் அது எனது முன்னிலையின் மீது சார்ந்தது அல்ல.

அது நீங்கள் ஒரு விளக்கை மற்றொரு விளக்கைக் கொண்டு ஏற்றுவது போலாகும். ஆனால் ஒருமுறை ஒரு விளக்கு ஏற்றப்பட்டு விட்டால் அதற்கே சொந்தமான ஒரு சுடர் அங்கு இருக்கிறது. ஒருவேளை தொடக்கத்தில் மற்றொரு சுடரின் அருகே இருக்க வேண்டியிருக்கலாம். ஆனால் அது ஒருமுறை சுடர்பற்றிக் கொண்டுவிட்டால் அதற்குத் தனக்கே சொந்தமான சுடர் இருக்கிறது. அது அதற்கு மேல் மற்றதைச் சார்ந்து இருப்பதில்லை.

நீ இங்கிருந்து சென்றுவிடும்போது நான் சொல்லுவதை அனுபவிப்பாய் - அதற்கு ஒரு வாய்ப்புக் கொடு. இப்போது இங்கே குரு இல்லாததால் அது நிகழ முடியாது என்று முடிவு எடுத்து விடாதே.

அது உனக்குள் இருக்கும் ஒன்று என்று உனக்கு உணர் விக்க குரு தேவைப்பட்டார். இப்போது நீ அதைப் பார்த்துவிட் டாய்.

எங்கேயிருந்தாலும், உனது கண்களை மூடிக்கொள்- அந்த அமைதி, அழகு, மகிழ்ச்சியை உன்னால் மறு உருவாக்க முடியும். குருவின் முன்னிலையைக் கூட உன்னால் மறு உருவாக்க முடியும் - அதுதான் மிகக் கடினமானது. ஆனால் முடியாதது அல்ல. அது உன் அன்பு எவ்வளவு தீவிரமானது,

உனது நம்பிக்கை எவ்வளவு ஆழமானது என்பதைப் பொறுத்தது. ஆனால் அதை முயற்சி செய்யத் தேவையில்லை.

முதலில் உனக்குள்ளேயே உருவாக்கக்கூடிய விஷயங்களை முயற்சி செய். அவை எல்லாவற்றையும் ஒருமுறை உருவாக்கி விட்ட பின்னர், மிக மகத்தான அழகுள்ள அனுபவமான குருவின் முன்னிலையை உருவாக்குவதை முயற்சி செய்யலாம்.

எனவே கவலைப்படாதே. உனது பயத்தை சும்மா மேலே கொண்டுவா. மேலும் அது உனக்குள் மட்டும் இல்லை. அது அனைவருக்குள்ளும் உள்ளது. அது இயற்கையாக இருக்கும் விஷயங்களில் ஒன்று. எனவே அதற்கு அதீத முக்கியத்துவம் கொடுக்கவும் வேண்டாம். அதை ஒரு இயற்கையான விதியாக ஏற்றுக் கொள். அது நீ என்னிடமிருந்து அகன்று சென்று செய்யும் சிறுசிறு பரிசோதனைகளால் மறைந்து போகும்.

அது மறைந்து போகும் என்று நான் நிச்சயமாக்க் கூறுகிறேன். ஏனெனில் இதை நான் எனது ஆயிரக் கணக்கான சன்னியாசிகளுக்கு உறுதியாகக் கூறியிருக்கிறேன். அது அவர்களது வாழ்விலிருந்து மறைந்து போயிருக்கிறது. உனது வாழ்விலும் அது ஏன் மறையக் கூடாது என்பதற்கு ஒரு காரணமும் இல்லை. விதிமுறைகள் எல்லாமே ஒன்றுதான். இவற்றுக்கு விதி விலக்குகள் ஏதும் கிடையாது.

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் பெரும்பாலும் ஒரு உணர்வற்ற நிலையில் இருக்கிறேன். தெரிநிலையின்றி சும்மா வாழ்வதிலும், அதை ரசித்து மகிழ்வதிலும் ஈடுபட்டு இருப்பதாக உணர்கிறேன். தேடுதலின் முழுமையையும் தீவிரத்தையும் பற்றி நீங்கள் பேசும் பொழுது, வேறு எதுவும் முக்கியமில்லை என்றும், எதையும் ஒரு திசை திருப்புதலாக அனுமதிக்காமல் இருப்பது எவ்வளவு முக்கியம்*

என்றும் கூறும் பொழுது, என்னால் அதை ஒருபோதும் செய்ய முடியாது என்று பயப்படுகிறேன்.

எனது இதய ஆழத்திலிருந்து, வேறு எதுவும் முக்கிய மில்லை என்று நான் உணர்கிறேன். எனினும், இந்தத் தெரிநிலை யோடு நான் எல்லாச் சமயங்களிலும், ஒவ்வொரு நிலைமையி லும் வாழ்வதில்லை.

மிகத் தீவிரமான முயற்சி அதற்காகத் தேவைப்பட்டாலும், இந்தத் தெரி நிலையை ஒவ்வொரு தருணத்திலும் கொண்டு வர முயற்சி செய்வது எனக்கு நல்லதா? இது எனக்கு நல்லது என்று நீங்கள் நினைத்தால், நான் அதை முயற்சி செய்வேன். எனினும், சும்மா வாழ்வதன் இயல்பான தன்மையையும் வேடிக்கையையும் நான் இழந்து விடுவேன் என்று எனக்கு அச்சமாக உள்ளது. மேலும் என்னால் அதை சாதிக்க முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை.

ஓஷோ: மைத்ரி. இந்தக் கேள்வி அனைவருக்கும் முக்கியத்து வம் வாய்ந்தது. ஏனெனில் நான் நிறைய மனிதர்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். இங்கே அமர்ந்திருப்பவர்கள் மட்டுமல்ல, எனது பேச்சைக் கேட்கப் போகின்ற அல்லது எழுத்தைப் படிக்கப் போகின்ற கோடிக்கணக்கான மக்களிடமும் பேசிக் கொண்டிருக்கிறேன்.

இது ஒரு சிரமமான காரியமாகிறது. ஏனெனில் மனிதர்கள் பல விதங்களிலும் மாறுபட்டவர்கள். நிச்சயமாக எந்த இரண்டு மனிதர்களும் ஒன்றுபோல இருப்பதில்லை.

இதில் அபாயம் என்னவென்றால், உனக்குப் பொருத்தமில் லாத ஒன்றை நீ செய்யத் தொடங்கலாம்.

இங்கு ஒரு எளிய விதிமுறை நினைவில் கொள்ளப் படவேண்டும். உங்களுக்கு என்ன நல்லதாகத் தோன்றுகிறதோ - பேரின்பமானது, சமாதானமானது, இயல்பானது, தானாகவே நிகழ்கிற ஒன்று - அதுதான் உங்களது பாதை.

ஆனால் எதுவுமே தானாகத் தோன்றாத அந்த மனிதர்களுக் காகவும் நான் பேச வேண்டும். அவர்களுக்கு இளைப்பாறுதல் எல்லாவற்றையும் விட மிகக் கடினமானது, சும்மா உட்கார்ந்து எதுவும் செய்யாமல் இருப்பது செய்ய முடியாத ஒரு காரியம். அவர்களுக்கும் எல்லாவித உதவியும் தேவை.

அவர்களுக்கு நான் சொல்கிறேன், முழுத் தீவிரத்துடன் முழு முயற்சியுடன் வாழுங்கள். ஏனெனில் அதுதான் அவர்களுக்கு மிக சுலபமான செயல். மேலும், எது சுலபமாக இருக்கிறதோ அது உண்மைக்கு வெகு அருகில் இருக்கிறது.

மைத்ரி, அது உனக்கு மிகச் சுலபமானதாக இருக்காது, நீ அந்த முயற்சியை உனக்கு எதிராகச் செய்ய வேண்டியிருக் கும். அது இயற்கையானதாக இருக்காது, இயல்பாக வருவதாக இருக்காது.

நீ உன்னையே கட்டாயப்படுத்திக் கொள்வாய். இது நீ ஏற்கனவே உணர்ந்து கொண்டிருக்கும் முழுமையான அமைதி, அழகு மற்றும் மௌனத்தை அழித்து விடும்.

இயல்பாக வருவதிலிருந்து, இளைப்பாறுதலிலிருந்து, விட்டு விடுவதிலிருந்து அமைதி, மௌனம் ஒரு அழகான சக்தி இவற்றை நீ உணர்ந்தால், அப்போது அது. உனது வழி.

ஒவ்வொருவரும் தனது இதயத்திற்கு மிக அருகில் எது உள்ளது என்று கண்டுபிடிக்க வேண்டும்.

நான் பலதரப்பட்ட பல மனிதர்களுக்காகப் பேசுகிறேன்.

நீ உனக்கு எது சரியோ அதைக் கண்டு கொள்ள வேண்டும். நான் சொல்லுவது எல்லாவற்றையும் நீ செய்து கொண்டிருந்தால் நீ சிக்கலில் மாட்டிக் கொள்வாய்.

நீ சும்மா உனது இதயம் எதை ஆதரிக்கிறதோ அதைச் செய்.

இதயம் ஒருபோதும் தவறு செய்வதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். மனம் என்பது சரியாக இருக்கலாம்,

தவறாக இருக்கலாம். இதயம் எப்போதுமே சரியானது. அது தவறாக இருப்பதற்கு இடமேயில்லை.

எனவே உங்கள் இதயம் எதைப் பற்றியாவது சுகமாக உணர்ந்தால், முன் சென்று அதைச் செய்யுங்கள் - வேருடன் முழுவதுமாக. அதன் பின்னர் திரும்பிப் பார்க்காதீர்கள். பிறர் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று கவலைப்படாதீர் கள். அவர்கள் செய்வதை அவர்கள் செய்யட்டும்; நீங்கள் செய்வதை நீங்கள் செய்யுங்கள்.

கடந்த காலத்து மதங்கள் ஒரே ஒரு முறையை வலியுறுத்திய தால், இயல்பாகவே அந்த மதம் ஒரே ஒரு மாதிரியான மனிதர்களுக்கு ஏற்றதாயிற்று. இதனால்தான் இந்த பூமியில் முந்நூறு மதங்கள் இருக்கின்றன.

எனக்கு ஒரே ஒரு மதத்தன்மைதான் வேண்டும்.

அந்த முந்நூறு மதங்கள் எல்லாம் ஏதாவது ஒருவிதமான உண்மையை, சரியான தன்மையைக் கொண்டுள்ளன. ஆனால் அவை ஒரு குறிப்பிட்ட முறையின் தனித்தன்மை பெற்றவை, ஒரு குறிப்பிட்ட மக்களுக்கு மட்டுமே பொருந்தியவை. இதுதான் உலகம் முழுவதையும் மதமற்ற நிலைக்குத் தள்ளி விட்டது.

உதாரணமாக, மகாவீரரின் வழி, முயற்சி ஆகும். விட்டு விடுதல் என்ற வார்த்தையைச் சொல்லுவதுகூட சோம்பேறித் தனத்தை ஆதரிப்பதாகும்.

'மகாவீரர்' என்பது அவர் பெயர் அல்ல. அவர் பெயர் வர்த்தமானன் என்பதாகும். உண்மை என்பது வென்றெடுக்கப் பட வேண்டிய ஒன்று என்பது அவரது கண்ணோட்டமாகவும் அணுகுதலாகவும் இருந்ததால் அவர் மகாவீரர் என்று அழைக்கப் பட்டார். இது ஒரு காதல் உறவல்ல. இது ஒரு போர். மகாவீரர் அந்தப் போரில் வெற்றியடைந்தார். அதனால்தான் அவர் ஒரு மகத்தான வீரர் என்று அழைக்கப்பட்டார். மகாவீரர் என்றால் மகத்தான வீரர் என்று பொருள்.

இப்போது இது சிக்கலை உண்டு பண்ணுகிறது. அவரது முறை ஒரு குறிப்பிட்ட வகை நபர்களுக்கு மட்டுமே பொருந்தும் - வீரர் வகை. அவரது கற்பித்தலின் மூலம் இவரைப் பின்பற்றுபவர்கள் - இவர்கள் அனைவருமே சத்திரியர்கள், இந்தியாவின் வீரர்சாதி - அனைவரும் தமது தொழிலை விட்டுவிட வேண்டியதாயிற்று. ஏனெனில் அது வன்முறையானது.

இப்போது அவர்கள் சங்கடத்தில் இருந்தார்கள் - என்ன செய்வது? அவர்களால் பிராமணர்களாக இருக்க முடியாது. ஏனென்றால், பிராமணர்கள் பிறக்கத்தான் வேண்டும். படிப்பதாலோ வேறு எதுவும் செய்வதாலோ ஒருவர் பிராமணராக முடியாது. அதற்கு வழியே இல்லை. ஒரு பிராமணன் பிறக்கிறான். பிராமணராக யாரும் மாற முடியாது. எனவே இந்த மனிதர்கள் பிராமணர்களாக மாற முடியாது.

இவர்கள் சூத்திரர்களாக, தீண்டத்தகாதவர்களாகவும் ஆக முடியாது. ஏனெனில், அவர்கள் உயர்சாதி. இந்துக்கள். இவர்கள் பிராமணர்களுக்கு அடுத்தவர்கள். அவர்களுக்கு அதில் ஒரு தற்பெருமை இருந்தது.

அவர்களுக்கு இருந்த ஒரே வழி வியாபாரிகள் ஆவதுதான். எனவே இந்தியாவில் உள்ள ஜைனர்கள் அனைவரும் வியாபாரிகள். இவர்கள் விவசாயம் செய்பவர்களாக, தோட்டக்காரர்களாக ஆகமுடியாது. ஏனெனில், விவசாயம் அல்லது தோட்டத் தொழிலில் நீங்கள் மரங்களை வெட்ட வேண்டும். மரங்களுக்கு உயிர் இருப்பதால் அது வன்முறையாகிறது. எனவே இந்த எல்லாத் துறைகளும் ஒதுக்கப்பட்டன.

இந்த வியாபாரிகள் மகாவீரரைப் போலப் பயிற்சி பெற்றவர்கள் அல்ல. மகாவீரர் தனது இளமைப் பருவத்தில் போர் வீரராகப் பயிற்சி பெற்றிருந்தார். இந்தப் போரிடும் குணங்களை அவர் தனது உண்மைக்கான தேடுதலில் கொண்டுவந்தார். இப்போது இந்த வியாபாரிகள் போரிடுவதற்காகப் பயிற்சி பெறவில்லை.

யாராவது அவர்களிடம் வந்து உண்மையை விலைக்கு வாங்கலாம் என்றால் அவர்கள் அதற்குத் தயாராக இருப்பார்கள்! ஆனால் உண்மை என்பது வெற்றி கொள்ளப்பட வேண்டும்? இது அவர்களுக்கு கைக்கெட்டாததாக இருந்தது. 'வெற்றி கொள்வது' என்பது அவர்களது திறமைக்கு அப்பாற்பட்டது.

அவர்களால் செய்ய முடிந்ததெல்லாம் மகாவீரரை வழிபடு தல்தான். இருபத்தி ஐந்து நூற்றாண்டுகள் கடந்து விட்டன. மகாவீரரைப் போன்ற குணாம்சங்கள் கொண்ட மற்றொருவரை அவர்களால் உருவாக்க முடியவில்லை. இதற்கு என்ன காரணம்?

அவர் ஒரு வகை மனிதர்களின் பிரதிநிதியாக இருந்தார். அந்த வகை மனிதர்களுக்கு பிரசங்கம் செய்தார். ஆனால் தற்செயலாக, விபத்துப்போல் அவரைப் பின்பற்றிய மனிதர்கள் அந்த வகையைச் சார்ந்தவர்கள் அல்ல, அந்த வகையைச் சார்ந்தவர்களாக இருக்க முடியாது. எனவே அவர்கள் ஒரே இடத்தில் தேங்கி விட்டனர். முன்னாலோ பின்னாலோ அவர் களால் அசைய முடியவில்லை.

அவர்களால் வியாபாரம் செய்ய முடியும். அவர்கள் இந்தி யாவிலேயே மிக அழகான கோவில்களையும், சிற்பங்களையும் உருவாக்கியுள்ளனர். அவர்களால் வழிபட முடியும். ஆனால் சண்டையிடுவது? அது சாத்தியமே அல்ல.

எனவே இது ஒரு வினோதமான நிலைமை - அவர்கள் பின்பற்றும் குரு ஒரு வேறுபட்ட வகையினர். அவர்கள் அவரது தனித்தன்மையில் கவரப்பட்டனர். அவர் ஒரு இரும்பு மனிதர். ஆனால் அவரது பின்பற்றுபவர்களால் அவரை சும்மா புகழத் தான் முடிந்தது. அவர்களது குரு செய்ததை அவர்களால் செய்ய முடியாது. இது ஜைனர்களைப் பற்றி மட்டுமல்ல, உலகின் ஒவ்வொரு மதத்திற்கும் உண்மையான நிலைமை இதுதான்.

மேலும் உங்கள் பிள்ளை உங்களைப் போன்றே இருக்க அவசியமில்லை. ஆனால் ஒரு குறிப்பிட்ட அசம்பாவிதத்தால் நாம் மதம் என்பது பிறப்பால் வருவது என்று ஏற்றுக் கொண்டு

விட்டோம். இது மிகவும் முட்டாள்தனமானது. இது ஒரு மருத்துவரின் பிள்ளை அவருக்குப் பிறந்ததாலேயே மருத்துவ ராக வரவேண்டும் என்று சொல்வது போல உள்ளது. அவன் மருத்துவக் கல்லூரிக்குப் போகத் தேவையில்லை. என்ன அவசியம்? மேலும் அவன் மருத்துவரின் பிள்ளையாக இருந்து அவனது தாயும் ஒரு மருத்துவராக இருந்துவிட்டால் - பின்னர் கேள்வியே இல்லை - அவனது எலும்பிலும் இரத்தத்திலும் அவன் ஒரு பிறவி மருத்துவன். அவனுக்கு சான்றிதழ்கள் தேவையில்லை.

நாம் இதைச் செய்யாமலிருப்பது நல்லது.

ஆனால் மதத்தைப் பொறுத்தவரையில் நாம் இதைச் செய்து வருகிறோம்.

வழிபாடு செய்வது அனுமதிக்கப்படாத ஒரு மதத்தில் சிலர் பிறந்துள்ளதை நான் பார்த்துள்ளேன். அந்த மதம் வழிபாடு செய்யும் குணமுடையவர்களுக்கானது அல்ல. ஆனால் அந்த நபர் வழிபாடு செய்யும் வகையைச் சார்ந்தவர். ஒரு மனிதரால் எதிர்மறை அணுகுதலை சுலபமாகக் கையாள முடியும். மற்றொரு மனிதருக்கு எதிர்மறை அணுகுதல் செய்ய முடியாத செயலாகி விடுகிறது. ஏதாவது நேர்மறையான விஷயம் அங்கு இருந்தால் ஒழிய அவரால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது.

மதம் என்பது பிறப்பால் நிர்ணயிக்கப்பட்ட ஒன்றாக இருக்கக் கூடாது என்பது எனது கருத்து. மதம் என்பது குறிப்பிட்ட நபரால் தனது சொந்த உணர்வுகளுக்கு ஏற்ப நிர்ணயிக்கப்பட வேண்டும். அவர் எங்கே சுகமாக உணர்கிறாரோ, எங்கே வளர்கிறாரோ, மகிழ்ச்சியாக உணர்கிறாரோ, எங்கே ஒரு காந்தசக்தி ஈர்ப்பை உணர்கிறாரோ அதுதான் அவரது வழி. அந்த மதம் அவர் பிறந்த மதமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதற்காகத்தான் அவர் பிறந்திருக்கிறார்.

ஆனால் அனைவரும் இந்த மதநீதியான, அடிமைத் தனத்தி லிருந்து விடுதலை பெற்றால்தான் அது சாத்தியம். நாம் நமது பிள்ளைகளை எல்லாவிதமான மதங்கள் மற்றும் வழிமுறைகளுக் குப் பரிச்சயப்படுத்த வேண்டும். நாம் அவர்களை பலதரப்பட்ட மனிதர்களுடன் பழகச் சொன்னால், உணரச் சொல்ல வேண்டும். பல்வேறு கோவில்களுக்குப் போங்கள், பல்வேறு பள்ளிகளுக் குச் செல்லுங்கள். பல்வேறு குருக்களிடம் சென்று உங்கள் வழியை உணர்ந்து கொள்ளுங்கள் என்று சொல்ல வேண்டும். அவன் இதுதான் தன்னை வளரச் செய்கிறது என்று எப்போது உணர்கிறானோ, அப்போது பெற்றோர் அவனை ஆசீர்வதித்து அந்தப் பாதையில் செல்ல விட வேண்டும்.

நீங்கள் முகமதன் சூஃபியின் அருகாமையிலோ அல்லது ஒரு புத்தமடகுருவின் அருகாமையிலோ ஊட்டம் பெறுவதாக உணர்ந்தாலும் பரவாயில்லை. உங்கள் சொந்த இதயத்தால்தான் இந்த முழுக்கேள்வியும் பதிலளிக்கப்பட வேண்டும்.

உங்கள் இதயம் உங்களுக்கு எப்போதும் தப்பான வழி யைக் காட்டாது. நீங்கள் அதை அனுமதித்தால் அது உங்களுக் குத் தெளிவான குறியீடுகளின் மூலம் நீங்கள் சரியான பாதையில் இருக்கிறீர்கள் என்று தெரியப்படுத்தும். சமாதானம், அமைதி, ஆனந்தம், அருள் இவை எல்லாமே அதிகமதிகமாக வரும், உங்கள் வழி மேலும் மேலும் அகலமாகும்.

*அன்பிற்குரிய பகவான்,*
*யார் அருளாசி பெற்றவர்?*

ஓஷோ: உனக்குள் உறங்கிக் கொண்டிருப்பவன் அருளாசி பெற்றவன். ஆனால் துரதிருஷ்டவசமாக அவன் தூங்கிக் கொண்டும் குறட்டை விட்டுக் கொண்டும் இருக்கிறான்.

அவன் விழிப்படையச் செய்யப்பட வேண்டும். உனது உறங் கும் உணர்நிலை விழிப்படைந்த அந்தத் தருணத்தில் நீ பேரானந் த்தை உணரத் தொடங்குகிறாய்.

உனது பேரானந்தத்தின் உச்சக் கட்டம் உன்னை மனித குலத்திற்கு அப்பால் செல்ல உணரும்படி செய்கிறது. அந்தத் தருணம்தான் அருளாசி பெற்றவனாக இருக்கும் தருணம். நீங்கள் பிரபஞ்சத்தின் பேரானந்தத்தின் ஒரு பகுதியாக ஆகி விடுகிறீர்கள்.

ஆனால் மனிதர்கள் மிகவும் உறங்கிக் கொண்டு இருக்கிறார்கள்.

மனிதர்களின் உறக்கத்தினால் நான் மிகவும் துன்பமடைந்துள் ளேன்.

ஏனெனில் நான் இந்தியாவில் தொடர்ந்து பயணம் செய்து வந்துள்ளேன். பெரும்பாலும் நான் குளிர்வசதி செய்யப்பட்ட பெட்டியில் செல்வேன். சில சமயங்களில் அதில் என்னோடுகூட மற்றொருவரும் வருவார். சில சமயங்களில் சிறுபெட்டி கிடைக்கா மல் போகும்பொழுது நால்வர் பயணம் செய்வோம்.

ஒருமுறை இது நடந்தது. நான் கல்கத்தாவிலிருந்து நால்வர் கொண்ட பெட்டியில் வந்து கொண்டு இருந்தேன். நான் பல குறட்டைவிடும் மனிதர்களைப் பார்த்ததுண்டு. ஆனால் இந்த மூன்று ஆசாமிகளை என்னால் மறக்க முடியாது.

இவர்களிடம் ஒரு குறிப்பிட்ட இணக்கம் இருந்தது. ஒருவர் குறட்டை விடுவார்; மற்ற இருவரும் அமைதியாக இருப்பார்கள். இவர் குறட்டைவிட்டு முடிந்ததும் அடுத்தவர் முதலாமவரைவிட பலமாகக் குறட்டை விடுவார்; மற்ற இருவரும் அமைதியாக இருப்பார்கள். இரண்டாமவர் குறட்டைவிட்டு முடிந்ததும், மூன்றா மவர் மற்ற இருவரைவிட பலமாகக் குறட்டை விடுவார்; மற்ற இருவரும் அமைதியாக இருப்பார்கள்.

இந்தச் சுற்று தொடர்ந்தது.

இதை நான் ஒரு மணிநேரம் கேட்டேன். பின்னர், ''இது மிகவும் அசாத்தியமான காரியம். நான் யாருடைய வாழ்விலும் தலையிட விரும்பவில்லை. ஆனால் இந்த மூன்று நபர்களும் எனது வாழ்வில் குறுக்கிடுகிறார்கள்'' என்றேன்.

எனவே, மூன்றாமவர் நிறுத்தியதும், நான் மிகப் பலமாகக் குறட்டை விட்டேன். அந்த மூவரும் எழுந்து விட்டார்கள்.

அவர்கள் நான் கண்களைத் திறந்து கொண்டே குறட்டை விடுவதைக் கண்டு, நம்ப முடியாமல் திகைத்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு, ''இவர் என்னவிதமான மனிதர்? இவர் கண்கள் திறந்திருக்கின்றன'' என்றனர்.

நான் எனது கண்களை இமைக்கவில்லை.

அவர்கள் மூவரும் தமது இருக்கையிலிருந்து எழுந்து என்னருகில் வந்தனர்.

நான் சொன்னேன்: ''இதைக் கேளுங்கள். நீங்கள் தூங்க வேண்டுமானால், இந்த இசைக் கச்சேரியை நிறுத்துங்கள். இல்லாவிட்டால் நான் உங்களில் ஒருவரையும் தூங்கவிட மாட்டேன்.''

''நீங்கள் விழித்துக் கொண்டே குறட்டை விடுகிறீர்களே?'' என்றார் ஒருவர்.

''வேறு என்ன செய்வது? என்னால் தூங்க முடியவில்லை. எனவே தூங்கிக் கொண்டே குறட்டை விடும் விஷயம் நடக்காது. நீங்கள் என்னைத் தூங்க விடமாட்டேன் என்கிறீர்கள். முதலில் என்னைத் தூங்கவிடுங்கள். பின்னர் ஒருவேளை நான் உங்கள் இசைக் கச்சேரியுடன் சேர்ந்து கொள்ளக் கூடும். ஏதாவது நடக்கலாம். ஆனால் முதலில் என்னைத் தூங்க விடுங்கள். இதை நீங்கள் எப்படிச் செய்கிறீர்கள்?'' என்றேன் நான்.

''நாங்கள் மூவரும் சகோதரர்கள்'' என்றார்கள்.

''பிரமாதமான சகோதரர்கள்தான்'' என்றேன் நான்.

''என்ன செய்வது? இது ஒரு கடினமான விஷயம். எங்கள் குடும்பத்தில்கூட, எங்கள் மனைவிமார் எங்களுடன் உறங்குவதில்லை? நாங்கள் மூன்று பேரும் ஒரே அறையில் உறங்குகிறோம். எனவே மிக மிக மெதுவாக இந்த இணக்கம் ஏற்பட்டுள்ளது'' என்று அவர்கள் விளக்கினார்கள்.

“அது மிகவும் நல்லது. ஆனால் ஒரே இரவில் என்னால் அந்த இணக்கத்துக்குள் வரமுடியாது. ஏதாவது செய்தாக வேண்டும்” என்றேன் நான். ஆகவே, நாங்கள் ஒரு முடிவுக்கு வந்தோம். நான் சில மணி நேரம் உறங்கும்போது அவர்கள் சீட்டு விளையாடுவதாகவும் பின்னர் அவர்கள் உறங்கும்போது நான் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருப்பதாகவும் முடிவு செய்தோம்.

ஆனால் அவர்களது குறட்டைச் சப்தத்தைக் கேட்டுக் கொண்டிருப்பதுகூட மிக அழகான விஷயம்தான். அவர்கள் எப்படித்தான் உறங்கினார்களோ?

எல்லாருமே தமக்குள் அருளாசி பெற்றவரைத் தூக்கிக் கொண்டு திரிகின்றனர். ஆனால் அது விழிப்படையச் செய்யப் பட வேண்டும்.

அருளாசி பெற்றவர் என்பது ஒரு குறிப்பிட்ட திறமை அல்ல.

அது ஒரு இசைக்கலைஞனைப் போன்றதல்ல. சில மனிதர்கள் இசைக் கலைஞர்களாக இருக்கின்றனர். ஆனால் எல்லாருமே இசைக் கலைஞர்களாகிவிட முடியாது. சில மனிதர்கள் ஓவியர்களாக இருக்கின்றனர். ஆனால் எல்லாருமே ஓவியராகிவிட முடியாது. சில மனிதர்கள் கவிஞர்கள், நடனக் கலைஞர்கள், நடிகர்கள், எழுத்தாளர்கள் - இவை திறமைகள் ஆகும்.

அருளாசி பெற்றிருப்பது என்பது திறமையைப் பொருத்தது அல்ல.

அது உங்களது சொந்த இயல்பு. அது உங்களின் தன்னியல்பு, உள்ளூர உள்ள தன்மை.

நீங்கள் எவ்வளவு காலம் துயரத்திலும் தூக்கத்திலும் இருக்கப் போகிறீர்கள் என்பது உங்களைப் பொறுத்தது. நீங்கள் சுதந்திரமானவர்.

போதும் போதும் என்று நீங்கள் முடிவெடுத்து விட்டால் நீங்கள் கௌதம புத்தரைப் போல, அல்லது ராமகிருஷ்ணர் போல, ரமண மகரிஷிபோல அதே அனுபவங்களைப் பெற முடியும்.

இவர்கள் திறமைசாலிகள் அல்ல. இவர்கள் சாதாரண மனிதர்கள் தான்.

ஆனால் அவர்களது பேரானந்தத்தைப் பொறுத்த வரையில் அவர்கள் கௌதம புத்தர் எட்டியிருந்த அதே உச்சியை அடைந்துள்ளனர்.

அது உன்னுடைய பிறவி உரிமை.

ஐந்து

# விவரித்தலுக்கு அப்பாற்பட்ட ஒரு மர்மம்

*அன்பிற்குரிய பகவான்,*

*'பகவான் உன்னுடைய வாழ்க்கையில் என்ன?' என்று ஒவ்வொரு முறையும் என்னை யாராவது கேட்கும் பொழுது, நீங்கள் எனது குரு என்று நான் பதிலளிக்கிறேன். ஆனால் நான் விளக்க முயன்றால்கூட அவர்கள் அதைப் புரிந்து கொள்வதில்லை. இதற்கு என்ன காரணம்? என்னால் ஏன் அதை வெற்றிகரமாக விளக்க முடியவில்லை?*

ஓஷோ: விளக்கமுடியாத பல விஷயங்கள் இருப்பதால்தான் வாழ்க்கை அழகாக இருக்கிறது.

விளக்கப்படக் கூடிய விஷயங்கள் மட்டுமே இருந்திருந்தால் வாழ்க்கை ஒரு பெரும் நாசமாக ஆகியிருக்கும்.

சற்றே எண்ணிப் பாருங்கள். எல்லாமே விளக்கப்பட முடிந்தால் மர்மம் இருக்காது. ரகசியம் இருக்காது. கவிதை இருக்காது. அப்போது எல்லாமே முற்றிலும் உப்புச் சப்பற்று அலுப்புத் தட்டிவிடுவதாக இருக்கும்.

வாழ்க்கையில் நீங்கள் தொடர்ந்து ஆய்வு செய்து கொண்டே இருக்கக் கூடிய, விளக்கங்களை ஒரு போதும் அடைய முடியாத பரிமாணங்கள் இருப்பதால் அது அலுப்புத் தட்டாமல் இருக்கிறது. உங்களால் நிறைய அனுபவிக்க முடியும். இருந்தாலும் நீங்கள் அனுபவித்து அறிந்த விஷயங்கள்கூட வார்த்தைகளால் விளக்கப்பட முடிவதில்லை.

நீங்கள் காதலில் கவிழ்கிறீர்கள். முதல் மனிதன் தொட்டு கோடிக் கணக்கான பேர் காதலில் கவிழ்ந்திருக்க வேண்டும். எனினும் காதல் என்பது ஒரு மர்மம். அதை அறிதலுக்குள் கொண்டு வரமுடியாது.

அதை நீங்கள் அறிதலுக்குள் கொண்டுவர முயலும் போது அது உங்கள் கைகளைவிட்டு நழுவிப் போகிறது. இவ்வாறு தலைமுறை தலைமுறையாக, கோடிக் கணக்கான பேர்கள் அந்த அனுபவத்தை உணர்கிறார்கள். இது நல்லது. அது அவர்களுக் குத் தெரியும். ஆனால் அது என்னவென்று அவர்களால் சொல்ல முடியாது.

அனுபவிக்கப்படக் கூடிய எல்லாமே விளக்கப்படக் கூடிய ஒன்றல்ல. விளக்கப்படும் எல்லாமே அனுபவிக்கப்படக் கூடிய ஒன்றல்ல.

கணிதத்தை சுலபமாக விளக்கி விடலாம். ஆனால் அதை ஒட்டிய அனுபவம் அங்கே இல்லை. அறிவியலும் சுலபமாக விளக்கப்படலாம். ஆனால் தனது அறிவினால் பெரும் மாற்றம் அடைந்துள்ள பெரிய விஞ்ஞானி யாரும் இல்லை. ஆனால் பெயர் தெரியாத ஒரு கவிஞன், கவிதையைப் பிறப்பிப்பது மட்டுமின்றி பெரும் புரட்சிக்கு, ஒரு புதிய பிறவிக்கும் உள்ளாகி றான். அவனது கவிதை வெறும் வார்த்தைகளின் அமைப்பல்ல. அது அவனது வாழ்க்கையின் சாரம்.

மிக மகத்தான கவிஞர்களால் தமது சொந்தக் கவிதையை விளக்க முடிந்ததில்லை.

ஒருமுறை ஒரு இலக்கியப் பேராசிரியர் கோல்ரிட்ஜ்ஜைக் கேட்டார், இந்தப் பேராசிரியர் ஒரு பல்பலைக் கழகத்தில் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தார். அங்கே அவர் கோல்ட்ரிட்ஜ்ஜின் ஒரு கவிதையைக் கண்டார். அதன் பொருளைப் பற்றி சந்தேகம் அவருக்கு எழுந்தது. அவர் ஒரு உண்மையான மனிதர். அவர் தமது மாணவர்களிடம், ''நீங்கள் குறைந்த பட்சம் ஒரு நாளாவது பொறுத்திருக்க வேண்டும். கோல்ட்ரிட்ஜ் எனது வீட்டருகில் வசிக்கிறார். நான் அவரை இதற்கு சரியான பொருள் என்ன வென்று கேட்கிறேன்'' என்றார்.

அன்று மாலை பேராசிரியர் கோல்ட்ரிட்ஜ்ஜின் வீட்டிற்குச் சென்று கேட்டார். கோல்ட்ரிட்ஜ், ''நீங்கள் சற்றே தாமதமாக வந்துவிட்டீர்கள்'' என்றார்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நீங்கள்தான் உயிரோடு இருக்கிறீர்களே!'' என்றார் பேராசிரியர்.

''நான் உயிரோடு இருக்கிறேனா இல்லையா என்பதல்ல விஷயம். நான் அந்த வரிகளை எழுதியபொழுது, இரண்டு நபர்களுக்கு அதன் பொருள் தெரிந்திருந்தது. இப்போது ஒரே ஒருவருக்குத்தான் தெரியும்'' என்றார் கோல்ட்ரிட்ஜ்.

இயற்கையாகவே, அந்த நபர் கோல்ட்ரிட்ஜ்ஜைத் தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது என்பது பேராசிரியரின் கணிப்பு.

''நான் தாமதமாக வரவில்லை. அதன் பொருள் என்ன வென்று சொல்லுங்கள்'' என்றார் அவர்.

''உங்களுக்கு நான் சொல்லுவது புரியவில்லை. நான் இந்த வரிகளை எழுதியபோது இரண்டு பேர்களுக்கு அதன் பொருள் தெரிந்திருந்தது. கோல்ட்ரிட்ஜ் மற்றும் கடவுள். இப்போது அது கடவுளுக்கு மட்டும்தான் தெரியும். நானே இது பற்றி பலமுறை சிந்தனை செய்ததுண்டு. இதன் பொருள் என்ன? இது மிக அழகானது. ஆனால் மிகவும் வழுக்கலானது. அதைப் பிடித்து

விட்டோம் என்று நீங்கள் எண்ணிக் கொண்டு இருக்கும்போதே காற்றைப் போல அது உங்களிடமிருந்து ஓடிப்போகிறது. நான் மிகவும் வருந்துகிறேன். நான்தான் நிச்சயமாக இந்த வரிகளை எழுதியுள்ளேன். அதில் பொருள் இருக்கிறது என்று எனக்குத் தெரியும். அதை நான் உணர்கிறேன்; ஆனால் நீங்கள் என்னை மன்னித்து விடவேண்டும். எனக்கே கூட அதை என்னால் விளக்க முடியவில்லை; உங்களுக்கு அதை நான் எப்படி விளக்குவேன்?'' என்றார் கோல்ட்ரிட்ஜ்.

இது கவிதையைப் பற்றி மட்டுமல்ல. வாழ்க்கையில் முக்கியத்துவம் வாய்ந்த எதுவுமே இப்படித்தான்.

தனது ஓவியங்களின் பொருளைப் பற்றி யாராவது கேட்கும் போதெல்லாம் பிக்காஸோவிற்கு வெகுவாகக் கோபம் வந்து விடும். ஆனால் அவர் ஒரு கோபமான மனிதர் அல்ல. அவர் மிக அழகான அன்பு செலுத்தும் ஒரு மனிதர். ஆனால் அவரது ஓவியங்களின் பொருளை மட்டும் நீங்கள் கேட்டுவிட்டால் போதும் அவரை நீங்கள் தவறான இடத்தில் தொட்டுவிடுவீர்கள்.

அவருக்கு உடனே கடுங்கோபம் வந்து விடும்.

''இது வினோதமானது. யாருமே ரோஜாமலரை உனது பொருள் என்ன என்று கேட்பதில்லை. விண்மீன்களை யாரும் உங்கள் அர்த்தம் என்ன என்று கேட்பதில்லை. பறந்து கொண்டிருக்கும் ஒரு பறவையைப் பார்த்து அதன் பொருள் என்ன என்று யாரும் கேட்பதில்லை. ஒரு சூரிய உதயத்தையோ அஸ்தமனத்தையோ அதன் பொருள் என்ன என்று யாரும் கேட்பதில்லை. மனிதர்கள் சும்மா அதன் அழகை ரசிக்கிறார்கள். யாருமே அர்த்தத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஏன் இவர்கள் என் பின்னால் வருகிறார்கள்? நான் ஒரு சாதாரண ஓவியன். என்னால் சொல்ல முடிந்ததெல்லாம் அது அழகாக இருக்கிறது என்பதுதான். ஆனால் அது அதன் அர்த்தம் அல்ல. அது ஒரு தொடு உணர்வுமிக்க ஒரு உயிரின் பாதிப்பு'' என்பார் பிக்காஸோ.

அர்த்தம் என்பது பகுத்தறிவிலானது. மர்மத்தின் அனுபவம் என்பது பகுத்தறிவைத் தாண்டியது.

உனக்கும் எனக்கும் உள்ள உறவு என்ன என்று உன்னை அவர்கள் கேட்கிறார்கள்.

நான் உனது குரு என்று மட்டுமே சொல்வது அவர்களையும் திருப்திப் படுத்துவதில்லை. உன்னையும் திருப்திப்படுத்துவதில்லை.

உன்னைக்கூட அது திருப்திப்படுத்தாதபோது அது அவர்களை எப்படித் திருப்திப்படுத்த முடியும். ஏனெனில் ஒருவர் உனது தந்தையாகவோ, ஒருவர் உனது தாயாகவோ, சகோதரனாகவோ இருப்பது போல அது ஒரு வெறும் உறவு அல்ல. இவர் எனது தந்தை என்று சொன்ன மட்டிலே அது எல்லாவற்றையும் விளக்கி விடுகிறது. யாரும் உங்களை அதற்குமேல் தொந்தரவு செய்வதில்லை. 'தந்தை என்றால் என்ன?' என்று யாரும் கேட்பதில்லை?

குருவுடன் உள்ள உறவு, பிற உறவுகளைப் போன்றது அல்ல. அது உள்ளுற வேறானது.

அது அன்பு. ஆனால் அது அன்பு மட்டுமல்ல. அது நம்பிக்கை என்ற மையத்தைக் கொண்ட அன்பு.

அன்பு மட்டுமே விளக்க முடியாதது. இப்போது அது அதைவிடப் பெரிய ஒரு மர்மத்துடன் கைகோர்த்துக் கொண்டு விட்டது. நம்பிக்கை என்பது ஒரு வேற்று உலகத்தைச் சார்ந்தது.

இந்த உலகத்தில் எல்லாரிடத்திலும் அவநம்பிக்கை இருக்கிறது. அன்பு செலுத்தும் மனிதர்களிடையேகூட நம்பிக்கை இல்லை. ஒருவருக்காக மற்றவர், தேவை ஏற்பட்டால் உயிரையும் விடக்கூடிய நண்பர்கள் இருக்கிறார்கள். ஆனால் அங்கே நம்பிக்கை இல்லை.

ஐரோப்பிய வரலாற்றின் இடைநிலைக் காலத்தில் இது நடந்தது...

ஐரோப்பாவில் ஒரு மிக வினோதமான, அசிங்கமான விஷயம் இருந்து வந்துள்ளது. ஒருவீரன் போருக்குச் செல்லும் பொழுது அவன் தனது மனைவியைப் பூட்டி அவள் வேறு யாருடனும் காதல் உறவு கொள்ள முடியாத வகையில் சாவியை எடுத்துச் சென்று விடுவான். இது ஒரு விசித்திரமான வழக்கம். இன்றும்கூட அருங்காட்சி சாலைகளில் பார்வைக்கு வைக்கப் பட்டுள்ளது.

உங்கள் மனைவியைக்கூட நீங்கள் நம்ப முடியாது! உங்கள் மனைவியையே நம்ப முடியாதபோது எல்லாப் பூட்டுகளையும் திறக்கும் ஒரு மாஸ்டர் சாவியைக் கூடவா கண்டுபிடிக்க முடியாது? இந்தப் பூட்டுகளைச் செய்த கொல்லர்கள் அதிகப்படி யான சாவிகளையும் செய்தனர்.

ஒரு இளவரசன் போருக்குப் போனான். அவனது ஒரே பயம், அவனது அழகான மனைவியைப் பற்றியது. போரில் சாவி தொலைந்து போய்விட்டால், தனது வாழ்நாள் முழுவதும் அவளுடன் உடலுறவு கொள்ள முடியாமல் போய்விடும் என்று அவன் பயந்தான். எனவே சாவியைத் தனது மிக நெருங்கிய நண்பன் ஒருவனிடம் தர முடிவு செய்தான்.

அவர்கள் இருவரும் மிக நெருங்கியவர்கள். ஒருவருக்காக மற்றவர் உயிரைக்கூடத் தருவார்கள். எனவே அவநம்பிக்கை என்ற கேள்வியே அங்கே எழுவில்லை?

அவன் தனது சாவியை அவனிடம் கொடுத்து, ''நான் திரும்ப வந்தவுடன் இதை வாங்கிக் கொள்கிறேன். பத்திரமாக வைத்துக் கொள்'' என்றான்.

அவன் ஊரிலிருந்து அரைமைல் தொலைவுகூடப் போயி ருக்க மாட்டான். ஒரு வேகமான குதிரை அவனுக்குப் பின்னால் நெருங்கி வந்ததைக் கண்டான். திரும்பிப் பார்த்தபோது, தனது நண்பன், ''கொஞ்சம் பொறு!'' என்று கூவிக் கொண்டு வந்ததைக் கண்டான்.

" என்னாயிற்று?'' என்றான் இளவரசன். இப்போதுதான் ஐந்து நிமிடம் முன்பு அவனைவிட்டு வந்திருந்தான். அப்போது அங்கே ஒரு கோளாறும் இல்லை.

''நீ என்னிடம் தவறான சாவியைத் தந்துவிட்டாய்'' என்றான் நண்பன்.

இந்த உலகத்தில் நம்பிக்கையே இல்லை.

அன்பு நம்பிக்கையோடு சேர்ந்துவிடும் போது அதை விளக்குவது மேலும் கடினமாகி விடுகிறது. அது மேலும் மர்மமானதாகி விடுகிறது.

மூன்றாவதாக, அன்பும் நம்பிக்கையும் தமது உச்சகட்டத்தை அடையும்போது அர்ப்பணித்துக் கொள்ளுதல் என்ற ஒன்று அங்கே வருகிறது. இது ஒரு சரியான வார்த்தை அல்ல. ஆனால் இதைவிட சரியான பதில் வார்த்தை எதுவும் கிடையாது.

அர்ப்பணித்தல் என்பது முழு விஷயத்தையும் இந்த உலகத்துக்கு அப்பாற்பட்டதாகி விடுகிறது. இதற்கு நீங்கள் எந்தக் காரணத்தையும், எந்த வித விளக்கத்தையும் கொடுக்க முடியாது. இதற்கு ஒரே ஒரு வழி யாராவது கேட்டால் அது தாகமுள்ள ஒரு மனிதன் பாலைவனத்தில் தண்ணீரைக் கண்டு கொண்டது போல என்று சொல்லுங்கள். அவன் உடலில் உள்ள ஒவ்வொரு நாளிலும் தாகம் உள்ளது. தண்ணீர் அந்தத் தாகத்தை தணிக்கிறது. ஒரு மகத்தான சமாதானம் ஏற்படுகிறது.

குரு ஒரு மனிதர் அல்ல.
குரு ஒரு முன்னிலை மட்டுமே.
அறியாதவற்றிற்காக உங்களிடம் ஒருதாகம் இருந்தால் இந்த முன்னிலையிலிருந்து பருகி தாகம் தீரலாம்.

உங்களிடம் கேள்வி கேட்கும் எவரிடமும் சொல்லுங்கள்: 'என்னுடன் வாருங்கள். விளக்க முடியாத சில விஷயங்கள் இருக்கின்றன. ஆனால் நீங்கள் அவற்றை ஒருவேளை அனுபவிக்கக் கூடிய இடத்திற்கு என்னால் உங்களை அழைத்துச்

செல்ல முடியும். உங்களிடம் கொஞ்சம் ஆர்வம் இருக்கிறது என்பதை உங்கள் கேள்வியே காட்டுகிறது. அது ஒருவேளை ஒரு ஆழமான மறைந்துள்ள ஆசையாக இருக்கலாம்.'

யாருக்குத் தெரியும்? குருவின் முன்னிலையில் அது தியாகச் சுடர் விடலாம். யாருக்குத் தெரியும்? குருவின் முன்னிலையில், சீடர்களால், அவர்களது அன்பு, நம்பிக்கை மற்றும் அர்ப்பணித்தலால் சூழப்பட்டு உங்களுக்குள் ஏதாவது நிகழலாம். ஒரு விஷயம் மட்டும் நிச்சயம்; உங்களுக்குள் ஏதாவது நிகழ்ந்தால் என்னைப் போலவே நீங்களும் ஊமையாவீர்கள்.

உங்களது பேச்சற்ற நிலையை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களிடமிருந்து ஒரு வார்த்தையாலான பதிலை மட்டும் எதிர்பார்க்கும் நண்பருக்குள் ஒரு தேடுதலை உருவாக்குங்கள். ஒரு வார்த்தையாலான பதிலில் ஒரு பயனும் இல்லை. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்துங்கள்.

"நான் ஒன்றை அனுபவித்துள்ளேன். அதை எந்த மொழியிலும் மொழி பெயர்க்க முடியாது. ஆனால் என்னால் உங்களை அந்த ஆற்றிற்குக் கொண்டு செல்ல முடியும். நீங்களே அங்கே பருகலாம். உங்களது அனுபவம் மாத்திரமே ஒரே விளக்கமாக அமையும்" என்று கூறுங்கள்.

நான் மீண்டும் சொல்கிறேன்: விளக்கமுடியாத மிகப் பல பரிமாணங்கள் இருப்பதாலேயே வாழ்க்கை மிகவும் அழகானதாக இருக்கிறது. அதுதான் அதன் செழிப்பு. எல்லாமே விளக்கப்பட்டு விட்டால், எல்லாச் சாறும் போய்விடும். நீங்கள் சலிப்படைந்து போய் விடுவீர்கள். விளக்கப்பட்ட ஒரு வாழ்க்கையில் சலிப்படைந்து செத்தே போய்விடுவீர்கள்.

ஒரு குருவிற்கும் சீடனுக்குமிடையில் நடைபெறுவது என்பது விளக்க முடியாத அனுபவங்களின் உச்சக் கட்டமாகும். அதை விளக்கம் கொடுத்து அழித்து விடாதீர்கள்.

விளக்க முடியாதவற்றை விளக்குவதன் மட்டத்திற்கு கொண்டு வந்து அழிப்பது என்பது ஒரு குற்றமாகும். ஏனெனில் நீங்கள் அதைக் கொன்று விடுகிறீர்கள். அது வானத்தில் பறக்கும்

ஒரு பறவையைப் போன்றது. அது தனது அந்தரத்தில் மிக அழகாக உள்ளது. முழு வானமும் அதற்குச் சொந்தம்; எல்லா நட்சத்திரங்களும் அதற்குச் சொந்தம்... எல்லைகள் இல்லை. தடைகள் இல்லை.

நீங்கள் அந்தப் பறவையைப் பிடிக்கலாம். ஒரு அழகான தங்கக் கூண்டு செய்து அதில் பறவையை விடலாம். ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அது சுதந்திரமாக நட்சத்தி ரங்களின் கீழ் பறந்து கொண்டிருந்த அதே பறவை அல்ல. உண்மையில் அது அதே பறவைதான் - ஆனால் உயிரோட்டத் தில் அது இல்லை - ஏனெனில், சுதந்திரம் எங்கே? விண்மீன்கள் எங்கே? வானம் எங்கே? உங்களது தங்கக்கூண்டு நீங்கள் பறவையிடமிருந்து பிடுங்கிக் கொண்டதற்கு பதிலாகாது. அது தனது ஆன்மாவை இழந்து விட்டது.

விளக்க முடியாததை நீங்கள் விளக்க முயலும் போதும் அதேதான் நடக்கிறது. நீங்கள் அதை மொழி, வார்த்தைகள் என்னும் கூண்டிற்குள் கொண்டு வருகிறீர்கள் - மிக அழகான வார்த்தைகள். ஆனால் ஆன்மா மறைந்துவிட்டது.

அதைச் செய்யாதீர்கள். யாராவது ஒரு கேள்வியைக் கேட்டு பதில் சொல்ல முடியாமல் இருக்கும்போது எப்படி உணர்கிறது என்று எனக்குத் தெரியும். உங்களுக்கு சங்கடமாக இருக்கும்.

அவ்வாறு வெட்கப்படுவது மேலானது. ஆனால் வாழ்க்கை யின் மர்மங்களுக்கு எதிராக ஒரு குற்றத்தைச் செய்யாதீர்கள்.

'என்னால் அதைச் சொல்ல முடியாததால் நான் வெட்கப் படுகிறேன். எனக்கு அதைச் சொல்ல விருப்பமில்லாமல் இல்லை. உங்களுக்கு அதைச் சொல்ல எனக்கு விருப்பம்தான். ஆனால் என்னால் சொல்ல முடியாது. ஏனெனில் சொல்லுவது அதைக் கொன்றுவிடும்.

நான் உங்களை ஜன்னலுக்கு அழைத்துச் செல்லலாம். அங்கிருந்து நீங்கள், திறந்த வானவெளியைப் பார்க்கலாம். அந்த

மனிதரிடம் நான் உங்களை அழைத்துச் செல்லலாம். ஒரு வேளை உங்கள் இதயம், எனது இதயம் எனக்குள் நடனமாடு வது போலவே நடனமாடத் தொடங்கலாம். அந்த ஆழமான அமைதியில் எனக்கு அது எவ்வாறு உள்ளது என்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஆனால் அது உங்களுக்கும் முக்கியமான தாகப் போகும் போதுதான் இது நடக்கும்.

மனிதர்கள் உங்களைப் பல கேள்விகள் கேட்பார்கள். அந்தக் கேள்விகளைப் பயன்படுத்தி, அவர்களை அதே வெளிச் சத்திற்கு, அதே பேரானந்தத்திற்கு, அதே உண்மைக்கு அழைத்து வாருங்கள்.

பதில் கூறாதீர்கள் - ஏனென்றால் உங்களால் பதில் கூற முடியாது; நீ என்ன சொன்னாலும் அது பொட்டென்று விழுந்துவிடும்.

எல்லாம் அறிந்தது போல் இருக்க எழும் ஆசையைத் தவிருங்கள். உங்களது பேச்சற்ற நிலையை ஏற்றுக் கொள்ளுங் கள். ஆனால் அந்த மனிதரை அழையுங்கள்.

ஒருவேளை பத்துப் பேருள் ஒருவன் வரக்கூடும். யாருக்குத் தெரியும், அவர் ஆழமாக ஈடுபடக்கூடும்!

அன்பிற்குரிய பகவான்,

எனக்கு வயதாகி விட்டது. புனேவிற்கு வருவதற்கு முன்பு முப்பது வருடங்களாக நான் புத்தமதத்தில் இருந்து வந்துள் ளேன். ஆனால் இப்போதும் நான் தொடக்கத்தில் இருப்பது போலவே, பல சந்தேகங்களால் குழப்பமுற்று இருக்கிறேன்.

மற்றொரு புறத்தில் எனக்குள் இருக்கும் ஏதோ ஒன்று உங்கள் அமைதியைப் பற்றி அறிந்துள்ளது. அந்த ஏதோ ஒன்று கொஞ்சம் கூட எரிச்சல் படவே இல்லை. அது முழுமனதான ஒரு அபயத்தின் போர்வை போல இருக்கிறது. ஆனால் என்னால் நம்ப முடியவில்லை. அபயத்திற்கும் நம்பிக்கைக்கும் இடையே உள்ள வேறுபாட்டைப் பற்றி ஏதாவது கூற முடியுமா?

ஓஷோ: அபயத்திற்கும் நம்பிக்கைக்கும் ஒரே மாதிரியான தோற்றம் தான் உள்ளது. ஆனால் அவை இரண்டும் நேர் எதிர்மறையான உண்மைகள்.

நம்பிக்கை என்பது ஒரு செல்லாக் காசு. அது உண்மையான தைப் போல நடிக்கிறது. அது அபயத்தின் பாத்திரத்தை ஏற்று நடிக்க முயல்கிறது. கோடிக்கணக்கான மக்கள், அது மலிவாக இருப்பதால், நம்பிக்கையின் வலையில் மாட்டிக் கொண்டு இருக்கிறார்கள்.

அபயம் மிகமிக விலை மதிப்பு வாய்ந்தது.

அதுவிலை அதிகமானது; ஏனென்றால் அது அபாயகர மானது. நீங்கள் உங்களையே திறந்து கொள்கிறீர்கள். உங்களுக் குத் திங்கிழைக்க கூடிய ஒருவரால் காயம் படத்தக்க அளவு இருக்கிறீர்கள். உங்களது பாதுகாப்பு வழி முறைகளையெல்லாம் நீங்கள் கை விட்டு விடுகிறீர்கள். நீங்கள் பாதுகாப்பற்று இருப்பீர்கள் - நீங்கள் சுரண்டப் படலாம், ஏமாற்றப்படலாம், அழிக்கப்படலாம்.

ஒவ்வொருவரும் தன்னைச் சுற்றிப் பாதுகாப்பு அமைப்பை, தன்னைப் பிறரிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற் காக வைத்துக் கொண்டுள்ளனர்.

வாழ்க்கை போட்டிமயமானது. எல்லாரும் ஒரே இலக்கு களை நோக்கி ஓடிக் கொண்டிருக்கின்றனர். போட்டிகள் உள்ள ஒரு உலகில் நீங்கள் அன்புடன், இரக்கத்துடன், கனிவுடன் இருக்க முடியாது. இருந்தால் நீங்கள், ஒரு தோல்வியாக மாறுவீர்கள்.

இந்தப் போட்டி மயமான உலகில், வெற்றி பெறுகின்ற மனிதர்கள் யாரென்றால், யாரையும் பலிகொடுக்க, எவரையும் அழிக்கத் தயாராக உள்ள நபர்கள் தான். இவர்கள் பிற மனிதர்களை படிக்கட்டுகளாகப் பாவித்து அவர்கள் மீது ஏறிக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் ஒன்றே ஒன்றைப் பற்றி

மட்டும்தான் கவலைப் படுகிறார்கள் - அதுதான் வெற்றி. இயல்பாகவே, இதற்காக எல்லாரும் மிதிக்கப்படாமல், சாகடிக் கப் படாமல் இருக்கத் தயாராக இருக்கிறார்கள்.

மாக்கியவெல்லி 'இளவரசர்' என்ற ஒரு முக்கியமான கட்டுரையை எழுதினார். மிக வினோதமாக அவரது கொள்ளுப் பேத்தி ஒரு சன்னியாசி. மாக்கியவெல்லி தனது பரம்பரை ரத்தத்தில் உருவான ஒருவர். ஒருநாள் யாரையாவது நம்புவாள் என்று கனவுக் கூடக் கண்டிருக்க மாட்டார்.

மாக்கியவெல்லி 'இரவரசன்' எழுதினார். இது ஒவ்வொரு அரசியல் வாதியும் படிக்க வேண்டிய ஒரு சிறு கட்டுரை. அவன் வெற்றி பெற வேண்டுமென்றால் அதைப் பின்பற்றியாக வேண்டும்.

''யாரையும் நம்பாதீர்கள், ஆனால் எல்லாரும் நீங்கள் அவர்களை நம்புவதாக நினைக்கட்டும். ஒரு எதிரியிடம் நீங்கள் சொல்லத் தகாத எதையும் உங்கள் நண்பரிடம் சொல்லாதீர்கள். ஏனெனில் நாளைக்கு இந்த நண்பன் உங்கள் எதிரியாகலாம். உங்கள் நண்பருக்கு எதிராக நீங்கள் எதைச் சொல்ல மாட்டீர் களோ அதை உங்கள் எதிரிக்கு எதிராகவும் சொல்ல வேண்டாம். ஏனெனில் போட்டிகள் மலிந்த இந்தவுலகில் உங்கள் எதிரியும் உங்கள் நண்பனாகலாம், உங்கள் நண்பன் எதிரியாகலாம்.''

அடிப்படையில் உங்கள் விஷயங்களை முற்றிலும் மூடி மறைத்து ரகசியமாக வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் ஏதாவது சொல்வதாயிருந்தால், இரண்டு விதமாகவும் பொருள் கொள்ளும் படியாகச் சொல்லுங்கள். ஒரே ஒரு அர்த்தம் மட்டுமே கொண் டுள்ள எதையும் சொல்ல வேண்டாம். ஏனெனில் ஒரேயொரு நாளும் நீங்கள் உங்கள் அர்த்தங்களை மாற்றிக் கொள்ளும் வண்ணம் நீங்கள் புதுப்புது யதார்த்தத்தை நீங்களே சந்திக்க வேண்டியிருக்கும்.

உலகின் உண்மையான தலைவர் மாக்கிய வெல்லி தான். யேசு கிறித்துவோ, கௌதமபுத்தரோ அல்ல. இது ஒரு வக்கிரம

மான உலகம். இங்கே **உண்மையான** தலைவர்கள் வழிபடப்படுவ தில்லை. பின்பற்றப் பருகிறார்கள். இங்கே போலித் தலைவர்கள் வழிபடப்படுகிறார்கள், பின்பற்றப் படுவதில்லை.

அன்பும் அபயமும் சந்திக்கும் பொழுது அதன் இறுதி முடிவுப் பொருள் தஞ்சமடைதல் ஆகிறது. நீங்கள் குருவுக்குள் இளைப்பாறுகிறீர்கள்; எதையும் பற்றிக் கொள்ளாமல் உயிருரு வினுள் கரைந்து விடுகிறீர்கள்.

இது இரகசியமாக அபாயத்தை எதிர்கொள்ளும் துணிச்சல் உள்ளவர்களுக்கு மட்டுமே.

ஆனால் நம்பிக்கை மிக மலிவானது - எல்லாருமே நம்புவராக இருக்கின்றனர். ஒருவர் இந்துவாக இருக்கிறார். ஒருவர் முஸ்லிமாக இருக்கிறார். ஒருவர் கிறித்துவராக இருக்கி றார். நம்பிக்கை பல அளவுகளில் பல வடிவங்களில், பல நிறங்களில் வருகிறது. அவற்றில் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுக்க லாம். அதற்காக நீங்கள் எந்த விலையும் கொடுக்க வேண்டாம். பொதுவாக அது உங்களுக்கு உங்கள் தாயின் பாலுடன் இலவசமாகக் கிடைக்கும்.

இரண்டாவதாக, நம்பிக்கை என்பது எப்போதுமே ஒரு கருத்தாக இருக்கிறது. அபயம் என்பது ஒரு முன்னிலை.

இது ஒரு மிக மெல்லிய வேறுபாடு.
நம்பிக்கை விதிமுறையானது.
அபயம் உயிர்வாழ்தலானது.

எந்த வித சிரமமும் இன்றி நீங்கள் உங்கள் நம்பிக்கையை மாற்றிக் கொள்ளலாம். அது சும்மா உங்கள் உடைகளை மாற்றிக் கொள்வது போன்றது. ஒரு இந்துவாக இருப்பதிலிருந்து நீங்கள் ஒரு கிறித்தவராகலாம்; கிறித்தவரிலிருந்து முஸ்லிம் ஆகலாம்; முஸ்லிமிலிருந்து ஒரு கம்யூனிஸ்டு ஆகலாம். இதில் பிரச்சனை எதுவுமில்லை. ஏனென்றால் நம்பிக்கை மனதின் பாற்பட்டது. வேறு ஏதாவது அதிக நம்பிக்கை ஊட்டுவதாக, சரியானதாகப்

பட்டால் நீங்கள் அதற்கு மாறிக் கொள்ளலாம். அதற்கு உங்கள் இதயத்தில் வேர்கள் கிடையாது.

நம்பிக்கை என்பது, தூரத்திலிருந்து பார்த்தால் உண்மையான மலர்களைப் போலத் தோற்றமளிக்கும். பிளாஸ்டிக் பூக்களைப் போன்றது. அவற்றிற்கு வேர்கள் எதுவும் கிடையாது; கவனமாகப் பார்த்துக் கொள்ளத் தேவையில்லை - எரு வேண்டாம், இராசயனங்கள் வேண்டாம், தண்ணீர் வேண்டாம், தோட்டக்கலை கவனிப்பு வேண்டாம், இவை எதுவுமே தேவையில்லை. இவை நிரந்தரமானவை, உங்கள் வாழ்நாள் முழுதும் இவை உங்களுடன் நிலைத்திருக்கும். அவை எப்போதுமே பிறக்காததால் அவை ஒருபோதும் சாவதில்லை. அவை உற்பத்தி செய்யப்படுகின்றன. நீங்கள் அவற்றை அழித்தால் ஒழிய அவை நிலைத்து நிற்கும்.

அபயம் என்பது ஒரு உண்மையான ரோஜா மலர். அதற்கு வேர்கள் உண்டு. அதன் வேர்கள் உங்கள் இதயத்துக்குள்ளும் உயிருக்குள்ளும் ஆழமாகச் செல்கின்றன. நம்பிக்கை என்பது உங்கள் தலையில் மட்டுமே உள்ளது.

அபயம் உங்கள் இதயத்தில், உங்கள் உயிருருவின் ஆழமான உலகத்தில் உள்ளது. அபயத்தை மாற்றுவது கிட்டத்தட்ட இயலாத காரியம் - அது எப்போதுமே நிகழ்ந்ததில்லை. சரித்திர முழுமையிலும் அது நடந்ததாக வரலாறே இல்லை. நீங்கள் அபயம் கொண்டால், அபயம் கொள்கிறீர்கள். அது மாறுவதற்கான சாத்தியப் பாடே கிடையாது. அதற்கு வேர்கள் இருப்பதால் அது தொடர்ந்து வளர்ந்து கொண்டு இருக்கிறது, ஒரு போதும் ஒரு நிலைபெற்று இருப்பதில்லை. அது வளரும் தன்மை கொண்டது. உயிருள்ள ஒரு சக்தி, அது தொடர்ந்து புதிய இலைகளை, புதிய மலர்களை, புதிய கிளைகளை வளர்த்துக் கொண்டே போகிறது.

நம்பிக்கை என்பது இறந்து போன ஒரு பொருள் பிளாஸ்டிக் மலர் -அது வளர்வதே இல்லை. இந்துக்கள்

பத்தாயிரம் ஆண்டுகளாக ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் நம் பிக்கை வைத்திருக்கலாம், அது இன்னும் இருக்கிறது. அதே போல ஒரு போதும் வளராமல் இருக்கிறது.

'பசுதான் தாய்.' இதை இந்துக்கள் பத்தாயிரம் வருடங்களாக நம்பி வந்துள்ளனர். அது காளை தான் உங்கள் தகப்பன் என்று உள்ளடக்கிக் கூறுமளவு கூட வளரவில்லை. அது நிலைபெற் றது. ஒரு இந்துவிடம், காளைதான் அவனது தந்தை என்று குறிப்பிட்டுப் பாருங்கள், அவன் உடனே ஒரு காளை போல் ஆகி விடுவான்; அதன் மூலம் காளைதான் அவரது தந்தை என்று நிருபிப்பான். ஆனால் அதை அவன் நம்பமாட்டான். அவன் மிகச் சரியாக ஒரு காளையைப் போலவே நடந்து கொள்வான், ஆனால் அந்த உண்மையே ஒப்புக் கொள்ள மாட்டான்.

எல்லா நம்பிக்கைகளும் பழமையானவை, எல்லா நம்பிக் கைகளும் இறந்து போனவை. எந்த நம்பிக்கையும் ஒரு சிறிய இலையைக் கூடத் துளிர்ப்பதில்லை.

நம்பிக்கை கருத்து ரீதியானது, தத்துவ ரீதியானது; ஆனால் உங்கள் உயிருருவை மாற்றியமைக்கும் ஒரு சக்தி அதுவல்ல. அது உங்களை ஒரு பெரிய அறிஞராக்கும், பெரிய தத்துவ மேதையாக்கும், மதவேத சாஸ்திரியாக்கும். ஆனால் உங்களை இளமையான, புத்துயிர்பெற்ற ஒரு புதிய மனிதனாக ஆக்க முடியாது. அது உங்களுக்கு, பல்கலைக் கழகங்களிலிருந்து பட்டங்களையும், அவார்டுகளையும், நோபல் பரிசுகளையும் பெற்றுத்தரும்; இவையெல்லாவற்றையும் அதனால் செய்ய முடியும்.

ஆனால் அது உங்களது உள்ளமைப்பில் எதையும் மாற் றாது. அது காலியாகத் தான் இருக்கும்.

இந்தக் கேள்வி மேலும் மிக முக்கியமானது. ஏனெனில், இது முப்பது வருடங்களாக புத்த மதத்தைச் சார்ந்திருந்த ஒருவரிடம் இருந்து வருகிறது.

முப்பது வருடங்கள் புத்த மதத்தவராக இருந்த பின்னால், இந்த நபர் என்னிடம் வருகிறார். ஒரு குறிப்பிட்ட அபயத்தை உணர்கிறார், என்மீது அன்பு வைக்கிறார். இயல்பாகவே, இங்கே ஒரு முரண்பாடு நிச்சயமாகத் தோன்றுகிறது. அவரது மனம் முழுவதும் முப்பது வருடங்களான புத்தமதக் கருத்துகளில் நிறைந்துள்ளது. அது ஒரு நம்பிக்கை அமைப்பு. இப்போது இதயம் புதிய அபயத்துளிர்களை தழைக்கிறது. இதனால் இந்த நபர் நிச்சயம் பெரிய சிரமத்தில் மாட்டுவார். நம்பிக்கை அவரை ஒரு புறம் இழுக்கிறது; அபயம் மற்றொரு புறம் நகர்கிறது.

நம்பிக்கைகள் முப்பது வருடகாலம் இருந்திருந்த படியால், அவற்றிற்கு ஒரு குறிப்பிட்ட கனம் உள்ளது. ஆனால் அபயமோ, புதிதாக இருந்தாலும், அது உயிராக இருப்பதால் தனக்கே கொஞ்சமான சக்தியைக் கொண்டுள்ளது. நம்பிக்கைள் முப்பது வருட வயதான பிணங்கள். அவற்றுக்கு கனம் உண்டு. ஆனால் சக்தி எதுவும் கிடையாது. இதனால் இந்த நபர் இரண்டாகத் துண்டு படுவது நிச்சயம்.

இந்த விஷயங்கள் மிக எளிதாகத் தீர்க்கப்படலாம்.

இங்கு முதலில் நினைவில் கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், புத்தமதம் மாத்திரமே உங்களுக்குப் போதுமானதாக இருந்திருந்தால் நீங்கள் என்னிடம் வந்திருக்கத் தேவையில்லை. முப்பது வருடங்களாகப் புத்த மதத்தில் இருந்து உங்களுக்கு எதையும் செய்யவில்லை. நீங்கள் முப்பது பிறவிகள் புத்தமதத்தில் இருக்கலாம், ஆனால் ஒரு நம்பிக்கை உங்கள் உண்மை நிலையை மாற்றுவதில்லை. காலத்தின் நெடிய அளவு எந்தவித வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை.

எனவே, நீங்கள் உங்களையே கேட்டுக் கொள்ள வேண்டிய முதல் கேள்வி முப்பது வருடங்களுக்குப் பின், நீங்கள் ஏன் ஒரு புதிய ஊற்றை, புதிய ஒளியை, புதிய அடையாளத்தைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டியதாயிற்று?

நீங்கள் துணிச்சல் காரராக இருந்தால், முரண்பாட்டிற்குள் நுழைய வேண்டிய அவசியம் இல்லை. அந்த முப்பது வருடங்க ளும் வீணாகப் போய்விட்டன என்று சும்மாவே கண்டுகொள்ள லாம். ஆனால் போனது போனது தான். இனிமேலும் அதுபற்றி நேரத்தை வீணடிக்காதீர்கள்.

மேலும், நினைவில் கொள்ளுங்கள் - புத்தர் சொன்னது தவறு என்று நான் சொல்லவில்லை.

நான் சொல்வதெல்லாம், புத்தரது முன்னிலையில் பருக முடிந்தவர்களுக்கு மட்டுமே, யாருக்கு அவர் குருவாக இருந் தாரோ, அவர்களுக்கு மட்டுமே, அவர் சொன்னது சரியாக இருந்தது என்பதுதான்.

ஆனால் உங்களுக்கு, அவர் ஒரு நம்பிக்கை மட்டுமே.

அந்த முப்பது வருடங்களையும், மேலும் உங்களுக்குள் நீங்கள் சேகரித்து வைத்துள்ள விஷயங்களையும் தொலைத்துக் கட்டி விடுவது மேல். ஏனெனில் உங்களது ஆன்மிக வளர்ச்சிக்கு அது ஒரு தடையாகவும், சுமையாகவும் உள்ளது.

நீங்கள் புத்தமதத்தைச் சார்ந்தவராக இல்லாமலிருக்கத் துணிந் தால், நீங்கள் ஒரு புத்தராக இருப்பதற்கான சாத்தியப்பாடுகள் உள்ளன என்று நான் உறுதியளிக்கிறேன். புத்தராக இருக்க சாத்தியப்பாடுகள் இருக்கும் போது ஏன் புத்தமதத்தினனாக இருக்க வேண்டும்? உயிருள்ள நீர் ஊற்றுகள் கிடைக்கும் போது ஏன் செத்துப் போன விதிமுறைகளோடு திருப்தியடைய வேண் டும்?

ஒரு புத்தராக இருப்பது அழகுடையது.

ஒரு புத்தமதத்தினனாக இருப்பது முட்டாள்தனமானது.

புத்தர் ஒரு புத்தமதத்தினனாக இல்லை. அந்த வார்த்தை யைக் கூட அவர் கேட்டதில்லை என்பதை நினைவில் கொள் ளுங்கள். யாரும் அவரை புத்தமதத்தினர் என்று அழைக்க வில்லை.

யேசு ஒரு போதும் ஒரு கிறித்தவராக இருந்ததில்லை.. எனவே ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். ஒரு கிறித்தவனாக இருக்கும் எந்தக் கிறித்தவனும் யேசு கண்ட அனுபவத்தைக் காண முடியாது. யேசு அனுபவித்து உணர்ந்ததை எந்தக் கிறித்தவனும் உணர வேண்டுமென்றால், அவன் செய்ய வேண் டிய முதல் வேலை கிறித்துவமதத்தை விட்டொழிக்க வேண்டும். ஏனெனில் யேசு ஒரு கிறித்துவர் அல்ல.

உங்களது நம்பிக்கை முறைகள், முழுவதுமாக விட்டெறி யப்பட வேண்டும். இதன்மூலம் உங்களது சக்தி சிதறுபடாமல் முழு சக்தியும் 'உங்களது அபயத்துக்குள் நகர வேண்டும்.

உங்கள் அபயம் வளர்ந்து கொண்டுள்ளது. ஆனால் அது ஒரு பெரிய சுமையின் கீழ், இறுக்கத்தின் கீழ் வளர்ந்து கொண்டுள்ளது. ஆனால் அது திறந்த வெளி வானத்தின் கீழே, மிக தளர்வான ஒய்வான வகையில் வளரலாம். நீங்கள் சுமந்து கொண்டு வந்துள்ள நம்பிக்கைகளுக்கு சற்றே விடை கொடுங் கள், உங்கள் அபயம் வளர அனுமதியுங்கள்.

புத்தர் தனது சீடர்களுக்கு என்னவாக இருந்தாரோ அதுவாக அவரது விதிமுறைகள் இருக்க முடியாது.

விதிமுறைகள் வெறும் வார்த்தைகள். அவற்றிற்கு கவர்ச்சி யும், அருளும், ஈர்ப்புச் சக்தியும் கிடையாது; அவற்றிற்கு காந்த சக்தி கிடையாது.

மேலும் நீங்கள் இங்கே இருக்கும் பொழுது, நீங்கள் தெரிநிலையடைய ஒரு புத்தராக இங்கே சாத்தியக் கூறுகள் இருக்கும் பொழுது, இது ஒரு மோசமான பேரம் அல்ல என்று நான் நினைக்கிறேன். அதாவது புத்தராக ஆவதன் பொருட்டு புத்தமத விதிமுறைகளை விட்டுவிடுவது என்பது சரியே.

இந்த இருபத்தி ஐந்து நூற்றாண்டுகளில், புத்த மதத்தினர் எத்தனை புத்தர்களை உருவாக்கியுள்ளனர்?

தர்மரக்ஷிதா என்ற ஒரு ஆங்கிலேய புத்தபிக்கு, கிறித்துவ மத்தைத் துறந்து புத்த மதத்தைத் தழுவி புத்தமத இலக்கியத்தின் மாபெரும் அறிஞராக விளங்கினார். கலிம்பாங்கில் அவருக்கு ஒரு ஆசிரமம் இருந்தது. அவர் எப்போதாவது ஒரு முறை புத்தமத கருத்தரங்குகளுக்குச் செல்வது வழக்கம். அவர் இமய மலையிலிருந்து கீழே இறங்கி வந்த பொழுதெல்லாம் என்னிடம் வந்து என்னுடன் இரண்டொரு நாட்கள் தங்கி விட்டுச் செல்வது ஒரு கட்டாயமான வழக்கமாகக் கொண்டிருந்தார்.

அவர் உலகில் பிரிசித்தி பெற்ற புத்தமத அறிஞர். அவரது மொழிபெயர்ப்புகளைப் பொறுத்த வரையில் அவரது புத்தகங்கள் மிகச் சரியானவை, வெகு அபூர்வமானவை.

நான் அவரிடம் கேட்டதுண்டு, 'தர்மரக்ஷிதா, புத்தமத வேதங்களைப் படிப்பதிலும், புத்த இலக்கியங்களை மொழிப் பெயர்ப்பதிலும் நீங்கள் கிட்டதட்ட ஐம்பது வருடங்களாகச் செலவிட்டு இருக்கிறீர்கள். ஆனால் புத்தராக இருப்பதன் சுவை உங்களுக்குக் கிடைத்துள்ளதா?''

அவரது கண்களில் கண்ணீர் நிறையும்.

''அந்தக் கேள்வியை தயவு செய்து கேட்காதே! நீ ஒருவன் மட்டும் தான் அதை கேட்கிறாய். வேறு எவருக்கும் இதில் ஆர்வம் கிடையாது. அவர்கள் இலக்கியங்களைப் பற்றிக் கேட்கிறார்கள், விதிமுறைகளைப் பற்றிக் கேட்கிறார்கள், தத்துவங்கள், மற்றவை எல்லாம் பற்றிக் கேட்கிறார்கள். ஆனால் ஒருவர் கூட 'ஐம்பது வருடங்களின் தீவிர முயற்சி உங்களின் உயிருருவுக்கு ஏதாவது கொண்டு வந்துள்ளதா? அல்லது அது ஒரு டஜன் புத்தகங்களையும் உலகப் புகழையும் மட்டுமே கொண்டுவந்துள்ளதா? நீங்கள் திருப்தியடைந்துள்ளீர்களா?' என்று கேட்பதில்லை.''

ஒரு நாள் இரவு அவர் என்னிடம் சொன்னார், ''நீ என்னை மிகவும் தாமதமாகச் சந்தித்து இருக்கிறாய். எனக்கு வயதாகி விட்டது. எனது முழு வாழ்க்கையையும் நான் வீணடித்து

விட்டேன். இப்போது நான் கஷ்டப்பட்டு கற்றுக் கொண்டுள்ள அத்தனை குப்பையையும் தூக்கி எறிந்து விட்டு, மீண்டும் அதிலிருந்து, தொடக்கத்திலிருந்து தொடங்குவது மிகவும் கடினம். ஆனால் என்னால் எப்போது எல்லாம் முடிகிறதோ, அப்போதெல்லாம் நான் உன்னருகில் இருப்பதற்காக வருகிறேன். எப்போதெல்லாம் நான் உன்னருகில் இருக்கிறேனோ, அப்போதெல்லாம் கௌதமபுத்தரின் அருகில் இருந்தால் எப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாது; ஆனால் அது இப்படித் தான் இருந்திருக்க வேண்டும், இதே சுவை என்று நான் உணர்கிறேன்.

''இப்போது மாறுவது என்பதற்கு எனக்கு மிகவும் தாமதமாகி விட்டது. ஆனால் குறைந்தபட்சம் நான் இறக்கும் போதாவது ஒரு அறிஞராக இல்லாமல் ஒரு தேடுபவனாக நான் இறப்பேன். என்னால் அதை இப்பிறவியில் செய்ய முடியவில்லை. ஆனால் நீ என்னுள் ஒரு தாகத்தை உருவாக்கி விட்டாய். ஒரு வேளை நான் எனது அடுத்த பிறவியில் விதிமுறைகளின் காட்டில் வழி தவறிப் போகாமல், எனக்குள்ளே நுழைந்து பார்க்க முயற்சி செய்வேன்.''

இங்கே உங்களுக்கு ஒரு அபூர்வமான வாய்ப்பு இருக்கிறது.

இதைப் போன்ற எதுவும் இதற்குமுன்பு உலகில் இருந்ததே இல்லை. ஏனெனில் என்னிடம் எந்த பாராபட்சமும் இல்லை - நீங்கள் இங்கே ஒரு கிறிஸ்து ஆகலாம், புத்தர் ஆகலாம், மகாவீரர் ஆகலாம். ஒரு லாவோ ட்சு ஆகலாம். எனக்குள் எந்த பாராபட்சமும் கிடையாது. ஏனெனில் இவையெல்லாம் வேறு வேறு பெயர்கள் மட்டுமே என்று எனக்குத் தெரியும். இவை எல்லாவற்றிற்கும் பின்னால் ஒரே பிரபஞ்ச உணர்நிலை தான் இருக்கிறது.

எனவே உங்கள் நம்பிக்கைகளைப் பற்றிக் கவலை படாதீர்கள். அவற்றை சும்மா விட்டு விடுங்கள்.

அபயம் போதுமானது. போதுமானதைவிட அது அதிகமானது. உங்களது ஆன்மிகப் பயணத்திற்கு அது மட்டுமே போதுமான ஊட்டச் சத்து.

*அன்பிற்குரிய பகவான்,*

*எனக்குள் மிக அதிகமான கேள்விகள் இருப்பது போலத் தோன்றுகிறது. ஆனால் அவற்றுள் ஒன்றை நான் உங்களிடம் கேட்க முயலும் போது அவை எல்லாம் போய்விட்டது போலத் தோன்றுகிறது. உங்களை ஏதோ கேட்க உண்மையிலேயே நான் விரும்பினேனா என்று கூட எனக்குத் தெரியவில்லை. இருந்தும் கூட கேள்வி கேட்பதற்கான உணர்வு எஞ்சி நிற்கிறது.*

*இந்த உணர்வு எங்கிருந்து வருகிறது என்று தயவு செய்து கூறமுடியுமா?*

ஓஷோ: இது மிகவும் எளிதானது.

உங்களிடம் கேள்விகள் இல்லை. ஒரு தேடுதல் இருக்கிறது. இவற்றுக்கிடையிலான வேறுபாடு உங்களுக்குத் தெரியவில்லை.

உங்களுடைய தேடுதல் உங்களுக்குத் தெளிவாக இல்லை. அது மேகம் மூடித் தோன்றுகிறது. ஒருவேளை ஏதாவது ஒரு கேள்வி இருக்கிறது என்று நீங்கள் நினைக்கலாம். எனவே நீங்கள் பல கேள்விகளை உண்டாக்குகிறீர்கள், அவை மறைந்து விடுகின்றன. ஆனால், கேள்வியைப் போன்ற உணர்வு உங்களி டம் எஞ்சி நிற்கிறது. அது என்ன?

எல்லாக் கேள்விகளும் இலைகளைப் போன்றவை.

தேடுதல் வேரைப் போன்றது.

நீங்கள் அதிர்ஷ்டசாலி. ஏனெனில் பலர் முதலில் ஆயிரக் கணக்கான கேள்விகளைக் கேட்கின்றனர். பின்னர் ஒவ்வொன் றாக அந்த கிளைகள் மறைந்து விடுகின்றன. பின்னர் இலைகள் வருகின்றன, அதன் பின்னர் அடிமரம் வருகின்றது. இறுதியாக அவர்கள் தேடுதல் உண்மையான விஷயம் என்று தெரிந்து கொள்கின்றனர்.

உங்களிடம் வேர்கள் மட்டுமே இருப்பதால் நீங்கள் அதிர்ஷ டசாலி. ஆனால் வேர்களின் பிரச்சனை என்னவென்றால் அவை

அப்போதுமே பூமிக்கடியில் உள்ளன. எனவே அவை எங்கே உள்ளன என்று உங்களால் பார்க்க முடிவதில்லை. நீங்கள் எப்படியோ கேள்விகளை உருவாக்க முயற்சி செய்கிறீர்கள், ஆனால் அவை உங்கள் வேர்களுடன் தொடர்பு கொள்ளாமல் இருப்பதால் அவை மறைந்து விடுகின்றன.

தேடுபவருக்கு தேடுதல் தான் அதிமுக்கியமானது.

தேடுதல் என்பதற்கு, நீங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்கள் என்று பொருள். நீங்கள் அந்த உண்மையாக இருக்கவே விரும்புகிறீர்கள்.

ஒரு கேள்விதான் பதிலளிக்கப்பட விரும்புகிறது.

ஒரு தேடுதல் தானே பதிலாக விரும்புகின்றது.

கேள்விகள் பல, ஆனால் பதில் ஒன்றுதான்.

நீங்கள் ஒரு நிலைமையில் இருக்கிறீர்கள். நீங்கள் வெறுமனே தியானம் செய்தால், உங்களிடம் கேள்வி வராது, பதில் வரும். அந்த பதில் உங்களிடமிருந்து தனிப்பட்டது அல்ல. நீங்கள் தான் அந்தப் பதில்.

உங்கள் மையத்திற்குச் செல்லுங்கள். அது அங்கே உங்களுக்காக ஆயிரக்கணக்கான பிறவிகளாகக் காத்துக் கொண்டு இருக்கிறது. இனிமேலும் அதைக் காத்திருக்க வைக்காதீர்கள். சில சமயங்களில் அது கூட பொறுமையிழந்து போய்விடுவதுண்டு. அந்தப் பொறுமையற்ற நிலையில் அது கேள்விகளை உருவாக்கத் தொடங்குகிறது.

கேள்விகள் பொறுமையற்ற தன்மையையே காட்டுகின்றன.

ஆனால் உங்களது நிலைமை வெகு தெளிவாக உள்ளது. நீங்கள் எதையும் கேட்க வேண்டாம். வெறுமனே மேலும் மேலும் ஆழமாக மௌனத்திற்குள் செல்ல வேண்டும்; அப்போது அதைக் கண்டு பிடிப்பீர்கள்.

அன்பிற்குரிய பகவான்,

உங்களுடன் தொடர்பு கொள்வதற்கு முன்பு காட்மண்டு வைச் சேர்ந்த பேராசிரியர் ஜோவி ஒரு புத்தலாமாவால் ஆன்மி கத் துறையில் வழிநடத்தப்பட்டிருந்தார்.

இந்த லாமா, சிறு வயதிலேயே தனது கிராமத்தையும், குடும்பத்தையும் விட்டு விலகி நாற்பது வருடங்கள் திபெத், பர்மா, தாய்லாந்து ஆகிய இடங்களில் பயணம் செய்து உண்மையைத் தேடி தியானம் செய்து கொண்டிருந்தார். அறுப தாவது வயதில் இவர் அமைதியாகத் தனது கிராமத்துக்குத் திரும்பச் சென்று தனது குடும்பத்துடன் சேர்ந்து கொண்டு பழைய வாழ்க்கையில் ஈடுபட்டார். அவரது அருளும் அமைதி யும் பலரையும் ஈர்த்து இப்போது அவர் 'அவதார லாமா' என்று புகழ் பெற்றுள்ளார்.

பேராசிரியர் லாமாவால் பெரிதும் கவரப் பெற்று அன்பி னால் அவருக்கு உங்கள் புத்தகமான அந்தர் யாத்ராவைப் பளிசளித்தார்.

லாமாவால் இந்தியையோ அல்லது ஆங்கிலத்தையோ படிக்க முடியவில்லை. எனவே அவர் திரு ஜோஷியை சில பகுதிகளை வாசித்துக் காட்டி உங்களது படத்தையும் காட்டச் சொன்னார். உங்களது படத்தைப் பார்த்து விட்டு லாமா சொன்னார், ''பகவான் நான் தினமும் தியானத்தில் செல்லும் இடத்தில் இருந்து வருகிறார். இப்போது அவர் தனது முழு மகிமையுடன் - பதினாறு கலைகளுடன் வந்துள்ளார். இது கிருஷ்ணர் அல்லது புத்தர் அவதாரத்தில் மட்டுமே நிகழக் கூடியது. இப்போது நீங்கள் என்னிடம் வழிகாட்டுதலுக்கு வரத் தேவையில்லை. பகவானைப் பின் தொடருங்கள். அவர்தான் சரியான குரு.''

பகவான், உமது படத்திலிருந்து மட்டுமே எவ்வாறு இவ ரால் இத்தனை உண்மைகளைக் காண முடிகிறது? உங்களோடு பல காலம் தொடர்பு கொண்டுள்ள என்னைப் போன்ற சீடர்களால் ஏன் இதைப் புரிந்து கொள்ள முடிவதில்லை?

ஓஷோ: அருண், இது நெடுங்கால தொடர்பைப் பற்றியது அல்ல. இது ஆழமான உட்பார்வையைப் பற்றியது.

உங்களிடம் அந்த தியானக் கண்ணோட்டம் இல்லை. சாதாரணக் கண்கள் பார்ப்பதை மட்டுமே உங்களால் பார்க்க முடியும்.

ஆனால் ஒரு மனிதன் அதிகமாக தியானத்தில் இறங்கும் போது அவரது உணர்வுகள் மிக ஆழமாகவும் மிக உயரமாகவும் வளர்ந்து நமக்குத் தெரியாத விஷயங்களைக் கூட அவரால் பார்க்க முடிகிறது.

வாழ்க்கை என்பது நமது ஐம்புலன்களுக்கு மட்டுமே தெரிவது இல்லை.

சற்றே சிந்தித்துப் பாருங்கள்: உதாரணமாக நீங்கள் எல்லாரும் குருடாக இருந்தால் வெளிச்சம் என்று ஒன்று உண்டு என்பதையே நீங்கள் அறியாமல் இருந்திருப்பீர்கள், ஒளி உங்களைச் சுற்றிலும் இருந்த போதிலும் கூட! ஆனால், ஒளி இருப்பது மட்டுமே போதுமானது அல்ல; அதை உணர உங்களுக்குக் கண்கள் வேண்டும்.

குறைந்த பட்சம் ஐம்பதாயிரம் கிரகங்களில் உயிர் வாழ்வதற்கு சாத்தியப்பாடுகள் உள்ளன என்ற உண்மையைப் பற்றி விஞ்ஞானிகள் அக்கறை கொண்டுள்ளனர். ஒன்று மட்டும் நிச்சயம். இந்த பல்வேறு கிரகங்களிலும் உயிர் பல்வேறு விதமான வகைகளில் வளர்ச்சி பெற்றிருக்கும் - ஏனெனில் அங்கே சீதோஷ்ண நிலைமைகள் வித்தியாசமாக இருக்கும், முழு சூழ்நிலையே வித்தியாசமாக இருக்கும். சில கிரகங்களில் ஐம்புலன்களுக்கு மேற்பட்ட புலன்களைக் கொண்ட விலங்குகள் கூட இருப்பதற்கு சாத்தியப்பாடுகள் உண்டு. இப்போது அது வெறும் அனுமானம் மட்டுமே. ஆனால் அது முக்கியத்துவம் வாய்ந்தது. சாத்தியப்பாடுகள் உள்ளன.

ஏழு அல்லது எட்டுப் புலன்கள் கொண்ட உயிர்கள் சில கிரகங்களில் இருந்தால், அப்போது அவற்றால் நம்மால் உணர முடிவதை விட இரண்டு அல்லது மூன்று அதிகப்படியான

விஷயங்களை உணர முடியும். இந்த விஷயங்கள் இருக்கக் கூடும் என்று நம்மால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. ஏனெனில் கற்பனையில் கூட நம்மால் உணர முடிந்ததைத் தான் நம்மால் கற்பனை செய்ய முடியும். நம்மால் அவற்றைக் கனவு கூடக் காண முடியாது. ஏனெனில் நமது கனவுகள் வெறும் பாதிப்புகளே. உங்கள் கனவில் புதிதாக ஒன்றை உருவாக்க உங்களால் முடியாது. அங்கே பிரதிபலிக்கப்படுவதெல்லாம் ஐம்புலன்கள் மட்டுமே. எக்ஸ்ரே கதிர்கள் கண்டுபிடிக்கப்படுவ தற்கு முன்பே, நமது உடலுக்குள் புகுந்து உள் உறுப்புகளைப் படமெடுக்கக் கூடிய கதிர்கள் உண்டு என்று நமக்கு கொஞ்சம் கூட தெரியாது.

தியானத்தைப் பற்றி பல நூற்றாண்டுகளாக கற்றறிந்து கொண்டுள்ளவர்கள் பல விஷயங்களைப் பற்றி அறிந்து கொண் டுள்ளனர். ஆனால் அவர்கள் விஞ்ஞானிகளாக இல்லாத காரணத் தால் அவற்றை நிரூபித்துக் காட்ட அவர்கள் முயன்றதில்லை.

உதாரணமாக கீழை நாடுகளில், தியானத்தில் ஈடுபட்டுள்ள ஒரு மனிதனால், யாராவது ஒருவர் ஆறுமாதங்களுக்குள் இறந்து போவாரா மாட்டாரா என்று கண்டறிய முடியும் என்பது பல நூற்றாண்டுகளாக அறியப்பட்டு வந்துள்ள ஒரு விஷயம். இது மிக எளிதான விஷயம். இதற்கு தியானம் கூடத் தேவையில்லை. நீங்கள் கூட ஆறுமாதத்திற்குள் இறந்து விடுவீர்களா என்று தெரிந்து கொள்ள முடியும். உங்களது மூக்கின் நுனியை உங்களால் பார்க்க முடியாமற் போனால், இன்னும் ஆறுமாதம் தான் மீதியுள்ளது என்று அறிந்து கொள்ளலாம். ஏனெனில் ஒரு மனிதன் இறக்கும் போது அவனது கண்கள் மேலே சொருகிக் கொள்கின்றன. அது சுமார் ஆறுமாதங்களுக்கு முன்பு நிகழத்தொடங்குகிறது. இது மிகமிக மெதுவாக நிகழ்கிறது. தனது இறப்புக்கு ஆறுமாதங்கள் முன்பு அவனால் தனது மூக்கின் நுனியை காண முடியாது. அது தியானத்தைப் பற்றி, அதன் புரிதலைப் பற்றி ஏதும் அறியாத கிராமத்து மக்களுக்கே தெரிந்துள்ளது.

லாமா நாற்பது வருடங்களாக தியானம் செய்து வந்துள்ளார். அவரால் எனது படத்தில் உங்களால் காண முடியாத விஷயங் களைப் பார்க்க முடியும்.

எனக்கு இராமகிருஷ்ணரின் நினைவு வருகிறது. ஒரு ஓவி யன் அவரது படத்தை வரைந்து, அவரிடம் காட்டக் கொண்டு வந்தான். அது அவருக்குப் பிடித்திருக்கிறதா என்று அறிய வந்தான். அப்போது அவரது சீடர்களும் அங்கே கூடியிருந்தனர்.

இராமகிருஷ்ணர் அந்தப் படத்தைப் பார்த்து விட்டு அதன் காலைத் தொட்டார். அவரது சீடர்கள் விவேகானந்தரும் பிறரும் மிகவும் கூச்சமடைந்தனர். ''நமது குருவை என்ன செய்வது? இவர் செய்கின்றன காரியங்களால் நாமும் முட்டாள்களைப் போலத் தோன்றுகிறோம். இப்போது, அது அவருடைய படம், இவர் அதன் காலைத் தொடுகிறார். இவர் இதைச் செய்வார் என்று நமக்குத் தெரியாமல் போய்விட்டது; இல்லையென்றால் நாம் இவரைத் தடுத்திருக்கலாம். இப்போது இவர் அதைச் செய்து விட்டார். மக்கள் எல்லாம் சிரித்துக் கொண்டும் புன்னகைத்துக் கொண்டும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு இருக்கிறார் கள்!''

அங்கே சீடரல்லாத பலரும் இருந்தனர். அவர்கள், ''இந்த மனிதரா ஒரு முக்தி பெற்ற ஆத்மா? இவரைப் பார்த்தால் பைத்தியம் போலத் தோன்றுகிறது! ஒரு பைத்தியக்காரன் கூட தனது காலைத் தானே தொடமாட்டான். 'இது எனது படம். நான் இதன் காலைத் தொடக் கூடாது' என்று மட்டிலுமாவது அவர் தெரிந்து கொண்டிருப்பான்!'' என்றனர்.

ஓவியனும் அதிர்ச்சியடைந்தான். ஆனால் அவன் ஒரு சீடனல்ல. எனவே அவன் துணிச்சல் வரவழைத்துக் கொண்டு இராமகிருஷ்ணரிடம், ''என்னால் என் கண்களையே நம்ப முடியவில்லை. இது உங்களுடைய சொந்த உருவப்படம். நீங்கள் உங்களது சொந்தக் கால்களைத் தொடுகிறீர்கள்! இது சற்றே சங்கடமாக உள்ளது'' என்றான்.

இராமகிருஷ்ணரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. அவர் கூறினார்: ''இது எனது படம், எனக்குத் தெரியும். ஆனால் இது எனது படம் என்பதால் நான் இதன் காலைத் தொட வில்லை. நீ எனது சமாதி நிலையை இந்தப் படத்தில் படம் பிடித்துள்ளதால் நான் அதன் காலைத் தொடுகிறேன். சமாதி நிலையில் யார் இருந்தாலும் -அது என்னுடைய படமோ, அல்லது வேறு யாருடைய படமோ என்றாலும் பரவாயில்லை - அது முக்கியமல்ல. இதில் முக்கியம் என்னவென்றால், இது தன்னை உணர்ந்த ஒரு உணர்நிலையின் படம். அப்போது அதன் காலை நான் தொட வேண்டும். இதற்கு நீங்கள் எல்லாரும் ஏன் சங்கடப்படுகிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை.''

இப்போது அவர்கள் எல்லாரும் மேலும் அதிகமாக கூச்சப் பட்டனர். ''நாம் சரியான மடையர்கள். நமக்குப் புரிவதில்லை. குறைந்த பட்சம் நாம் அமைதியாகவாவது இருக்க வேண்டும். நமக்குப் புரியவில்லை என்றால் நமது உணர்ச்சிகளைக் காட்டா மல் இருப்பதே மேல். இதற்கு முன்பு யாரும் செய்யாததை இவர் செய்திருக்கிறார், ஆனால் அவரது காரணம் மிகவும் நியாயமானது.''

அருண், அந்த லாமா தனது தியானத்தை நல்லபடியாகச் செய்து கொண்டிருக்க வேண்டும்.

எனது படத்தில் அவர் பார்த்ததை அவரால் பார்க்க முடிந்தால், அது அவர் சரியான பாதையில் செல்கிறார் என்பதை யும், அவரது தியானம் மலர்களைக் கொண்டு வருகிறது என்பதையும், அவர் வீட்டிற்கு வெகு அருகில் இருக்கிறார் என்பதையும் தெளிவுபடுத்துகிறது.

*அன்பிற்குரிய பகவான்,*

*நான் 'நான் அன்பு செலுத்துகிறேன்' என்றும், 'நான் வெறுக்கிறேன்' என்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.*

*பகவான், உண்மையைச் சொல்லுங்கள்: ஏனென்றால், எனது உணர்வு அங்கே மேலே எதுவுமில்லை, அன்புமில்லை இரக்கம் கூட இல்லை என்பது தான்.*

**ஓஷோ:** நான் உன்னிடம் உண்மையை சொல்லித்தான் ஆக வேண்டுமா?

இது கொஞ்சம் கஷ்டமானது; ஏனெனில் அது எனது பழக்கமல்ல. ஆனால் உண்மை என்னவென்றால், அன்பும் இல்லை வெறுப்பும் இல்லை என்பது தான்.

அங்கே மேலே, முற்றிலும் முழுமையான அமைதிதான் உள்ளது.

